KALKI 17.11.96 ரூ. 3.00

# கல்கி




## திறமை இருக்கு; காசு இல்லையே!

• ஹோங்

இந்தப் பெண்ணைப் பாருங்கள். ஒரு சாதாரண அயல்நாட்டுப் பெண்மணி. அவ்வளவுதானே தெரிகிறது? இவருக்குள் ஓர் அலாதியான சோகம் ஒளிந்து கொண்டிருப்பதைக் கண்களில் கண்டுபிடிக்க முடிகிறதா?

Ngvyen Thi Le Hoang என்கிற (தமிழில் ஹோங் என்று வைத்துக் கொள்வோம்) இந்த வியட்நாம் நாட்டுப் பெண்மணி முப்பத்தொரு வருடங்களாக - ஒரு விநாடிகூட உறங்கியதில்லை!

இவர் சந்திக்காத மருத்துவர் இல்லை; பார்க்காத மருத்துவமுறைகளில்லை; சாப்பிடாத மருந்துகளில்லை; வேண்டாத தெய்வமில்லை. இன்னும் தூக்கம் மட்டும் வந்தபாடில்லை.



# நான் தூங்குவதில்லை... கொட்டாவிகூட விடுவதில்லை...!

நரம்புகளில் ஏதேனும் கோளாறா? மூளைச் செல்கள் பாதிப்பா? மனரீதியான பிரச்னைகள் காரணமா?

மருத்துவர்கள் விதவிதமாகப் பரிசோதித்துப் பார்த்து விட்டார்கள். காரணம் கண்டுபிடிக்க முடியவில்லை.

முதல் குழந்தை பிறந்தபோது, இரவுகளில் பலமுறை அது பாலுக்காக அழுதிருக்கிறது. அடிக்கடி எழுந்து குழந்தையைக் கவனிக்க வேண்டியிருந்தது என்றும், அப்போது போன தூக்கம் இன்றைக்கு 65 வயது ஆகிவிட்ட பின்பும் திரும்பி வர மறுக்கிறது என்றும் சொல்கிறார் ஹோங்!

"மருத்துவத்துறை எத்தனை முன்னேறி என்ன பயன்? என் தூக்கமின்மைக்கு யாருக்கும் காரணம் சொல்லத் தெரியவில்லை. ஒவ்வொருத்தர் ஒவ்வொரு யோசனை சொல்கிறார்கள். அட்வைஸ் பண்ணுகிறார்கள். 'இரவு படுக்கப் போகுமுன் மூன்று 'ஜக்' ஐஸ் வாட்டர் சாப்பிட்டுப் படு' என்கிற ஜப்பானியர் உபதேசத்திலிருந்து அலோபதி, ஹெர்பல் மருத்துவக் குறிப்புகள் வரை எத்தனையோ செய்து பார்த்தேன். பயன் பூஜ்ஜியம்தான்! எரிச்சலும் துக்கமுமாக இருக்கிறது!" என்கிறார்.

இந்த நிலையில், ஹோங்கின் பிரச்னை, மருத்துவத் துறை வல்லுநர்களுக்கு ஒரு சவாலாகப் போய், அவர்களை இரவு பகலாகத் தீவிர ஆராய்ச்சியில் ஈடுபடுத்தியிருக்கிறது!

பலவித ஆராய்ச்சிகளின் முடிவில் "முப்பத்தோரு வருடங்கள் தூங்காமலே இருப்பதா? சாத்தியமே இல்லை. இது உண்மையென்றால் இந்நேரம் அவர் இறந்திருக்க வேண்டும்!" என்கிறார் சீன பல்கலைக் கழகத்தின் மனவியல் வல்லுநர் டாக்டர் சென்-சேர்-நை.

ஆரம்பத்தில் உறக்கம் வராத இரவுகளின்



"எங்க தலைவரோட உத்தரவுப்படிதான் நான் லஞ்சம் வாங்கினேன்!"

"அப்படி என்ன உத்தரவு?"

"மக்களோட எதிர்பார்ப்பை பூர்த்தி செய் யுங்கன்னு சொன்னாரே!"

— சீர்காழி வி.ரேவதி



"என்னோட மூணு பையன்களும் ஊரை விட்டு ஓடிட்டாங்க!"

"ஏன் சார்?"

"ஒருத்தன் பைனான்ஸ் வைச்சிருந்தான். ஒருத்தன் ஒரு பொண்ணை காதலிச்சான். இன் னொருத்தன் அரசியல்வாதி. சம்மனுக்கு பயந்து ஓடிட்டான்!"

— பா.ஜெயக்குமார்



"சின்னம்மாகிட்டே போய் 'படித்ததில் பிடித்தது' எதுன்னு கேட்டது தப்பா போச்சு"

"என்ன சொன்னாங்க?"

"ஐந்நூறு ரூபாய் நோட்டுல பிரிண்ட் பண்ணி யிருக்கிற எழுத்துக்கள்தான் நான் படிச்சதிலேயே பிடிச்சதுன்னு சொல்றாங்க..."

— பழ.சேதுராமன்

கொடுமையால் மனநிலை இலேசாகப் பாதிக் கப்பட்டு, சின்னதாக ஒரு தற்கொலை முயற்சி கூடச் செய்து பார்த்திருக்கிறார் ஹோங்.

பிழைத்துவிட, பின்னால் தாமாகவே உறக்க மில்லாமல் வாழக் கற்றுக் கொண்டு விட்டதாகச் சொல்கிறார்.

எப்படி?

வீட்டு வாசலிலேயே பெட்டிக்கடை மாதிரி வைத்து, சின்னதாக வியாபாரம் செய்து வருகிற இவர், பகல் வேலைகளுக்கிடையே சில மணி நேரம் ஓய்வு, இரவு எல்லாரையும் போல நேரத்துக்குப் படுக்கைக்குப் போய் விடு பவர்தான். ஆனால் தூக்கம் தான் கிடை யாதே?

"பத்து மணி நேரம் வெறுமனே கண்ணை மூடிக்கொண்டு, கட்டைபோல் கிடக்கப் பழகிக் கொண்டு விட்டேன்" என்கிறார்.

இதற்கிடையில் முன் குறிப்பிட்ட சீனப் பேராசிரியர் சென் ஓர் அறிக்கை வெளியிட் டிருக்கிறார்.

தூங்காமல் இருப்பதில் உலக சாதனை(!) படைத்திருப்பவர் ஓர் அமெரிக்க மாணவர். 264 மணி நேரம் சேர்ந்தாற்போல உறக்கமின்றி இருந்த இந்த இளைஞரை, தீவிர பரிசோதனை, ட்ரீட்மெண்ட்டுக்குப் பிறகு பத்து மணி நேரம் தூங்க வைத்து சகஜ நிலைக்குத் திருப்பி யிருக்கிறார்கள்.

அதேபோல ஹோங் விஷயத்திலும் வெற்றி காண முடியும். ஒரே கண்டிஷன் - அவர் ட்ரீட்மெண்ட்டுக்கு ஹாங்காங் வர வேண்டும் என்கிறார் பேராசிரியர் சென்.

இது ஒருபுறமிருக்க, தற்சமயம் ஹோங் விஷயம் கேள்விப்பட்டு பல மருத்துவ ஆராய்ச்சி நிறுவனங்கள் அவரைப் பரி சோதிக்கவும் இலவச சிகிச்சை தரவும் முன் வரத் தொடங்கியிருக்கின்றன.

ஹோங் சொல்கிறார்: "நான் எங்கு வேண்டு மானாலும் வருகிறேன். எத்தனை மருத்துவர் கள் வேண்டுமானாலும் என்னை, அவர்களது ஆராய்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்ளட்டும். என் ஒரே விருப்பம் - என்னைப் போல சிரமப் படாமல் உலகில் எல்லோரும் நிம்மதியாக உறங்க வேண்டும். என்னைப் பொறுத்தவரை தூக்கம் எப்படி இருக்கும் என்றே தெரியாமல் போய்விட்டது. கொட்டாவிகூட வருவதில்லை எனக்கு. கற்பனையில்கூட என்னால் தூக் கத்தை உருவகப்படுத்திப் பார்க்க இயல வில்லை!"

— ஔரங்கசீப்

# சவால் மீசை!



**செ**ன்னை தி.நகரில் உள்ள ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸில் நுழைபவர்களின் கண்கள், அங்குள்ள ஸ்வீட் வகைகளைப் பார்த்து விரியுமுன்பே, அங்கே நிற்கிற கோவிந்தராஜின் மீசையைப் பார்த்து லேசாய் மிரளும்.

முகத்தின் ஒவ்வொரு பக்கமும் எட்டு அங்குலத்துக்குக் குத்திட்டு நிற்கும் மீசை.

"அதெப்படிங்க, இப்படி நிக்குது உங்க மீசை?"

"தினம் ஷாம்பூ போட்டு, சுத்தம் செய்து, நன்றாகத் துவட்டி விட்டு, பின் தேங்காய் எண்ணெய் போட்டு, திரித்து, முறுக்கேற்றினால், இப்படி நிற்கும்!"

பேசிக்கொண்டிருக்கும் போதே பொடிசு ஒன்றுடன் வந்த மீசையில்லாத ஒருவருக்கு, கோவிந்தராஜின் மீசையைப் பார்த்ததும் லேசாய் பொறாமை போலும்.



"ஏங்க மீசை ஒரிஜினலா?" என்று வாய் விட்டே கேட்டு விட்டார்.

"இவராவது வெறுமே கேட்டார். சில பேர், இழுத்துப் பார்ப்பார்கள். வலி உயிர் போய்விடும்" என்ற கோவிந்தராஜ், தம் மீசையின் வரலாற்றை விவரித்தார் :

"**சொ**ந்த ஊர் திருச்சி பக்கத்தில் கோவண்டாக்குடி. எனக்கு இருபது வயசிருக்கும்போது, வழக்கமாய் முடி வெட்டி விடுபவர், 'உங்க முகத்துக்கு, மீசை விட்டா, நல்லா இருக்கும்' என்று சொல்லி மீசை ஒதுக்கி விட்டார். என் மீசைக்கு இப்போது வயது பதினாறு."

"உங்களுக்குப் பிடித்த மீசை யாருடையது?"

பாரதியார்முதல் வீரப்பன் வரை யாரையாவது குறிப்பிடப் போகிறார் என எதிர்பார்த்தால், "என் அத்தை மகன் மாணிக்கத்துடைய மீசைதான். அவரு, பெரிய மீசையோட, கம்பீரமான மாடு பூட்டின வண்டியை ஓட்டிக்கிட்டு வர மாதிரி ஒரு போட்டோ வெச்சிருந்தாரு. அதைப் பார்த்ததும் நமக்கும் ஆசை வந்திடுச்சி. அந்த போட்டோவோட காப்பி ஒண்ணு கேட்டப்போ, தரமாட்டேன்னு சொல்லிட்டாரு. அதே போல ...சை வச்சி, மாடு புடிச்சிட்டு, நானும் போட்டோ புடிச்சிக்குவேன். அது மட்டுமில்லை; என் அத்தை மக– அதான் உங்க தங்கச்சியையும் கட்டிக்கிறேன் பாருங்க'ன்னு அவர்கிட்டயே சவால் விட்டேன்! அதுல ஜெயிச்சும் காட்டினேன். என் அத்தை மக அகிலம்மாளைக் கல்யாணம் கட்டிக்கிட்டேன்" பெருமையுடன் மீசையைத் தடவிக் கொண்டார்.

"என் மீசைக்காகவே, திருச்சியில் கஜப்பிரியா ஓட்டலில் வேலை கிடைத்தது. அஞ்சு வருஷம் செக்யூரிடியா வேலை பார்த்தேன். அப்புறம் கோயம்புத்தூர்ல ஸ்ரீ கிருஷ்ணாவுல வேலைக்குச் சேர்ந்தேன். மெட்ராஸ்ல கிளை திறந்தவுடன், இங்க வந்திட்டேன்."

கோவிந்தராஜின் குடும்பம் கோவண்டாக்குடியில் இருக்கிறது. இங்கே அவருக்கு ஒரே துணை அவரது மீசைதான்!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**
படம் : **யோகா**

# பணம் இன்றித் தவிக்கும் பரிதாப வீராங்கனைகள்!

டந்த உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டியின் கால் இறுதிப் பந்தயம் சென்னையில் நடந்தது. அதற்கான நுழைவுக் கட்டணம் ரூ. 150 முதல் ரூ. 1000 வரை. வந்திருந்த கூட்டத்தின் அளவு சுமார் 55,000. அதற்கும் முன்னால் 95-ம் ஆண்டு டிசம்பரில் இந்திய – இங்கிலாந்து அணியின் கடைசி ஒருநாள் போட்டிக்கான நுழைவுக் கட்டணம் ரூ. 5 முதல் ரூ. 25 வரைதான்! ஆனால், வந்த ரசிகர்கள் கூட்டம் மூவாயிரத்தைத் தாண்டவில்லை! ஏன்?....

முந்தைய ஆட்டத்தில், ஆண்கள் ஆடினார்கள். பிந்தையது பெண்கள் ஆட்டம் – இதுதான் வித்தியாசம்.

ஹாக்கியை ஓரம் கட்டி விட்டு, தேசிய அளவில் கிரிக்கெட் பிரசித்தி பெற்றிருந்தாலும், இதற்குக் கிடைத்துள்ள அங்கீகாரமும், இதில் புழங்கும் பணமும் ஆண்கள் கிரிக்கெட்டுக்கு மட்டுமே சேர்வதாக உள்ளது.

இருபது வருடங்களுக்கு முன்னாலேயே சாந்தா ரங்கஸ்வாமி, டயானா எடுல்ஜி, சுதா ஷா, சுமதி ஐயர் போன்ற பெண் கிரிக்கெட்டர்களின் பெயர்கள் மிகவும் பரிச்சயமாக இருந்தன. ஆனால் இன்று பெண்கள் கூட கிரிக்கெட் ஆடுகிறார்களா என்று கேட்கிற நிலை!

ஏன் இப்படி?

"ஆண்கள் கிரிக்கெட்டுக்கு இருக்கும் அந்தஸ்து எங்களுக்கு இல்லை. அவர்களுக்குக் கிடைக்கும், புகழ், பணம் எதுவும் பெண்கள் கிரிக்கெட்டுக்குக் கிடைப்பதில்லை" என்று வருத்தப்படுகிறார், தமிழக பெண்கள் கிரிக்கெட் சங்கத்தின் செயலாளர் மைதிலி.

"இன்றைய நிலையில், ஒரு ஒருநாள் போட்டி ஆடினால் கூட, ஆண்கள் ரூ. 96,000 வாங்குகிறார்கள். 1975-ம் ஆண்டு முதல் இன்று வரை நாங்கள் விளையாடி வந்த போதும் ஒரு பைசா கூடப் பணம் பெறவில்லை. கிரிக்கெட் ஆட வேண்டும் என்கிற ஆசையில் மட்டுமேதான் விளையாடிக் கொண்டிருக்கிறோம். அவர்கள் நிலையோடு ஒப்பிடுகையில், எங்களுக்குக் கிடைத்துள்ள அங்கீகாரம் ஏணி வைத்தால் கூட எட்டாது" என்று லலிதா கூறும்போது வருத்தப்படவே முடிகிறது.

"நாங்கள் ஒரு விஷ வட்டத்தில் மாட்டிக் கொண்டுள்ளோம். இந்நாளில் சிறிய அணிகளுடன் போட்டி வைத்தாலே நிறைய பணம் தேவைப்படுகிறது. இது எங்களிடம் இல்லை. இதனால் விளம்பரதாரர்களை நாட வேண்டியுள்ளது. ஆனால், கூட்டம் வந்தால்தானே விளம்பரதாரர்களும் ஆதரவு தருவார்கள்...? கூட்டம் வர வேண்டும் என்றாலோ அடிக்கடி போட்டிகள் நடத்தி ஆட்டத்தின் தரத்தை உயர்த்த வேண்டும். இந்தப் போட்டிகளை நடத்த, மீண்டும் பணப் பற்றாக்குறை!" என்கிறார் கடந்த இருபது வருடங்களாகத் தொடர்ந்து கிரிக்கெட் ஆடி வரும் சுதா ஷா.

இந்திய அணியில் ஆடியிருக்கும் மற்றொரு ஆட்டக்காரரான சுமதி அய்யரும் இதை ஆமோதிக்கிறார். "இதைத் தவிர, இன்னும் சில பிரச்னைகளும் உண்டு. ஆண்களின் கிரிக்கெட் சங்கங்களுக்குச் சொந்தமாக மைதானங்கள் உள்ளன. எங்கள் சங்கங்களில் யாருக்கும் இந்த வசதி இல்லை. இதனால், பயிற்சி செய்யக்கூட நாங்கள் பணம் செலவழித்து மற்றவரை நாட வேண்டியுள்ளது. பெண்கள் கிரிக்கெட் பயிற்சிக்கென

“

**1986ம் ஆண்டு முதல் 91-ம்ஆண்டு வரை ஒரு சர்வதேச பெண்கள் கிரிக்கெட் அணி கூட இந்தியா வரவில்லை. நாமும் வெளிநாடு சென்று ஆடவில்லை. சர்வதேச அளவில் ஆறு வருடங்கள் மிகப் பெரிய இடைவெளி. இதனால் இளமை இழந்து, ஆட முடியாமல் போனவர்களும், வெறுத்துப் போய் ரிடையர் ஆனவர்களும் உண்டு!**

”

• சுமதி







[illegible] என்கிறார் இவர்.

இதையும் தவிர எப்போதும் போலவே உள்ள அதிகாரிகளின் மெத்தனப் போக்கும் முட்டுக்கட்டை போடுகிறது. "1986ம் ஆண்டு முதல் 91-ம்ஆண்டு வரை ஒரு சர்வதேச பெண்கள் கிரிக்கெட் அணி கூட இந்தியா வரவில்லை. நாமும் வெளிநாடு சென்று ஆடவில்லை. சர்வதேச அளவில் ஆறு வருடங்கள் மிகப் பெரிய இடைவெளி. இதனால் இளமை இழந்து, ஆட முடியாமல் போனவர்களும், வெறுத்துப் போய் ரிடையர் ஆனவர்களும் உண்டு!" என்கிறார் சுதா.

“இளம் கிரிக்கெட் வீராங்கனைகளை உருவாக்குவதில் பெற்றோர்களும் ஆர்வம் காட்டுவதில்லை. டென்னிஸ், டேபிள் டென்னிஸ், செஸ் - இதுதான் இன்றைய பெண்களின் ஃபாஷன் விளையாட்டுகள்.

பெற்றோருக்குத் தங்களது பெண்களை கிரிக்கெட்டுக்கு அனுப்புவதில் எந்தவித ஆர்வமும் இருப்பதில்லை" என்கிறார் லலிதா.

தமிழக பெண்கள் அணிக்கு அவ்வப்போது பயிற்சியாளராக இருக்கும் தர்மலிங்கம், "பள்ளிகளுக்கும் இந்த விளையாட்டைப் பிரபலப்படுத்தாமல் இருட்டடிப்பதில் பங்கு உண்டு" என்கிறார்.

"பெண்கள் கிரிக்கெட்டினால், பள்ளிகளுக்கு ஆதாயம் எதுவும் கிடைப்பதில்லை. இதனால் பள்ளிகள், மாணவிகளை அனுப்ப மிகவும் தயங்குகிறார்கள்" என்று வருத்தப்படுகிறார்.

"பள்ளி மாணவிகளுக்கிடையே போட்டி வைப்பதற்காக சில பள்ளிகளை அணுகியபோது, மொத்தமே இரண்டு, மூன்று பள்ளிகள்தாம் முன்வந்தன" என்று கூறுகிறார், லலிதா.

"இவ்வளவு பிரச்னைகளுக் கிடையேயும், பெண்கள் கிரிக்கெட் வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது. இங்கிலாந்து அணியினர் இங்கு வந்தபோது, ஒருநாள் தொடரில் வெற்றி கண்டோம். அதற்கு முன்னால் நியூஜிலாந்தில் நடந்த இண்டர் - கான்டினெண்டல் கோப்பையை வென்றுள்ளோம்" என்று பெருமையுடன் கூறுகிறார் சுமதி.

"நாங்களும் விடுவதாக இல்லை. கீழ்மட்டத்திலிருந்து வீராங்கனைகளை உருவாக்க, பள்ளிகளுக்கும் கல்லூரி களுக்கும் மீண்டும், மீண்டும் சென்று கலந்து ஆலோசிக்கிறோம். இதனால் நல்ல மாற்றங்களை ஏற்படுத்த முடியும்" - லலிதா நம்பிக்கை தெரிவிக்கிறார்.

"இந்திய கிரிக்கெட் கன்ட்ரோல் போர்டு இன்று மிக வசதி படைத்த விளையாட்டு சங்கமாக உள்ளது. இந்நிலையில், மற்ற விளையாட்டுக் களைப் போலவே, பெண்கள் கிரிக்கெட் கன்ட்ரோல் போர்டையும் ஆண்கள் சங்கத்துடன் இணைத்து விட்டால், எங்களின் பெரிய பிரச்னை தீர்ந்து விடும். அந்தந்த மாநில சங்கங்களின் அனைத்து வசதிகளையும் உபயோகித்துக் கொள்ள முடியும்" என்கிறார் சுதா ஷா.

"ஆனால் இவ்விஷயத்தில், ஆண்கள் கிரிக்கெட் போர்ட்தான் பெருந்தன்மை யுடன் முன்வர வேண்டும்" என்கிறார் லலிதா.

இந்தியப் பெண்கள் கிரிக்கெட் சங்கம் தற்சமயம், அரசு அளிக்கும் அரிதான பண உதவியை மட்டுமே நம்பித்தான் மூச்சு விட்டுக் கொண்டிருக்கிறது. வேறு வருமான வழி அவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

இந்நிலையில், அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் இங்கே நடைபெறப் போகிற பன்னாட்டுப் பெண்கள் கிரிக்கெட் போட்டிதான் இவர்களின் 'இருப்பை' வெளிக்காட்ட உதவக்கூடிய கடைசி ஆயுதம்.

இதைச் சிறப்பாக, வெளியுலகுக்கு அறிமுகப்படுத்தும்விதமாக ஏற்பாடு செய்ய, கிரிக்கெட் கன்ட்ரோல் போர்டு என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறது என்பதில்தான் பெண்கள் கிரிக்கெட்டின் எதிர்காலமே இருக்கிறது!

**- 'பிரம்மா' ராஜு**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **யோகா**

---



சகல வசதிகளோடும் ஒரு மினி மருத்துவமனையாகவே உருவாகி இருக்கிறதாம் அந்த அறை. பிறக்கப் போகும் குழந்தைக்கு இதயப் பரிசோதனைக் கருவி, இதயத் துடிப்பைக் கண்காணிக்க ஹார்ட் மானிட்டர், இன்குபேட்டர், வெப்ப விளக்குகள் என்று கொண்டு குவித்திருக்கிறார் மடோனா! – 'பாப்' பாடகி மடோனாவேதான்! தமது பிரசவத்துக்குத் தாமே இவ்வளவு முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுத்துள்ளார்.

அந்த லாஸ் ஏஞ்சல்ஸ் மருத்துவமனையில் மடோனாவின் முன்னாள் கணவர், நடிகர் ஷீன் பென்னுக்கும் இடவசதி செய்து தரப்பட்டிருக்கிறது!

ஷீன் பென்னுடன் வீடியோ பார்த்தபடி டென்ஷனை உதற முயன்று வருகிறார் மடோனா. முன்னாள் காதலன் கூடைப் பந்தாட்ட வீரர் டென்னிஸ் ரோட்மனின் ஆட்ட கேஸட்டுகளையும் பார்க்கின்றனர் இருவரும்!

கொசுறாக ஒரு விஷயம் :
மடோனாவுக்கு வயது 38. பிறக்கப் போவது ஷீன் பென்னின் குழந்தை.

— **துணுக்கன்**

உலக அழகிப் போட்டி 'பெங்களூரில் நடைபெறும்' என்று அமிதாப்பச்சன் அறிவித்த போது, 'இத்தனை பெரிய விழாவை இந்தியாவில் - அதுவும் பெங்களூரில் நடத்தும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்திருக்கிறதே. இதனை எந்த வகையில் சீரும் சிறப்புமாக நடத்தி சாதனை புரியப் போகிறார் பார்க்கலாம்' - என்ற வகையில்தான் தம்மை உலகம் கவனிக்கும் என்றே நினைத்திருப்பார். அவர் நினைப்பு முற்றிலும் தவறாகி விட்டது. நாளொரு மேனியும் பொழுதொரு பாணியிலுமாக எதிர்ப்பு வலுத்து வருகிறது.

முதன் முதலில் மகிளா ஜாக்ரனைச் சேர்ந்த சசிகலா என்பவர் தான் அழகிப் போட்டி எதிர்ப்புக்கான பிள்ளையார் சுழியைப் போட்டவர். சில நாட்களில் பாரதிய ஜனதாவைச் சேர்ந்த பிரமிளா நேசர்கி என்ற பெண் பிரமுகரும் விவசாய



• ராணி: நம்பிக்கை

# அழகிப் போட்டி:

சங்கத்தைச் சேர்ந்த பேராசிரியர் நஞ்சுண்டசாமியும் எதிர்ப்பில் சேர்ந்தனர். இவர்களைத் தொடர்ந்து மளமள வென்று எதிர்ப்பணியில் சேருகின்ற அமைப்புக்களின் எண்ணிக்கை வளர்ந்து கொண்டே போய், இன்றைய தேதிக்கு ஐம்பத்து மூன்று அமைப்புக்கள் 'அழகிப் போட்டியை நடத்த விடமாட்டோம்' - என்ற ஒரே லட்சியத்துடன் களத்தில் இறங்கியிருக்கின்றன.

இந்த அமைப்புக்களெல்லாம் எவை? இவற்றை நடத்துவது யார்? இவ்வளவு நாட்களும் இவர்களெல்லாம் என்ன செய்து கொண்டிருந்தனர்? என்பதெல்லாம் ஒரு பெரிய புதிர். சசிகலாவின் 'மகிளா ஜாக்ரன்' அமைப்பே பெங்களூர்க்காரர்கள் அதிகம் கேள்விப்படாத பெயர்தான். இந்த அமைப்புக்களின் கூச்சலும் ஆர்ப்பாட்டங்களும் அமிதாப் கார்ப்பரேஷனைக் கலங்கடித்திருப்பது போலவே பெங்களூரிலும் கர்நாடகத்தின் இதர பாகங்களிலும் உள்ள மாதர்சங்க அமைப்புக்களையும் கலங்கடித்திருப்பதுதான் சுவாரஸ்யமான விஷயம். இத்தனை நாட்களும் பெண்களுக்காகவும், பெண் உரிமைக்காகவும் பல போராட்டங்களை நடத்தி, பல்வேறு சிரமங்களைச் சந்தித்த பெண்களின் அமைப்புக்களான விமோச்சனா, விமன்ஸ் வாய்ஸ், மானஸா, மணிணி, சக்தி, மத்யம்... போன்ற அமைப்புக்கள் இந்த எதிர்ப்புகளில் பங்கேற்கவில்லை.

சினிமா போஸ்டர்களிலிருந்து புத்தகம், பத்திரிகை என்று எங்கே பெண்களை இழிவு படுத்தும் செயலைக் கண்டாலும் உடனே பொங்கி எழுந்து, நேரடி நடவடிக்கையில் இறங்கும் அமைப்பு 'விமோச்சனா'. விமோச்சனாவைச் சேர்ந்த பெண்கள் ஓர் ஆர்ப்பாட்டத்தில் இறங்குகிறார்கள் என்றால் அரசாங்கமே எச்சரிக்கையடையும். அந்த விமோச்சனா அமைப்பே இப்போது நடைபெறும் 'கலாட்டாக்களை'க் கண்டு திகைத்துப் போய் நிற்கிறது. "இந்த ஆர்ப்பாட்டங்களும், கூச்சல்களும் விஷயத்தை உணர்ச்சிவசமுள்ளதாக ஆக்கி திசைதிருப்பி விட மட்டுமே பயன்படும். இவர்களால் உருப்படியாக ஒன்றையுமே சாதிக்க முடியாது" என்றார் விமோச்சனா அமைப்பைச் சேர்ந்த ஒரு பெண்மணி.

"பிலுபிலுவென்று புற்றீசல் போல எதிர்ப்பு அணிகள் கிளம்பினவே, இவற்றில் தொண்ணூறு சத அமைப்புக்களுக்கு உறுப்பினர்கள்

# எதிர்ப்பும் திகைப்பும்!

எவ்வளவு பேர் தெரியுமா... இரண்டு பேர் கூடக் கிடையாது" – என்று கூறினார் இன்னொரு மகளிர் அமைப்பைச் சேர்ந்த ஓர் அமைப்பாளர். "ஒன்று சொல்கிறேன். சாணியையும் தாரையும் எடுத்துக் கொண்டு போய் கோத்ரெஜ் அலுவலகத்தில் கொட்டி நிறைத்து அசிங்கப்படுத்தித் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்ததே மகளிர் அமைப்பு ஒன்று. அதைத் தலைமை ஏற்று நடத்திய பெண்மணி பிறகு என்ன செய்தார் தெரியுமா? நேராகச் சென்று தம்முடைய தொகுதியில் கார்ப்பரேஷன் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டார். அதாவது பெங்களூர் கார்ப்பரேஷன் தேர்தலில் நின்ற அவருக்கு ஒரு பப்ளிசிடி ஸ்டண்ட் அடித்து பத்திரிகையில் பெயர் வரவழைக்க வேண்டும் என்ற அவசியம் ஏற்பட்டிருக்கிறது. இதனைப் பயன்படுத்திக்கொண்டார். கடைசியில் தேர்தலில் வெற்றியாவது கிடைத்ததா என்றால் அதுவும் இல்லை" என்றார் அவர்.

ஒரு பக்கம் எதிர்ப்பாளர்களின் குரல்கள் ஓங்கி ஒலிக்கவே, அமிதாப் நிறுவனக்காரர்கள் அழகிப் போட்டியை ஆதரிக்கும் கூட்டங்களையும் கருத்தரங்குகளையும் நடத்த ஆரம்பித்தார்கள். முன்னாள் இந்திய அழகிகளையும் கன்னடத் திரையுலகப் பிரமுகர்களையும் அழைத்துக் கூட்டங்களுக்கும் பத்திரிகையாளர் சந்திப்புகளுக்கும் ஏற்பாடு செய்தார்கள். அழகிப் போட்டிக்கு ஆதரவளித்தவர்களில் மோசமான ஆதரவுக் குரலை எழுப்பியவராகக் கர்நாடக முதல்வர் ஜே.எச். படேலைத் தான் சொல்ல வேண்டும். இவருடைய 'ஆதரவு' எதிர்பார்த்ததை விடவும் மோசமான விளைவுகளைத்தான் ஏற்படுத்திற்று.

"சில பெண்கள் தங்களின் உடல் அழகை நிர்வாணமாகக் காட்ட விரும்புகிறார்கள் என்றால் பேஷாகக் காட்டட்டும். உங்களுக்கு என்ன வந்தது? அதைப் பார்க்க விரும்புகிறவர்கள் பார்த்துக் கொண்டு போகட்டும். இங்கே இந்தக் கல்லூரிப் பெண்களில் கூட நிறைய அழகிகள் இருக்கிறீர்கள். விரும்பினால் நீங்கள் கூட அழகிப் போட்டிகளில் கலந்து கொள்ளுங்கள்" – என்று அழைப்பு விடுத்தார் அவர்! புராணங்களிலுள்ள உதாரணங்களைச் சொல்லி, அங்கெல்லாம் நிர்வாணம் இல்லையா என்று முதல்வர் கேட்க ஆரம்பித்தது நிறைய பேரை முகம் சுளிக்க வைத்தது.

"இந்தப் படேலை எனக்கு நீண்ட காலமாகத் தெரியும். இவர் ஒரு செக்ஸ் மேனியாக்" – என்று சாடினார் விவசாய சங்கத் தலைவர் நஞ்சுண்டசாமி. "தம்முடைய வக்கிரமான பேச்சுக்களுக்கு புராணங்களை வம்புக்கிழுக்கிறார் இவர். அதுவும் தப்புத் தப்பான உதாரணங்களைச் சொல்கிறார். முதலில் இவர் புராணங்களை ஒழுங்காகப் படித்துத் தம்முடைய பொது அறிவை வளர்த்துக் கொள்ளட்டும்" – என்று கொந்தளித்தார் பாரதிய ஜனதாவைச் சேர்ந்த உமாபாரதி.

அழகிப் போட்டியை ஆதரித்துக் கருத்துக் கூறுபவர்களும் கோபக்குரலுடன்தான் எதிர்ப்பாளர்களைச் சாடி வருகின்றனர். "அழகிப் போட்டியால் கலாசாரம் சீரழிகிறது என்று கூக்குரலிடுபவர்கள் சீரழிக்காத கலாசாரமா? சில தென்னிந்தியப் படங்களில் கதாநாயகிகளின் தொடைகள் காட்டப்படும்போதெல்லாம் கலாசாரம் சீரழிவதில்லையா? படங்களில் எப்படி எப்படியெல்லாமோ நடித்தவர்களை முதலமைச்சர்களாகவே ஏற்றுக் கொள்ளும் மனம் படைத்த மக்கள் மத்தியிலே இதென்ன வறட்டு வாதம்?" என்கிறார் பிரபல பெண் எழுத்தாளர் ஷோபா டே! (இவர் முன்னாள் இந்திய அழகி என்பதை இங்கே கவனம் கொள்ளலாம்.)

இவையெல்லாம் ஒருபுறமிருக்க, வரப்போகும் அழகிப் போட்டி நடைபெறும் நவம்பர் 23-க்காக மிக ஆவலுடன் காத்திருப்பவர் இந்திய அழகி ராணி ஜெயராஜ் தான். உலக அழகிப் பட்டம் எப்படியும் தமக்குக் கிடைக்கும் என்று அசாத்திய நம்பிக்கையுடனிருக்கிறார் இந்தத் தமிழ்ப் பெண். இந்த நம்பிக்கைக்கு பிரத்யேகக் காரணங்களையும் வைத்திருக்கிறார். "அழகிப் போட்டி இந்தியாவில் நடைபெறுகிறது என்ற செய்தி அறிந்ததும் 'அடடே நம்முடைய நாட்டிலேயே நடைபெறுகிறதே' என்று மகிழ்ந்தேன். அடுத்து பெங்களூரில் என்று செய்தி வந்தது. பெங்களூர் நான் மாடலிங் செய்து கொண்டு, வசித்து வரும் இடம். என் மகிழ்ச்சி இரட்டிப்பானது. அடுத்து போட்டி நடைபெறும் நாள் நவம்பர் 23 என்று முடிவானது. அம்மாடியோவ்... எனக்குச் சிலிர்த்து விட்டது. ஏனெனில் அன்று தான் என்னுடைய பிறந்த நாள். அதனால் உலக அழகியாய்ப் பட்டம் சூடுவேன் என்ற நம்பிக்கை எனக்கு நிறையவே இருக்கிறது" – என்று கண்களில் ஆர்வம் மின்னச் சொல்லுகிறார், ராணி!

பெங்களூரிலிருந்து : **அமுதவன்**

# "கமலின் குறுக்கீடு இருந்தது உண்மை!"

## — டைரக்டர் கே. எஸ். ரவிகுமார் பேட்டி

**'புரியாத புதிர்' என்கிற மினிமம் பட்ஜெட் படத்தின் சுமாரான வெற்றியின் மூலம் திரையுலகுக்கு அறிமுகமாகி, படிப்படியாக வெற்றிப்படங்களைத் தந்து, ரஜினி வரைக்கும் சகல நட்சத்திரங்களையும் இயக்கிப் பார்த்து விட்டார் கே.எஸ். ரவிகுமார். இதோ, கமல் படம்! சப்தம் போடாமல் நிறைய சாதித்துவிட்ட ரவிகுமாருடன் ஒரு மினி பேட்டி:**

**"அப்படி இப்படின்னு தொடங்கி, ரஜினி படம், கமல் படம் வரை இயக்கிட்டீங்க. அதாவது தமிழ்த் திரையுலகத்திலே ஒரு ரவுண்டு வந்துட்டீங்கன்னு சொல்லலாம் இல்லையா?"**

"நீங்க வேறே. இங்கே பல ரவுண்டுகள் வந்த இயக்குனர்கள் எல்லாம் இருக்காங்க. நான் சாதாதான். எந்தத் தயாரிப்பாளருக்கும் நஷ்டம் வராமல் படங்களை நான் தொடர்ந்து இயக்கினா போதும்னுதான் நினைக்கிறேன்."

**"உங்களுடைய எந்தப் படத்தைப் பார்த்து, இம்ப்ரஸ் ஆகி கமல் உங்களுடன் அவ்வை ஷண்முகியில் இணைந்தார்?"**

"அப்படிக் குறிப்பா சொல்ல முடியாது. ஏற்கெனவே சில திரைப்பட விழாக்களில் நானும் கமலும் சந்திச்சிருக்கோம். என்னுடைய "பெரிய குடும்பம்" படத்தின் விநியோக உரிமை கூட அவர் வாங்க முயற்சி செய்து, அப்புறமா அது தட்டிப் போச்சு. ஒரு காலகட்டத்திலே கமலுடைய ஒரு படம் சரியாக போகல்லே. அப்போ என்னுடைய ஒரு படமும் சரிவை சந்திச்சது. கமல் நடிப்பதாக இருந்த அடுத்த படம் சில காரணங்களால் தள்ளிப் போச்சு. அதன் தயாரிப்பாளர்கள் என்னை இயக்குனராக வைத்து ஒரு படம் பண்ணலாமேன்னு சொல்ல, கமல் சம்மதிச்சிருக்கார். 'முத்து' படத்தை அவர் அதற்கு முன்னே பார்த்ததாகக் கேள்வி."

**"கமல் பெண் வேடம் ஏற்றிருப்பது ஒரு பரபரப்பான சமாசாரமாகவும் படத்துக்கு ஒரு பெரிய விளம்பரமாகவும் அமைந்து விட்டது. ஆனால் பரிசோதனையான சீரியஸ் ரோல்களிலேயே கமலை எதிர் பார்க்கத் தொடங்கி விட்டனர் ரசிகர்கள். சிங்காரவேலன், கலைஞன் போன்ற அவரது மேலோட்டமான படங்களை ரசிகர்கள் ஓரம் கட்டிவிட்டார்கள். இந்த நிலையில் முழு காமெடியான ஒரு கதையை கமலை வைத்து இயக்கத் துணிந்தது ஒரு வித ரிஸ்க் இல்லையா?"**

"எனக்கு அப்படிப்படவில்லை. பல கதைகளைப் பரிசீலித்த போது இது ஒரு மினிமம் கியாரண்டி கதை என்று எனக்குப் பட்டது. மகளிர் மட்டும், சதிலீலாவதி ஆகிய படங்களில் சிறிய வேடங்களில் அவர் காமெடி செய்தப்பவே மக்கள் ரசிச்சாங்க. தவிர குருதிப்புனல், இந்தியன் ஆகிய இரண்டு சீரியஸ் படங்களுக்குப் பிறகு, கமலுக்கும் அவர் ரசிகர்களுக்கும் அவ்வை ஷண்முகி ஒரு சுவையான மாறுதலா இருக்கும்னு நம்பறேன்."

**"கமலஹாசன் நடிக்கும் படங்களில், பாதியையாவது அவரேதான் இயக்கியிருப்பார். ஆக்கபூர்வமான கோணங்கள் இதில் தென்பட்டாலும் ஒரு விதத்தில் இந்த "இடையூறினால்" ஈகோ பாதிக்கப்பட்ட இயக்குனர்களும் உண்டு. அவ்வை ஷண்முகியில் உங்கள் அனுபவம் எப்படி?"**

"இந்தப் படத்திலும் கமலஹாசனின் "குறுக்கீடுகள்" உண்டு என்பதுதான் உண்மை. ஆனால் அதை Interferenceன்னு சொல்றதைவிட Involvement ன்னுதான் நினைக்கிறேன். அவ



ருடைய இமேஜுக்குத் தகுந்த மாதிரி சில காட்சிகளாவது அமையணும்னு அவர் நினைப்பதில் தப்பில்லே. இந்தக் கதாநாயக அந்தஸ்து என்பது பல சிரமங்களுக்கு நடுவே, பலவித போராட்டங்களில் ஈடுபட்டு அவர் பெற்ற வெற்றி. கமல் போன்ற முதல் தர ஹீரோக்களுக்கு - அவர்களது இமேஜ் என்பது அவர்கள் பெற்றுள்ள வளர்ச்சியைக் குறிக்கிறது. அதை மாற்றணும்னு நான் மெனக்கெடுவது அபத்தம். அவரது ரசிகர்களை மனசிலே வச்சித்தான் நான் செயல்படணும். இல்லேன்னா படம் தோத்துடும். கமலஹாசனுக்குன்னு ஒரு பெரிய ரசிகர் கூட்டமே இருக்கு. ரவிகுமாருக்கு அப்படிக் கிடையாது. என் படம் நல்லாயிருக்குன்னு தெரிஞ்சாத்தான் பார்க்க வருவாங்க."

**"இந்த ஹீரோ, இமேஜ் இதையெல்லாம் தாண்டி, 'இது ரவிகுமார் படம்னு' மட்டுமே சொல்லி பெருமைப்படும் அளவுக்கு வருங் காலத்தில் ஒரு படத்தை இயக்கும் எண்ணம் உண்டா?"**

"அப்படியெல்லாம் இல்லை. பெரிய நடிகர்கள் நடிக்கும் படங்களை இயக்கும் வாய்ப்பு தொடர்ந்து கிடைச்சுட்டு வருது. இதுவே சந்தோஷமான விஷயம்தான்."

**"அப்போ உங்களோட முழு படைப்புத் திறனும் பயன்படுத்தப்படாமல் போகும் வாய்ப்பு உண்டே?"**

"நான் ஒரு சூப்பர் டைரக்டர்னு என்னை சொல்லிக்கிட்டதில்லே. போரடிக்காமல் ஒரு படத்தை சாமர்த்தியமாக எடுக்கிறேன் என்ற ...ர் நிலைத்தாலே போதும்."

**...ரியாத புதிர் மாதிரி ஒரு பேர் சொல்லும் படத்தைக் கொடுத்த நீங்களா...!"**

"அப்படியெல்லாம் படங்களைக் கொடுத்ததே இப்போ நான் இருக்கிற மாதிரி ஒரு நிலைக்கு உயரணும்னுதான். பதினாறு வருடங்களாக உதவி டைரக்டராக இருந்து, எதிர் நீச்சல் போட்டு இந்த நிலைக்கு வந்திருக்கேன். பாரதிராஜா போல, பாலச்சந்தர் போல திறமைகள் கொண்ட ஆயிரம் பேர் உண்டு. ஆனால் அவர்களுக்கு வாய்ப்பு அமையவில்லை. நீங்கள் நினைக்கும் டைரக்டர்களுக்கு இருப்பதைப் போன்ற இமேஜ் எனக்கு இல்லாமல் இருக்கலாம். ஆனால் பாலசந்தர், பாரதிராஜாவெல்லாம் கூட தமது சொந்தத் தயாரிப்பு படங்களை இயக்கித் தர என்னை அணுகுகிறார்கள். ஆகவே, நாளைக்கு 'ரவிகுமார் மாதிரி ஆகணும்பா'ன்னு நினைக்கறவங்களும் இருப்பாங்க. அது போதும் எனக்கு."

**"இந்தியனில் ஒரு பாடல் காட்சிக்காக ஆஸ்திரேலியா. இப்போது அவ்வை ஷண்முகியில் ஒரு பாட்டுக்காக தென் ஆப்பிரிக்காவில் படப்பிடிப்பு. இதெல்லாம் எந்த அளவு அவசியம்?"**

"என் படத்தைப் பற்றி மட்டும்தான் நான் சொல்ல முடியும். அவ்வை ஷண்முகியின் பெரும்பாலான காட்சிகள் ஒரு காலனிக்குள்ளேயே நடைபெறுகின்றன. ஒரு மாறுதலுக்காக ஒரு பாட்டுக்கு மட்டும் வெளிநாட்டில் படப்பிடிப்பு நடத்தி சேர்க்கலாம் என்று முடிவு செய்தோம். அங்கும் நகரத்தைப் படம்பிடிக்கவில்லை. மலை, கடற்கரைன்னு சற்று உள்ளடங்கியிருக்கும் இயற்கை காட்சிகளையும் பழங்குடியினரையும் தான் படம் பிடிச்சோம்!"

— குல்லூ

* எம்.ஏ.எம்





# அரசரின் 'நண்பர்!'

அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் வெள்ளி விழா மிகச் சிறப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. விழா ஏற்பாடுகளில் மிகவும் தீவிரமாக முனைந்து, சுறுசுறுப்பாகவும் புத்திசாலித்தனமாகவும் செயல்பட்ட இருபத்தோரு வயது இளைஞன் ராமசாமியை இணை வேந்தரான ராஜா ஸர். முத்தையா செட்டியாருக்கு மிகவும் பிடித்து விட்டது. விழா முடிந்து சென்னைக்கு கிளம்பும்போது அந்த இளைஞனை அழைத்தார். விசாரித்தார். செட்டிநாட்டில் உள்ள ஆத்தங்குடி கிராமத்தைச் சேர்ந்த ஆறுமுகம் செட்டியாரின் மகன் தான் ராமசாமி என்று தெரிந்ததும், 'நல்ல குடும்பத்துப் பையன்' என்று மேலும் கரிசனம் உண்டானது.

"உன்னோட திறமையை இந்த கிராமத்தில் வீணாக்காதே! நீ சென்னைக்கு வந்து விடு. வாழ்க்கையில் நன்றாகவே முன்னேறலாம்" என்று அந்த இளைஞனைச் சென்னைக்கு அழைத்தார் முத்தையா செட்டியார்.

இன்று செட்டி நாட்டு அரச குடும்பத்து, கல்வி, கலாசார, ஆன்மிகப் பணிகளில் மிகவும் உதவிகரமாகச் செயல்பட்டு, கடந்த நாற்பது வருடங்களாக, அந்தக் குடும்பத்தின் நம்பிக்கைக்கு உரியவராக இருக்கும் ஏ.ஆர். ராமசாமி சென்னைக்கு வந்தது இப்படித்தான்.

"நான் அண்ணாமலையில் இண்டர் படித்திருந்தேன். சென்னைக்கு வந்ததும் வங்கியில் வேலை வாங்கித் தந்தார்கள். அரண்மனை வளாகத்துக்குள்ளேயே எனக்கு வீடும் ஒதுக்கிக் கொடுத்தார்கள். காலை அலுவலகம் செல்வதற்கு முன்பாக ராஜா அவர்களைச் சந்திப்பேன். பின்னர் மாலை முதல் இரவு வெகு நேரம் அவர்களுடன் இருப்பேன். என்னை, 'தம்பி' என்றுதான் அழைப்பார். அவருடைய நிகழ்ச்சிகளை நான்தான் ஒருமுகப்படுத்துவேன். நான் அருகே இல்லாவிட்டால் 'ராமசாமி வரட்டும்; கேட்டுக்கலாம்' என்று சொல்வார். பெரிய மனிதர்களைப் பார்க்கும்போது என்னையும் உடன் அழைத்துச் செல்வார். 'என்னோட 'நண்பர் இவர். எனக்கு உதவியாகச் சில காரியங்களைச் செய்து வருகிறார்' என்று அறிமுகப்படுத்துவார்! எந்த இடத்திலும் என்னை உதவியாளர் என்று சொன்னது கிடையாது. இரவு பன்னிரண்டு, ஒரு மணி வரை பேசிக்கொண்டு இருப்பார்.

பின்னர், அந்த இரவிலும் வெளியே வந்து நான் விடை பெற்றுச் செல்லும் வரை போர்ட்டிகோவில் நின்று கொண்டிருப்பார். அவருக்கு சேவை செய்தது எனக்குக் கிடைத்த பெரும் பேறு என்று தான் சொல்ல வேண்டும். அண்ணாமலையில் பல் மருத்துவக் கல்லூரி கட்ட ஏற்பாடுகள் நடந்தபோது என்னையும், ஆர்கிடெக்டையும் ஜெர்மனிக்கு அனுப்பி, அங்குள்ள பல் மருத்துவக் கல்லூரியை பார்த்து வரச் சொன்னார். நான் திருமணம் செய்து கொண்டதும் தொடர்ந்து அரண்மனை வளாகத்துக்குள்ளேயே வசிப்பதற்கு வீடு கொடுத்தார். 'நீயும் என் மகனைப் போலத்தான்' என்று அடிக்கடி சொல்லுவார்" என்று மனம் நெகிழ்ந்து சொன்னார் ராமசாமி.

1984-ல் ஸர் முத்தையா செட்டியார் அவர்கள் மறைந்தது செட்டிநாட்டுக் குடும்பத்துக்கு பேரிடியாக இருந்தது போலவே, ராமசாமிக்கும் இருந்தது.

அவர் இறந்ததால் ஏற்பட்ட பாதிப்பு "சுமார் இரண்டு வருட காலம் என் செயல்பாடுகளில் இருந்தது. மிகவும் கஷ்டப்பட்டு என்னை தேற்றிக் கொண்டு செட்டிநாடு அரச குடும்பத்தின் பணியில் தொடர்ந்து ஈடுபட்டேன்."

தற்சமயம் தினசரி காலை எம்.ஏ.எம் ராமசாமியைச் சந்தித்து, கல்விப் பணிகள் மற்றும் பல்வேறு அறக்கட்டளைச் சம்பந்தமாக விவாதிக்கிறார் ராமசாமி.

"தந்தையார் மிகவும் விஸ்தாரமாகப் பேசுவார்கள். ஆனால் ஏம்.ஏ.எம் அப்படிக் கிடையாது. ரொம்ப ஃபாஸ்ட். அதே சமயம் நம் கருத்தையும் கேட்டுத் தெரிந்து கொண்டு முடிவுகளை எடுக்கிறார். 'என் அப்பாவுக்கே செயலாளராக இருந்தவர்' என்று பெருமையாகச் சொல்லுவார்."

எம்.ஏ.எம். அவர்களின் ஞாபகத் திறமையை வியந்து பாராட்டுகிறார் ராமசாமி. "பிஸினஸ், விளையாட்டுத்துறை, குதிரைப் பந்தயம், ஆன்மிகப் பணிகள் என்று பலவித பணிகளிடையே சின்ன விஷயங்களைக் கூட எப்படி ஞாபகம் வைத்துக் கொள்கிறார் என்று நான் வியப்பதுண்டு. குறிப்பிட்ட நாளில் ஒருவரை நான் சந்திக்க இருக்கிறேன் என்பது அவருக்கு, தெரிந்திருக்கும். அந்த நாளில் வெளிநாட்டில் இருந்தாலும் தொலைபேசியில் 'என்ன.



• ராமசாமி

சந்தித்தீர்களா?" என்று கேட்பார். 1973ல் முதல் தடவையாக சபரிமலைக்குச் சென்றார் அவர். சன்னிதியில் நிற்கும்போது என்ன தோன்றியதோ, உடனே சென்னையிலும் இது போன்ற ஐயப்பன் கோவிலைக் கட்ட வேண்டும் என்று முடிவு செய்தார். அந்தக் கோவிலுக்காக, பல இடங்களைப் பார்த்து கடைசியில் செட்டி நாட்டு அரண்மனைக்குச் சொந்தமான இடத்திலேயே கோயில் அமைப்பதாக முடிவாயிற்று. கோயில் கட்டும் பணியில் என்னிடம் பெரும் பொறுப்புகளை ஒப்படைத்தது நான் செய்த புண்ணியம்!"

ராமசாமி குடும்பத்து நிகழ்ச்சிகள் எதுவாக இருந்தாலும் செட்டிநாட்டு அரசு குடும்பம் முழு அளவில் ஆஜராகி விடும். அதே போல ராஜா குடும்பத்து சிறு சிறு நிகழ்ச்சிகள் கூட, ராமசாமி குடும்பத்தினர் இல்லாமல் நடக்காது.

"செட்டி நாட்டு அரசரைப் பார்க்க பல பெரிய புள்ளிகள் வந்து போய்க் கொண்டு இருப்பார்கள். ஆதலால் அவர்களில் பெரும்பாலோரை எனக்கு நன்றாகவே தெரியும்! 1984ல் எம்.ஜி.ஆர். நோய்வாய்ப்பட்டு வெளிநாட்டில் சிகிச்சை எடுத்துக் கொண்டு சென்னைக்கு திரும்பியபோது எம்.ஏ.எம். அவரைச் சந்திக்கச் சென்றார். கூடவே நானும் சென்றிருந்தேன். புகைப்படக்காரர்கள் படம் எடுக்கும்போது, நான் சற்று ஒதுங்கி நின்று கொண்டேன். உடனே எம்.ஜி.ஆர். 'நீங்கள் என்ன ஒதுங்கிப் போகிறீர்கள்? பக்கத்தில் வாருங்கள்' என்று சொல்லி படம் எடுக்கச் சொன்னார். 'எம்.ஜி. ஆரே ராமசாமியை கூப்பிட்டு படம் எடுத்துக் கொண்டாரப்பா' என்று கொஞ்சம் தமாஷாகச் சொல்லிக் காட்டுவார் எம்.ஏ.எம். அவர்கள்."



• முத்தையா செட்டியார்

ஏ.ஆர்.ஆர். என்று சுருக்கமாக அழைக்கப்படும் ராமசாமியின் மணி விழாவின் போது எம்.ஏ.எம். அவர்கள் பேசியது அவரைமிகவும் உருக்கி விட்டதாம்!

"பெரிய மனிதர்கள், அரசியல்வாதிகள் என்று பலர் அந்த விசேஷத்துக்கு வந்திருந்தார்கள். அவருடைய தந்தையாரிடம் நான் பணி புரிந்ததைப் பற்றி விவரித்துக் கொண்டே வந்த எம்.ஏ.எம். கடைசியில், 'நான் இருந்தாலும் இல்லாவிட்டாலும் எங்கள் குடும்பத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை அவர் எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று பேசி விட்டார். எனக்கு ஒரு பக்கம் அதிர்ச்சி. மற்றொரு பக்கம் பெருமிதம். அந்தக் குடும்பத்து நம்பிக்கைக்கு உரியவனாக நான் செயல்பட்டு வருவதால், எனக்குப் பெருமை சேர்க்கும் விதமாக அவர் அப்படிப் பேசி இருக்கலாம். ஆனால் அதற்கும் ஒரு பெரிய மனசு வேண்டுமே. அது தான் எம்.ஏ.எம்." என்று முத்தாய்ப்பாகச் சொன்னார் ராமசாமி.

சந்திப்பு : **ப்ரியன்**

படம்: **பேஜர் கே. மூர்த்தி.**

**உடலளவில் மட்டும் இருவராக இருப்பவர்கள் எழுத்தாளர்(கள்) சுரேஷ் - பாலகிருஷ்ணன் (சுபா). பாலகிருஷ்ணன் இளமையில் பட்ட கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. எதிர்ப்புகளை மீறி, முன்னுக்கு வந்தது எப்படி? அது, அவர்களின் கதைகளைப் போலவே சுவாரஸ்யமான விஷயம்.**

# மேஜிகை உணவு முதல்

**பா**லாவின் அம்மாவுக்கு அன்பைப் பொழிய மட்டுமேதான் தெரியும். வறுமை, ஏழைமை எல்லாவற்றையும் அள வுக்கு மீறி அனுபவித்த குடும்பத்தில்



• சுபா

கிடைத்ததெல்லாம் தொழில் என்றாயிற்று. அப்பா சேலை வியாபாரியாக சைக்கிளில் மூட்டை யோடு வீதிவீதியாகப் போய் வீடுகளில் விற் பனை செய்து வந்தார். அந்தத் தொழிலில் ஏற் பட்ட கடனால் பெரும் இழப்பு!

கும்பகோணத்திலிருந்து சென்னைக்கு பாலாவின் குடும்பம் இடம்பெயர்ந்தபோது அவர் வயது ஐந்து. திருவல்லிக்கேணியில் ஒரே ஹால் குடியிருப்பு. ஐந்தாறு குடும்பங்களுக்கு ஒரே கழிப்பறை என்கிற சங்கடங்களை அம்மா அனுபவித்தது கண்டு குமுறி, மனம் பாதித்தது பாலாவுக்கு.

எழுபத்தொன்றில் பாலா எஸ்.எஸ்.எல்.சி. முடித்தார். குழல்விளக்கு, மின்விசிறி, வானொ லிப் பெட்டி எந்த ஆசையும் நிறைவேறாத காலங்கள் அவை. இரண்டு தங்கைகள். நிறைய மதிப்பெண் வாங்கியதால் விவேகானந்தாவில் புகுமுக வகுப்பில் சுலபமாகச் சேர முடிந்தது. பட்டப் படிப்பு மாநிலக் கல்லூரியில்; அதுவும் விவேகா போய் வர எண்பது காசு வேண்டுமே என்பதால் வீட்டுக்கு அருகிலேயே சேர்ந்து கொண்டார்.

கும்பகோணத்தில் இருந்தபோது அம்மா பட்டு நூலில் சிக்கெடுத்துத் 'திருவட்டம்' சுற்றிச் சேர்த்த சின்னச் சேமிப்பை முதலீடாக வைத்து வட்டிக்குக் கடன் கொடுத்துச் சம் பாதித்ததில் பாலாவின் கல்லூரிப் படிப்பு... அரைச் சம்பளச் சலுகையில்தான்!

பாலா படிப்புக்குத் தேர்ந்தெடுத்த இடம், சென்னை அரசு விருந்தினர் மாளிகை வளா கத்திலுள்ள அழகான ஆலமரத்தடிதான்.

"எனக்கு மிகவும் உற்சாகம் கிடைத்த இடம் அது. காலை மாலை வேளை களில் படிப்பதோடு கூட மகிழ மரம் உதிர்க்கும் பூக் களைப் பொறுக்கி வந்து அம்மா விடம் தருவேன். அம்மா அவற்றைத் தொடுத்துத் தங்கைகளுக்குச் சூட்டி மகிழ்வாள். நிறைய மூலிகை விளையும் தோட்டம் அது. நாய்க்கடுகு என்று ஒன்று கிடைக்கும். அதைச் சேர்த்துக் கொண்டு போனால் அம்மா சட்னி செய்து பரிமாறுவார். மூக்கரட்டை வேர் கிடைக்கும். அம்மா குழம்பு வைத்து விடுவார். எலுமிச்சம் புல் என்று ஒன்று விளையும். வெள்ளை நிறத்தில் சின்னச் சின்னதாய்ப் பூக்கும். இந்தப் புல்லை அரிந்து கொண்டு வந்து கொடுப்பேன். அரிசியோடு சேர்த்து அரைத்துத் தோசை சுட்டுத் தருவார். வெறும் வயிற்றில் சாப்பிட வேண்டும். மார்ச் சளி குணமாகும். இப்படியெல்லாம் அம்மா சொல்லி, மூலிகைகளின் மேல் ஒரு காதல் ஏற்பட்டது. அந்த ஆலமர வட்டாரத்தில் தான்" என்கிறார் பாலா.

**எ**ழுபத்தைந்தில் – பட்டப்படிப்பு முடிந்த பிறகு வேலை கிடைக்கவில்லை. வானொலி யில் இளைஞர் நிகழ்ச்சிக்குக் குரல் தேர்வுக்கு அழைப்பு வர, போனார். அவர்கள் கேட்ட முதல் கேள்வியே 'வானொலியில் நீங்கள்

விரும்பிக் கேட்கும் நிகழ்ச்சிகள்?' என்பதுதான். 'ரேடியோவே வீட்டில் கிடையாது' என்ற பாலாவின் பதில், அவர்களுக்கு வியப்பளித்தாலும் வாய்ப்புக் கொடுத்தார்கள். தற்காலிக அறிவிப்பாளராகச் சில நேரங்கள். சின்ன நிகழ்ச்சிகள் தயாரிப்பும் கிடைத்தது. அதற்கெல்லாம் நிலையம் 'டேப் ரெகார்டரை'த் தந்து உதவியதை நன்றியோடு நினைவு கூர்கிறார் பாலா.

அப்பா நிறைய புத்தகங்கள் படித்தவர். தவிரவும் இதழ்களிலிருந்து கதைப் பக்கங்களையும் வெட்டியெடுத்துச் சேர்த்து வைக்கும் வழக்கமும் அவருக்கு இருந்தது. ஆனாலும் பாலாவின் கதை எழுதுகிற ஆர்வத்தை முறித்துப் போட்டவர் இதே அப்பாதான்!

இருபதாண்டுகளுக்கு முன்னால் கல்கி நடத்திய துப்பறியும் சிறு கதைப் போட்டி ஒன்றில் மூன்றாம் பரிசு பெற்ற 'விசித்திர உறவுகள்'தான் பாலாவும் சுரேஷும் 'சுபா' என்கிற பெயரிலேயே எழுதிய முதல் சிறுகதை. ஆனால் சுரேஷ், பாலா இருவர் வீட்டிலும் கிடைத்தது திட்டுத்தான்! வேலை வெட்டி இல்லாமல் இப்படிக் கதை கிதை என்று எழுதக் கூடாது என்று தடை செய்தார்கள். ''மரியாதையாய் இனிமேல் வேலை ஒன்று கிடைத்து அதில் சேர்கின்ற வரை, கதை எழுதுவதில்லை'' என்று உறுதி எடுத்துக் கொண்டது அப்போதுதான்.

# வாடகை நூலகம் வரை...

பாலாவுக்கு வங்கியில் வேலை கிடைத்தது 1977 இல். அதுவும் பெருந்துறையில். அதன் பிறகு 'சுபா'வின் கதை 'அவர்கள் வயதுக்கு வரவில்லை' என்பது தினமணி கதிரில் வெளியானது 1979இல்! அதற்கு முந்தைய வருஷமே, சுரேஷுக்கும் வங்கியில் வேலை கிடைத்தது.

பிரியமுள்ள அம்மாவையும் தங்கைகளையும் கண்டிப்புக்குப் பெயர் போன அப்பாவையும் விட்டு விட்டுப் பெருந்துறையில் இருந்தது, எண்பது வரை. அந்தக் காலத்தில் சுரேஷின் உருவில் பாலாவைப் பார்த்து மகிழ்ந்தார் அம்மா. ''இடியாப்பம் தேங்காய்ப் பால் என்று கேட்டுக் கேட்டு அவன் விரும்புகிறதைச் செய்து தருவான் அம்மா'' என்கிறார் பாலா.

வங்கி வேலை கிடைக்கும் வரையும், அதன் பிறகும் கூட பாலாவின் குடும்பச் சூழல் மிகவும் சோதனையானதுதான். பள்ளி நாட்களில் கற்றுக் கொண்ட புத்தக பைண்டிங் வேலை, ஓரளவு உதவியது. அப்பாவின் 'தொகுப்புக்களை' பைண்ட் செய்து வைத்து 'வாடகை நூலகம்' ஒன்று நடத்தினார். இன்னொரு நண்பரையும் சேர்த்துக் கொண்டு மாதம் தொண்ணூறு ரூபாய்க்கு வார, மாத இதழ்களை வாங்கி வீடு வீடாய், வாடகைக்கு வழங்குவது! அதில் கதைப் பக்கங்கள் மட்டும்

• பாலகிருஷ்ணன்

## எறும்பார் கடிக்கிறார்!

**டெல்லியின் முக்கிய இடத்திலுள்ள 52 கடைகளை முறைகேடாக ஒதுக்கீடு செய்ததற்காக முன்பு மத்திய வீட்டு வசதி மற்றும் நகர்ப்புற அமைச்சராக இருந்த ஷீலா கவுல், அரசுக்கு 60 லட்ச ரூபாய் நஷ்டஈடு கொடுக்க வேண்டும்.**

**— உச்சநீதிமன்ற உத்தரவு**




பாலாவுக்கு உரிமை என்கிற ஏற்பாடு. 'லெண்டிங் லைப்ரரி' இப்படி வளர்ந்தது. ஒரு நண்பர் தமக்கு வைக்க இடமில்லாமல், இவர் வீட்டு முன்புறத்தில் வைத்துச் சென்ற 'டைப் மெஷின்' காலை நேரங்களில் பாலாவுக்கு வருவாய் தந்தது. நீதிமன்றக் காகிதங்கள்தாம்!

வாடகை நூலகத்தில் பாலா இருப்பது மாலை ஐந்து முதல் ஒன்பது மணி வரைதான்.

இரவு பத்து மணி முதல் ஒரு மணி வரை இந்த 'பைண்டிங் வேலை'. பகல் முழுவதும் வானொலி, மற்ற வேலைகளில் போய் விடும். பின்னால் ஒருகால கட்டத்தில் இந்த நேரமே எழுத்துக்கு உகந்ததாகவும் அமைந்து விட்டது.

பள்ளி இறுதித் தேர்வுக்கு முன்பே உறவினர் ஒருவர் வற்புறுத்தியதால் ஹிந்தியில் பிரவீண் வரை தேர்ச்சி பெற்ற பாலாவுக்கு விளையாட வாய்ப்பு இல்லை. கிரிக்கெட்டில் ஆர்வம் இருந்தாலும் விளையாடப் போனால், ஸ்டம்புக்கு, பந்துக்கு, பேட்டுக்கு என்று காசு கேட்பார்கள். 'அந்த ஆசையைக் கில்லி தாண்டில்தான் தீர்த்துக் கொண்டேன்' என்கிறார் பாலா.

எண்பதில் சென்னை வந்த பாலா, அம்மாவுடன் இருந்தது மூன்றாண்டுகள் மட்டுமே. ஒரு சர்ஜரிக்குப் பின் வீடு வந்த தாயார், தாம் வீட்டில் முடங்கிக் கிடக்கும் படி ஆகிவிட்டதே என்கிற ஆதங்கத்திலேயே இறந்து விட்டார்!

அன்றே சுரேஷின் அப்பாவும் மறைந்தார். “நாங்கள் பிரிய முடியாதவர்கள் என்பதற்கு இந்தத் துயர நிகழ்ச்சியும் வலுவூட்டியது” என்கிறார் பாலா.

அம்மாவின் மறைவுக்குச் சில நாட்கள் முன்னால்தான் 'மோனா' இதழில் சுபாவின் முதல் நெடுங்கதை வந்தது. பார்த்து மகிழ்ந்தார் அம்மா. அதற்குச் சன்மானமாக ஆயிரம் ரூபாய் வந்தபோது மகிழத்தான் அம்மா இல்லை!

திரைப்பட விமர்சனம் எழுத 'ஜய மன் மதனாக' அவதரித்தார்கள். கல்கியில் கிடைத்த இந்த வாய்ப்பில் கதைகளைத் தவிர வித்தியாசமாக 'லைட் ரீடிங்' எழுதப் பயிற்சி ஏற்பட்டது. விமர்சனத்துக்காக வாரம் நான்கு நாட்களாவது இருவரும் திரைப்பட அரங்குகளில் போய் அமர நேர்ந்த போதுதான், 'கிரைம்' கதைகள் எழுத முடியும் என்கிற நம்பிக்கை ஏற்பட்டது. அப்போதுதான் நேரத்தின் அருமை மிகவும் மிரட்டியது.

அம்மா இல்லாத நிலையில், காலை உணவு, சமையல் என்று முடித்துவிட்டு வங்கிக்குப் பறப்பது. எட்டரை மணிக்குப் போய் மூன்றரை மணிக்கு வீடு திரும்பினால் ஐந்து மணிக்குள் இரவுக்கான சமையல். திரைப்படம் போய் இரவு திரும்பியதும் பத்து மணி முதல் ஒரு மணி வரை எழுத்து என்று மிகவும் பரபரப்பான நாட்கள் அவை.

அம்மாவின் கடைசி நாட்களில் ஓர் ஐயாயிரம் ரூபாய் கிடைக்காமல் அவதிப்பட்டது ஒரு கொடுமை. அந்த அனுபவமே, எழுத்தில் ஒரு வெறி ஏற்படக் காரணமாயிற்று. “ஜோசியனைக் கேட்டேன். நீ நிறையச் சம்பாதிப்பாய், சொந்தத்தில் வீடு கட்டுவாய், ஆனால் நான் இருக்க மாட்டேன்” என்று அம்மா சொன்னாள். அவளுடைய ஒரே ஆசை சொந்தத்தில் வீடு என்பதாகவே இருந்தது. அம்மாவின் பிறந்த வீட்டுப் பெயர் ஸ்வர்ணாம்பாள். புகுந்த வீட்டில் கமலா என்று அழைத்தார்கள். “எங்கள் கூட்டுக் குடியிருப்புக்கு 'ஆத்மா' என்று பெயரிட்டிருந்தாலும், என்னுடைய வீட்டுக்குப் பெயராக 'ஸ்வர்ண கமலம்' என்பதையே ஆசியாக நினைக்கிறேன்” என்கிறார் பாலா.

தினமும் ஒரு மணி நேரம் யோகப் பயிற்சியில் ஈடுபடுகிறார் பாலா. “இது போராட்டங்களை எல்லாம் சந்தோஷமாக ஏற்றுக் கொள்ளும் பக்குவத்தை ஏற்படுத்துகிறது. ஆழ்நிலை தியானம் மாதிரியே எழுத்தும். சின்ன ஒலி கூட தியானத்தின் போது உடம்பை அதிரப் பண்ணும். அப்படியே எழுதிக் கொண்டிருக்கும்போது கேட்கும் அற்பமான ஒலி கூட உடம்புக்குப் பெரிய அதிர்ச்சியைத் தருகிறது” என்கிறார் பாலா.

**— சுப்ர. பாலன்**




1996 நவம்பர் 17
தாது கார்த்திகை 2
மலர் : 55
இதழ் : 16

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## நரசிம்மராவுக்கு ஜாமீன் மறுப்பு

**செ**யின்ட் கிட்ஸ் வழக்கில் நரசிம்மராவுக்கு ஜாமீன் மறுக்கப்பட்டுள்ளது. மாஜிஸ்திரேட்டின் இந்தத் தீர்ப்பை எதிர்த்து உயர்நீதி மன்றத்தில் மனு செய்து, ஜாமீன் பெற்றுக் கொண்டுவிட்டாலும், தலைமை மாஜிஸ்திரேட் பிரேம்குமார் வழங்கியுள்ள தீர்ப்பு நேர்மைக்கும் நீதிக்கும் அச்சமற்ற கடமையுணர்வுக்கும் எடுத்துக்காட்டு என்றே சொல்ல வேண்டும். எதிர்காலத்தில் பல சிறந்த தீர்ப்புகளுக்கு இதுவே அடிப்படையாக அமையவும்கூடும்.

"மிக மிக கவனமாக வழக்கை ஆராய்ந்தேன்" என்கிறார் நீதிபதி பிரேம்குமார். "நாட்டின் நலன் காக்கப்பட வேண்டுமானால், நீதி தழைக்க வேண்டுமானால், இவ்வழக்கில் குற்றம்சாட்டப்பட்ட நபர்களுக்கு இந்தக் கட்டத்தில் ஜாமீன் வழங்கக்கூடாது என்பதே எனது முடிவு..." என்கிறார்.

"குற்றம்சாட்டப்பட்ட சந்திராசாமி, அகர்வால் ஆகிய இருவரும் உலகம் முழுதும் பல பேருடன் தொடர்பு வைத்துள்ளவர்கள். குற்றத்துக்குத் துணை போனவரெனக் குறிப்பிடப்பட்டிருக்கும் லாரி கோப், சர்வதேச போர் ஆயுத வியாபாரி கஷோகியின் மருமகன். இவர்கள் உலகின் எந்தப் பகுதியிலிருந்தாலும் ஆதாரங்களைக் கலைத்துவிடும் அளவுக்கு அதிகார பலமும் ஆள் பலமும் உடையவர்கள்" என்றும் சுட்டிக்காட்டியுள்ளார் பிரேம் குமார்.

முன்னாள் பிரதமர் ராவ் குறித்து நீதிபதி பிரேம்குமார் சொல்லியிருப்பதை முக்கியமாக கவனிக்க வேண்டும் :




"மிக நீண்ட காலத்துக்கு அரசியல் உலகின் மையப் புள்ளியாக இருந்திருக்கிறார் நரசிம்மராவ். எனவே, தற்போது அவர் அதிகாரத்தில் இல்லாவிட்டாலும் அனைத்து அரசுத் துறை வட்டாரங்களிலும் செல்வாக்கு உடையவராகவே திகழ்கிறார். அந்த செல்வாக்கைப் பயன்படுத்தி, அவர் தமக்கெதிராக இருக்கும் ஆதாரங்களைக் கலைத்தோ, மறைத்தோ வைப்பது மிக எளிது. இதே செல்வாக்கினால், வழக்கில் ஆஜராகவுள்ள சாட்சிகளின் மனங்களையும் கலைக்க வல்லவர் நரசிம்மராவ். அவர் இத்தகைய செயல்களில் ஈடுபடுவார் என நம்புவதற்கு அதிக இடம் உள்ளது.

"காரணம், ராவ் பிரதமராக இருந்த ஐந்து ஆண்டுக் காலத்தில், சி.பி.ஐ. முதலான அமைப்புக் கள் அவருடைய கட்டுப்பாட்டில்தானே இருந்தன! அந்த ஐந்து ஆண்டுகளும் இந்த வழக்கைத் தொட்டுக்கூட பார்க்கவில்லையே நமது சி.பி.ஐ.!

"இவ்வாறு, தலைமைக்குப் பயந்து சி.பி.ஐ. நடந்து கொண்டதால் வழக்கில் எந்தவித முன்னேற்றமும் ஏற்படாமலே இருந்து விட்டது.

"இப்படி முடக்கிப் போட்டதன் காரணமாகவே வழக்கில் சமர்ப்பிக்கக்கூடிய பல முக்கியமான ஆதாரங்கள் ஏற்கெனவே 'காணாமல்' போய் விட்டன. கூடுதல் குற்றவாளிகள் எனக் குறிப் பிடப்பட்ட இருவர் இறந்தே போய்விட்டார்கள்! அந்த அளவுக்குத் தாமதமாகவும் அலட்சியமாகவும் இவ்வழக்கு கடந்த ஆட்சியின்போது கையாளப்பட்டிருக்கிறது.

"மார்ச் 1996 வரையில் சி.பி.ஐ. ஒரு சராசரி பணியாளனாக, எஜமானின் குரலுக்கு அடிபணியும் அடிமையைப் போல் நடந்து கொண்டது. வழக்கில் நரசிம்மராவுக்கும் திவாரிக்கும் இருந்த நேரடியான தொடர்பை அடியோடு மூடி மறைத்து மௌனம் சாதித்தது! இப்போது கூட இவ்விரு வரும் இந்த வழக்கில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்பதை வெளிக்கொணர்ந்தது இன்றைய அரசாங்கம் அல்ல... உச்சநீதி மன்றத்தின் கூர்மையான பார்வைதான் இவ்வுண்மையை வெட்ட வெளிச்சமாக்கியிருக்கிறது.

"புலன் விசாரணைகளை இழுத்தடித்துக் கொண்டிருந்த சி.பி.ஐ. மட்டும் மனம் வைத்திருந்தால்,




இதே உண்மைகளை வெகு காலம் முன்பே, கலபத்தில் புட்டு வைத்திருக்கலாம்.

"ஆனால், அவ்வாறு செய்வதற்குத் தடையாக இருந்தது நரசிம்மராவின் செல்வாக்குதான் என்பதில் சந்தேகமில்லை..." என்று ஜாமீன் மறுப்பதற்கான காரணங்களை ஆணித்தரமாகக் கூறியிருக்கிறார் பிரேம்குமார்.

நரசிம்மராவின் வழக்கறிஞர் ஆனந்த், தமது கட்சிக்காரர் எழுபது வயது நிரம்பிய முதியவர் என்பதால் அவரது உடல்நிலை கருதி ஜாமீன் வழங்கும்படி கேட்டிருக்கிறார்.

இந்த வேண்டுகோளையும் உறுதியாக மறுத்துள்ளார் பிரேம்குமார். "முதுமை காரணமாக, அவருக்கு மருத்துவ உதவி தொடர்ந்து கிடைக்கச் செய்யப்பட வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவரது அரசியல் நடவடிக்கைகளுக்கும் பயணங்களுக்கும் முதுமை தடையாக இல்லை என்பதையும் இந்த நீதிமன்றம் கவனித்திருக்கிறது. இந்த நடவடிக்கைகளைக் காரணம் காட்டியே நீதிமன்றத்தில் ஆஜர் ஆவதற்கு அவர் விதி விலக்குக் கேட்டிருக்கிறார் என்னும்போது, அவருக்கு உடல்நலக் குறைவு என்பதை ஏற்பதற்கில்லை. எனவே உடல்நலக் குறைவைக் காரணம் காட்டி அவர் ஜாமீன் கேட்பதே பெரிய முரண்பாடாக இருக்கிறது..."

- இவ்வாறு அச்சமின்றி தீர்ப்பளித்துள்ள நீதிபதி, இவ்வழக்கில் திவாரி, நரசிம்மராவின் பங்கு முக்கியமானது என்பதை மூடிமறைக்க அவர்களது வழக்கறிஞர்கள் முயன்று வருவதையும் கவனித்துக் கண்டித்திருக்கிறார்.

முன்னாள் பிரதமர், முன்னாள் முதல்வர் போன்ற முக்கிய புள்ளிகளைக் கைது செய்வதா, வேண்டாமா? எந்த அளவுக்கு அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கலாம் என்றெல்லாம் அதிகார வட்டாரங்கள் குழம்பிக் கொண்டிருக்கும் வேளையில், சட்டத்துக்கு முன் அனைவரும் சமம் என்று உறுதிசெய்யும் இந்த ஜாமீன் மறுப்பு தீர்ப்பு கலங்கரை விளக்கம் போல் வழிகாட்டுகிறது. தீர்ப்பை வழங்கிய நீதிபதி பிரேம்குமார் கூட அந்தக் கலங்கரை விளக்கத்தைப் போல் உயர்ந்து நிற்கிறார்!

# காங்கிரஸ் ஊழல் 5000 கோடியாமே?

● எஸ். கே. இராமசாமி, சென்னம்பட்டி.

? இந்த ஐந்தாண்டு காலத்தில் காங்கிரஸ் கட்சியின் மொத்த ஊழல் ஐந்தாயிரம் கோடியாமே...?

! சபாஷ்! சரியான போட்டி... ஜெயிக்கப் போவது ராவா? 'ஜெ'வா? என்று பார்ப்போம். மூன்றாவது இடம் லல்லுவுக்கு.

● தமிழன், நாகூர்.

? உலகத்தில் மிகவும் பிரபலமாக நீடித்து இருக்கின்றவர்கள் பெரும்பாலும் சினிமா துறை அல்லது இசைத்துறையைச் சார்ந்தவர்களாகவே இருக்கின்றனரே...?

! 'திரை' அல்லது 'மேடை' என்னும் உயர்மட்டம் கிடைப்பதால் அவர்களை எப்போதும் நிமிர்ந்தே பார்க்கிறது உலகம். சிறந்த நடிப்பில் நம்மை நாமே பார்க்க முடிகிறது; உயர்ந்த இசையோ மனத்தை நிறைத்து அமைதிப் படுத்துகிறது.

• விதிவிலக்கு



● இரா. ரூபன், கோபாலசமுத்திரம்.

? பிரதமரின் வெளிநாட்டுப் பயணம் எப்படி...?



• சபாஷ்!



• சரியான போட்டி!

! நண்டு சிண்டுகள் உள்பட 25 - 30 பேராகக் குடும்பத்தோடு போன சுற்றுலா.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி. ❑

? அரண்மனைகளாகக் கட்டிப் போட்டிருக்கிறார்களே... இந்த அம்மாவும் சின்னம்மாவும் 'சைக்கோ' வகையைச் சேர்ந்தவர்களா சார்...?

! மனநோய் - அது - இது என்று சொல்லி அவர்களைத் தண்டனையிலிருந்து தப்புவிக்க வைக்கலாம் என்று பார்க்கிறீர்களா என்ன...?

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 84.

? சமீபத்தில் தபால் தந்தி துறையினர் வேலை நிறுத்தம் செய்ததால் குவிந்து போன தபால்களை, வினியோகிக்க கணக்கப்பட்டுக் கொண்டு, சிலர் கிழித்தும் போட்டு விட்டதாகச் செய்தி வந்ததே... உண்மையா?

! செய்தி மறுக்கப்பட்டுள்ளது. அது உண்மைச் செய்தி அல்ல என்றே வேண்டிக் கொள்வோம்: அப்படி ஒருகால் உண்மை எனக் கண்டுபிடிக்கப்பட்டால், சம்பந்தப்பட்ட ஊழியர்களுக்குக் கடும் தண்டனை வழங்கப்பட வேண்டும். ஏனெனில் அவர்கள் செய்திருப்பது 90 கோடிக்கு மேற்பட்ட இந்தியர்களை ஒட்டு மொத்தமாக ஏமாற்றும் துரோகச் செயல்.

● ஆர்.கே.எஸ். சம்சுகனி,

? 'உசேன் பாய்க்கு நாளுக்கு கம்பி. சரஸ்வதி, திரௌபதி படங்களை முழு நிர்வாண மாக வரைந்திருக்க வேண்டும் அவர்...' என்று விடுதலை



• சுற்றுலா!

'அப்புடு சுப்புடு' பகுதியில் கிண்டல் செய்துள்ளார்களே?

! வீரமணியை ஆசிரியராகக் கொண்ட விடுதலைக்கு இவ்வளவு ஆபாசமாக ஓர் எண்ணமா! பெரியாரின் ஆன்மா மன்னிக்காது!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம் - 1.

? அ.தி.மு.க.வுக்கு துரோகம் செய்தவர்கள் தலைமைக் கழகத்துக்குள் நுழைய முடியாது என திருநாவுக்கரசு கூறியுள்ளாரே?

! ஜெ. செய்த ஊழல் என்னும் துரோகத்தால் தான் கட்சி இந்தப் பரிதாப நிலைக்கு வந்தது. ஆக, 'ஜெ.'வுக்குத்தான் முதல் தடை உத்தரவு போட வேண்டும்.

● க. மாரியப்பன்,
கோவை - 11.

*? 'சும்மா இருங்க! நீங்களெல்லாம் பார்க்க சகிக்கவில்லை என்பதற்காக அழகிப் போட்டியே நடத்தக்கூடாது என்று அபாண்டமா சொல்லாதீங்க...' - பீகார் முதல்வர் தம் மகளிர் அணியிடம் இப்படிப் பேசியுள்ளது பற்றி...?*









• ...நல்ல காரணம்

! ஏற்கெனவே ஒடிஸி நடன மணியிடம் வாங்கிக் கட்டிக் கொண்டார்; இருப்பினும் அநாகரிகம் தொடர்கிறது.

● என். முருகேஷ், பெருஞ்சேரி.

*? நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சித் தலைவர் பதவியிலிருந்து விலகுவதற்கு ராவ் தயக்கம் காட்டுவது ஏன்...?*

! எம்.பி.பதவிக்கு உள்ள சில உரிமைகள் அவர் மீதுள்ள வழக்குகளில் வாதாட உதவும் என்பதுதான் காரணம். அவர் விலகாவிட்டாலும், அவரை நாடாளுமன்றத்திலும் சரி; அதற்கு வெளியேயும் சரி... யாரும் மதிக்கப் போவதில்லை என்கிற நிலை உருவாகி விட்டது. கேசரியின் செல்வாக்குதான் இனி செல்லுபடியாகும். ஒப்புக்குத்தான் ராவ் தலைமை.

● ஷோபனாதாசன், நாட்டரசன்கோட்டை.

*? இன்றைய அரசியலில் சகித்துக் கொள்ள முடியாதது?*

! வாய்ப்பிருக்கும்போதே வளைத்துப் போடுவதுதான்.

● மஞ்சுதேவன், மும்பாய் - 86.

*? வண்ணக் கனவுகள் என்றால்...?*

! சாத்தியமில்லாதவை என்று அர்த்தம். கனவுகள் எப்போதும் கறுப்பு - வெள்ளையில்தான் வரும். விதிவிலக்கு ஜெயகாந்தன் - வண்ணத்தில் தமக்கு கனவுகள் வருவதாக ஒருமுறை எழுதியிருக்கிறார்.

● த.கு.பா. பட்டுதுரை, சிதம்பரம் - 1.

*? தற்போதைய சூழ்நிலையில், யாரைக் கண்டு பரிதாபப்படுகிறீர்கள்?*

! ஜெயலலிதாதான். தமது வங்கிக் கணக்கு முடக்கப்படவில்லை என அறிக்கை விட்ட அதே மூச்சில் அவ்வாறு முடக்கப்பட்டதை எதிர்த்து நீதிமன்றத்தில் மனு செய்கிறாரே...!

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

*? இலங்கையின் முன்னாள் அதிபர் ஜெயவர்த்தனா மறைவு பற்றி...*

! இறையுணர்வும் தேசபக்தியும் மிக்கவர். சிறந்த நிர்வாகி. அவர் செய்த ஒரே தவறு ராஜீவுடன் ஓர் உடன்படிக்கை செய்து இந்திய அமைதிப் படையை இலங்கைக்கு வர அழைத்ததுதான். வியட்நாம், கொரியா போன்ற நாடுகளின் முன் அனுபவங்களை அத் தருணத்தில் அவர் மறந்து போனது தான் சோகம். இந்திய ராணுவம் வந்தால், விடுதலைப் புலிகள் வாலைச் சுருட்டிக் கொள்வார்கள் என்று தப்புக் கணக்குப் போட்டார். மற்றபடி, ஸ்ரீலங்கா மக்களின் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியவராக இருந்தவர்தான்.



• தப்புக் கணக்கு



• ஜொள்ளு!

● ஜி. மாஜினி, ரெட்ஹில்ஸ்.

*? இந்திய கிரிக்கெட் அணியின் நிலைமை இவ்வளவு மோசமாகி விட்டதே?*

! தபால் ஸ்டிரைக்குக்கு முன்னால் இந்தக் கேள்வியை எழுதி அனுப்பியிருக்கிறீர்கள் போலிருக்கிறது. கிரிக்கெட் ஜாம்பவான்களான தென் ஆப்பிரிக்காவையே ஜெயித்து கோப்பையை வென்றுவிட்டோமே, ஐயா! நமது டீம் இப்போதுதான் ஒரு 'ஃபார்மு'க்கு வந்திருக்கிறதாகத் தெரிகிறது. தொடரக்கடவது! ராபின் சிங்கின் சாதனைகள் தமிழனுக்கு தனிப்பெருமை!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
பி. ஜெயப்பிரகாஷ்,
டிஎன்.ஈ.பி. குடியிருப்பு,
சர்க்கார்பதி - 642133

● சூர்ய நிலா, சேலம்.

*? 'சசிகலாவுடன் சேர்ந்துதான் சொத்து வாங்கியதாக அரசு பொய்யான பிரசாரம் செய்து வருகிறது...' என்று ஜெயலலிதா கூறுகிறாரே?*

! எப்படியும் 'ஜெ' நீதிமன்றத்தைச் சந்திக்காமல் இருக்க முடியாது. எனினும் சசியிடமிருந்து தம்மைத் தனிமைப்படுத்திக் கொண்டால் வழக்குகளின் முனை மழுங்கும் என்றும் தண்டனையின் வீரியம் குறையும் என்றும் திட்டமிடுகிறார். வழக்குகளும் அதன் முடிவுகளும் எப்படியானாலும் சசியின் கோடானு கோடி ஊழல்களுக்கெல்லாம் ஜெ.தான் பக்கபலம் என்பது மக்களுக்குப் புரியாமல் போகாது. அவர்கள் ஏற்கெனவே இருமுறை 'ஜெ'வை தண்டித்து விட்டார்கள். மறுபடியும் தண்டிப்பார்கள்!

**பை**யனுக்கு பி.எஸ்ஸி., கம்ப்யூட்டர் சயின்சில் இடம்கிடைக்க வேண்டும்.

தம் மகன் மோகனுடன், அந்தக் கல்லூரி வளாகத்தினுள் நுழைந்தார் சீதாராமன்.

மனத்திற்குள், இஷ்டதெய்வமான விநாயகர் தோன்றினார். சிதர்தேங்காய் உடைப்பதாக வேண்டிக் கொண்டார்.

வெள்ளை மாளிகையின் முகப்பு போல, பெரிய, பெரிய தூண்களுடன் காட்சியளித்தது கல்லூரியின் முன்புறத் தோற்றம்.

காரைக்குடி செட்டியார்களின் அறக் கொடையால் உருவான பெருமைமிகு கல்லூரி இது.

"மாடியிலே முதல் ஹால்."

சீதாராமன் வழிமறித்துக் கேட்டதற்கு வந்த பதில் இது.

'எங்க வீட்டுப் பிள்ளை' செட்டிங் போல மாடிப்படி, நடுவில் பிரிந்து இடதும், வலது மாய்ச் சென்றது.

வலதுபுறம் திரும்பி, மாடி வெராந்தாவில் நடக்கும்போது காற்று பிய்த்துக் கொண்டு போனது.

தங்களுக்கு முன்பே வந்து காத்திருந்த கூட்டத்தில் ஐக்கியமானார்கள் இருவரும்.

ஒருகாலத்தில் பி.காம். சீட்டுக்கு இருந்த கவர்ச்சி, இப்போது கம்ப்யூட்டருக்கு.

"டி-பேஸ், யூனிக்ஸ்...."

தமக்குப் புரியாத பாஷையில் பேசிக் கொண்டிருக்கும் இளைஞர்களை நோக்கினார் சீதாராமன்.

"எத்தனை சீட் சார் மொத்தம்?"

அருகில் அமர்ந்திருந்தவரை விசாரித்தார்.

பட்டையாய் விபூதி இட்டு, ஏதோ முணு முணுத்துக் கொண்டிருந்தவர் (ஸ்லோகம்?), 'கொஞ்சம் பொறும் ஓய்' என்றார் சைகையில்.

"அறுபது சீட்" என்றார் மற்றொருவர், நடுவில் புகுந்து.

அறுபது சீட்டுக்கு, முந்நூறு பேர் போட்டி யிடுகிறார்கள்!

**தி**டீரென சலசலப்பு. சட்டென அமைதி.

"ஹெட் ஆஃப் தி டிபார்ட்மெண்ட் போறாரு."

வளைந்த மூங்கில் கம்பு போல, லேசான கூன்முதுகுடன், நெடு நெடு உயரத்துடன், சிவப்பாய்...

'ஹெச் ஓ டி'யைக் கண்டதும் உச்சி முதல் பாதம் வரை வேர்த்துப் போனார் சீதாராமன்.

இவரா இந்தத் துறையின் தலைவர்? கடவுளே!

நிச்சயமாய் சீட் கிடைக்கப் போவதில்லை!

மோகனை பரிதாபமாய்ப் பார்த்தார்.

இங்கு, நேர்முகத் தேர்வுக்கு, விநோதமாய் மாணவனையும், கூடவே பெற்றோரையும் அழைக்கிறார்கள்.

மாணவனின் நேர்முகத் தேர்வு முடிந்ததும் பெற்றவர்களை அழைத்துப் பேசுவார்கள்.

கல்லூரியின் விதிமுறைகள், மாணவர்களின் ஒழுக்கக்கேடான நடத்தைக்குக் கிடைக்கும் தண்டனைகள் பற்றி விளக்கிச் சொல்வார்கள்.

மிலிட்டரி ஸ்டைலில் கட்டுப்பாடுகள்! எல்லாம் மாணவனின் மனத்தை ஒருமுகப் படுத்தவே என்பதால் எந்த எதிர்ப்புமில்லை இதுவரை.

கல்லூரி வளாகத்தினுள் சிகரெட் பிடித்தால் ஐம்பது ரூபாய் தண்டனை.

போன வருடம், ஹாஸ்டல் அறையில் குடித்துக் கொண்டிருந்த மாணவனை கல்லூரியை விட்டே சஸ்பெண்ட் செய்து விட்டார்களாம்.

# தண்டனை...

## கிருஷ்ணா

இந்தக் கல்லூரியில் படித்து முடித்ததும் வேலைக்கு அள்ளிக் கொண்டு போகிறார்களாம், இதனாலேயே.

**வ**ரிசையாய் கூப்பிட ஆரம்பித்தார்கள்.

'ஹெச் ஓ டி'யை எப்படி எதிர்கொள்ளப் போகிறோம் என்று பயந்து போய்க் கிடந்தார் சீதாராமன்.

போன மாதம் இவர், தமது அலுவலகத்துக்கு வந்த சம்பவம் நினைவில் ஆடியது.

வீட்டு வரைபடத்தின் அப்ரூவலுக்காக வந்திருந்தார்.

'ஸ்டேட் கவர்ன்மெண்ட்' திமிருடன் பேசினார் சீதாராமன். இரண்டாயிரம் ரூபாய் வெட்டினால் பழம் பழுக்கும் என்றார்.

வாக்குவாதம் முற்றிப் போனது.

"உன் வேலை நடந்துடுமா? நீ இந்த ஜன்மத்தில் வீடு கட்டிடுவியான்னு பாக்கறேன். என் மேலே புகாரா எழுதறே?"

இந்த ரேஞ்சில் சீதாராமன் எகிறி விட்டார். அப்போது யாருக்குத் தெரியும் இவர் இன்னாரென்று?

"அப்பா எனக்கு சீட் கிடைச்சிடும்தானே?"

டென்ஷனாய் கேட்ட மோகனைப் பார்த்து சோகையாய்ச் சிரித்தார்.

"ஹெச்.ஓ.டி. முகத்துல என்ன ஒரு அறிவுக்களை?"

ஸ்லோகம் முடிந்த வாயோடு பக்கத்து சீட் ஆள் திருவாய் மலர்ந்தார்.

உண்மைதான்!

தங்கம் தரையில் கிடந்தால் கவரிங்கோ என்று சந்தேகம் வரும். அதே, கழுத்தில் கிடந்தால் தகதகப்பாய்த் தோன்றும்.

அந்தந்த இடத்தில் அவரவரைப் பார்க்கும் போதுதான் மனிதர்களின் உண்மையான மதிப்பு தெரியவரும்.

**உ**ள்ளே போன மோகன் பத்து நிமிடத்தில் திரும்பி வந்தான்.

"பத்து கேள்விக்கும் சரியாய் பதில் சொல்லிட்டேன். சீஃப் கூட 'குட்' அப்படீன்னாரு."

சந்தோஷத்தில் அவன் குதிக்கும்போதே சீதாராமனை அழைத்தார்கள். உள்ளே போனார்.

மொத்தம் மூன்று பேர் சேரில் அமர்ந்திருந்தனர். நடுநாயகமாய் அவர்.

கல்லூரி சட்டதிட்டங்கள், மாணவனின் ஒழுக்கம் இன்னபிற சமாசாரங்களை மற்ற இருவரும் பேச, கடைசி வரை அவர் வாயையே திறக்கவில்லை.





"தீபாவளி சமயத்தில் தபால் ஆபீஸ் ஊழியர்கள் ஸ்டிரைக்கை வாபஸ் செய்தது தப்பாப் போச்சு!"

"எப்படி?"

"தீபாவளிக்குக் கடிதம் எழுதி அழைக்க முடியலைன்னு மாப்பிள்ளைகிட்டே சால்ஜாப்பு சொல்ல முடியலையே!"

– சுந்தர் அழகேசன்.



"படத்துக்கு 'பளிங்கு மாளிகை'ன்னு டைட்டில் வச்சது தப்பாப் போச்சு."

"என்னாச்சு?"

"முன்னாள் அமைச்சர்களைப் பற்றிய தெரிஞ்ச கதைதானேன்னு நினைச்சு யாருமே தியேட்டர் பக்கம் வராமல் வச்சிட்டாங்களே!"

– சீர்காழி வி. ரேவதி

● தேனிக்கு அருகே உள்ள பழனிசெட்டி என்ற ஊரில் போலீஸ் சப்–இன்ஸ்பெக்டர் முருகேசன் மோட்டார் சைக்கிளில் வந்து கொண்டிருந்தபோது விபத்துக்குள்ளாகி மரணமடைந்து விட்டார். அந்த விபத்து பற்றி தமிழகத்தின் பிரபல நாளிதழ்களில் வந்துள்ள செய்திகள் பற்றிய விபரத்தை இங்கே தந்திருக்கிறேன்.

"போலீஸ் சப்–இன்ஸ்பெக்டரின் மோட்டார் சைக்கிள் மீது லாரி உரசி தூக்கி வீசப்பட்டு மண்டை உடைந்து சாவு!"

– 22.10.96 "தினத்தந்தி."

"ரோட்டின் குறுக்கே சென்ற நாயைக் காப்பாற்ற முயன்ற போலீஸ் எஸ்.ஐ. பலி!"

– 22.10.96 "தினமலர்"

"மோட்டார் சைக்கிளில் சென்ற சப்–இன்ஸ்பெக்டர் வேகத் தடையில் சிக்கி தூக்கி வீசப்பட்டு மரணம்!"

– 22.10.96 "தினகரன்"

இதற்காகத்தானோ என்னவோ, வள்ளுவர் "எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்று கூறினார்?"

தகவல் : எஸ். சையது முகமது.

தம்மையே ஊடுருவிப் பார்த்த அவர் கண்களில், கோபம் பளிச்சிடுவதாய்ப் பட்டது சீதாராமனுக்கு. கோபம் வரத்தானே செய்யும்?

அடுத்த ஒரு மணி நேரத்தில் 'செலக்ஷன் லிஸ்ட்' நோட்டீஸ் போர்டில் ஒட்டப்பட்டது.

நம்பிக்கையில்லாமல் பெயரைத் தேடினார்.

ஆச்சர்யம்! மோகன் தேர்வாகி விட்டான்.

முகமெல்லாம் பூரிப்பாய் நின்ற மகனை நோக்கியவர் மனத்தில் நெருடல்.

"மோகன் இங்கேயே இரு! வந்துடறேன்."

அவரைத் தேடிச் சென்றார் சீதாராமன். மாடியில் வலது கோடியில் அவர் அறை.

"என்ன?" என்றார் ஹெச்.ஓ.டி. முகத்தில் கரத்தில்லாமல்.

சீதாராமனுக்கு எப்படி தமது நன்றியைச் சொல்வதென்று புரியவில்லை.

"நான்... எனக்கு... ரியலி யு ஆர் கிரேட் சார்..."

குரல் தழுதழுக்கச் சொன்னார்.

அவர் எதுவும் பேசாமல் தலையைத் திருப்பிக் கொண்டார்.

"என் மகன் தேர்வானதை என்னாலே நம்ப முடியலே. உங்க முன்னாடி நிற்கவே எனக்கு அருகதையில்லை."

"இங்கே 'மெரிட்' மட்டும்தான் பேசும். வேற எதையும் நான் பார்க்க மாட்டேன். ஏன்னா, இது மாணவர்களோட வாழ்க்கைப் பிரச்னை."

கம்பீரமாய்க் கூறியவரைப் பார்க்கக் கண் கூசியது சீதாராமனுக்கு.

அவரின் பார்வை பட்டு, தம் மனசுக்குள் ஏதோ மாற்றம் நிகழ்வதை உணர்ந்தார்.

"வரேன் சார். இப்போது முதல் நான் புது மனுஷனாயிட்டேன்."

கைகூப்பி வணங்கிவிட்டு வெளியே வந்தார்.

"யார் சார் இது?"

ஹெச்.ஓ.டி.யின் உதவியாளர் கேட்டார், சீதாராமன் நகர்ந்ததும்.

"தெரியலே. வயசாயிட்டதுனாலே ஞாபக மறதி அதிகமாயிடுச்சு" என்றார் அவர் புன்சிரிப்புடன்.

**ஸ்ரீ**காந்த் என்றதும் அவரது பிரசித்தி பெற்ற சிக்ஸரும் ஃபோரும் மூக்குறுஞ்சலும் கவாஸ்கர் உள்ளிட்ட கிரிக்கெட்டர்களைப் பற்றி 'அவன், இவன்' என்று தோழமை கலந்த உரிமையுடன் அவர் அளித்த டீவி பேட்டி களும் உடனே ஞாபகம் வரும்.

ஸ்ரீகாந்த் இப்போது கிரிக்கெட்டிலிருந்து மட்டுமல்ல; சென்னையிலிருந்தும் சற்றுத் தள்ளி இருக்கிறார். மகாபலிபுரம் சாலையில் கடற்கரை ஓரமாக – நீலாங்கரையில்.

ஸ்ரீகாந்த் இன்று தொழிலதிபர். துணி ஏற்றுமதி, தோல் வியாபாரம், மின்சார ஸ்விட்ச் – கியர் உற்பத்தி இந்த மாதிரி சில தொழில் பண்ணிக் கொண்டிருக்கிறார். வீட்டுக்கு முன் புறம் தோட்டம் வைத்து, "அங்கே தண்ணி பாய்ச்சு!" "இங்கே புல்லை சரியா வெட்டு!" என்று பணியாட்களை வேலை வாங்கிக் கொண்டிருக்கிறார் சமயம் கிடைக்கும் போது.

கிரிக்கெட்டிலிருந்து விலகியது பற்றி லேசான வருத்தம் இருக்கிறது. ஆனாலும், "என்றாவது ஒரு நாள் விலகித்தானே ஆக வேண்டும்?" – யதார்த்தமாகக் கேட்கிறார்.

• ஸ்ரீகாந்த்



• ஸ்ரீகாந்த், மனைவி குழந்தை களுடன்

# சுதந்தரமான பாட்டி!

"கிரிக்கெட்டிலிருந்து ஓய்வு பெறுவதென்பது இவர் திடீர் என்று எடுத்த முடிவு. பத்திரிகை களில் வெளிவருவதற்கு முதல் நான்தான் இவரது அப்பாவிடமே தகவல் சொன்னார். பிறகு, என்னிடம். முதலில் நான் எந்த ரியாக் ஷனும் காட்டவில்லை. ஆனால் மிக வருத்த மாக இருந்தது. ஒரு கிரிக்கெட் வீரர் என்கிற

— இந்த வாரம் ஸ்ரீகாந்த்

பிரபலங்களின் குடும்பங்கள்



- ஐந்தில் வளைந்து ஐம்பதிலும் வளைந்தான் சிவகாசிச் சிறுவன்.

- இலவச வேட்டி வழங்கும் விழாவில் கட்டிய வேட்டியும் காணாமல் போனது.

- இளமையில் கல். அவ்வை சொன்னபடி உடைக்கிறான்!

- கரையில் நடப்பது காணப்பிடிக்காமல் திரும்பிப் போனது அலை.

— பா. ஜகந்நாதன்

கோணத்தில் இவரை மிகவும் ரசித்திருக்கிறேன். அந்த எக்ஸைட்மென்ட்டெல்லாம் இனி இல்லை!" என்று ஏக்கப் பெருமூச்சு விடும் திருமதி ஸ்ரீகாந்தின் பெயர் ஸ்ரீவித்யா.

பள்ளி இறுதி வகுப்பிலேயே திருமணம் நிச்சயமாகி விட, படிப்பு தடைபட்டிருக்கிறது இவருக்கு. பிறகு நப்பாஸையில் கரஸ்பாண்டென்ஸில் பி.ஏ. சேர்ந்தும், தொடர முடியாமல் ஆகிவிட்டிருக்கிறது. அப்புறம் டெய்லரிங்... இருக்கவே இருக்கிறார்கள் இரண்டு குழந்தைகள்.

"ஸ்ரீகாந்த் மிக ஆதரவான கணவர். எத்தனை மோசமான பாதிப்புகள் ஏற்பட்டாலும் நிலைகுலையாதவர். குழந்தைகள் மீதும் என் மீதும் அதிகப் பிரியம் உண்டு. ஆனால் உணர்வுகளை வெளிப்படுத்தத் தெரியாது" என்று சர்ட்டிஃபிகேட் கொடுக்கிறார்.

அது சரி. இவர் எப்படி?

"மிக எளிமையானவள். பொறாமை கிடையாது. கிரிக்கெட்டிலும் சரி; இப்போதைய வியாபாரத்திலும் சரி – எனக்கு சோதனைகள் வரும்போதெல்லாம் நிறைய ஊக்கம் தருவாள். எனக்காக பூஜையெல்லாம் நிறைய செய்வாள்." – இது ஸ்ரீகாந்த்.

மைதானத்தில் நுழைந்ததும் ஸ்ரீகாந்த் அண்ணாந்து பார்க்கும் அவரது ஆதர்சக் கடவுள் பெயர்தான் அவர் முதல் மகனுக்கு – ஆதித்யா. வயது பன்னிரெண்டு. முதலில் டென்னிஸ் ஆடிக் கொண்டிருந்தவன், இப்போது கிரிக்கெட்டுக்கு வந்திருக்கிறான். 'தமிழ்நாடு அண்டர் – 13' பிரிவில் ஆடுகிற அளவுக்கு முன்னேறியிருக்கிறான்.

"அடுத்தவன் அநிருத்தா (9) ரொம்ப ஷார்ப். ரெண்டு பேரையும் நான் படிச்ச வித்யா மந்திர்லதான் சேர்த்திருக்கிறேன்" என்கிறார் ஸ்ரீகாந்த்.

பையன்களின் படிப்பு விஷயத்திலிருந்து வீட்டு விவகாரங்கள் வரை அத்தனையையும் பார்த்துக் கொள்வது ஸ்ரீகாந்தின் மனைவிதான்.

"அவ்வப்போது செக் தந்துவிடுவதுதான் என் பணி!" என்கிற ஸ்ரீகாந்துக்கு உணவு விஷயத்தில் கட்டுப்பாடுகளிலெல்லாம் நம்பிக்கை இல்லை. எண்ணெய்ப் பலகாரங்கள் மிக இஷ்டம். இப்போது மட்டுமல்ல; கிரிக்கெட் ஆடிய காலத்திலும்!

முன்பு கூட்டுக் குடும்பமாக வாழ்ந்த ஸ்ரீகாந்த், இப்போது மனைவி குழந்தைகளுடன் மட்டும்தான் – இங்கே நீலாங்கரையில்.

பெற்றோர் பெசன்ட் நகரில்தான், எப்போதும் போல.

ஏன்?

"குறிப்பிட்ட காரணம் ஏதுமில்லை. அப்பா சுதந்தரமானவர். இதைச் சொல்கிறேனே... என் பாட்டி – அப்பாவின் அம்மா – என் அப்பாவை விட மிக சுதந்தர விரும்பி. சி.ஐ.டி. நகரில் தனியாக ஒரு வீட்டில்தான் தானே சமைத்து, சாப்பிட்டுக் கொண்டு வசிக்கிறார்!"

– இப்படிச் சொன்னாலும் குடும்பம் என்கிற நிறுவனத்தின் மேல் ஏராள நம்பிக்கை இருக்கிறது ஸ்ரீகாந்துக்கு.

"ஒரு மனிதனுக்கு, அவன் குடும்பம் மூலம் நிம்மதி கிடைக்காவிட்டால், வேறு எத்தனை வெற்றிகளைக் குவித்தாலும் வாழ்க்கை மகிழ்ச்சியாக இருக்காது!" என்கிறார் உறுதியுடன்.

— அருண்சரண்யா

படங்கள் : ஸ்ரீஹரி



• ஸ்வப்னா

# "சேவை பேசுகிற அழகிகள் சினிமா சான்ஸுக்குத்தானே அலைகிறார்கள்?"

**ஸ்**வப்னா திவாரி. ஒரிஸ்ஸா மாநிலம் கட்டாக் நகரின் கூடுதல் போலீஸ் சூப்ரின்டென்டென்ட். தைரியத்துக்கும், நேர்மைக்கும் பெயர் போன இந்த இளம் பெண் அதிகாரியை உள்ளூர்க்காரர்கள் 'ஒரிஸாவின் கிரண்பேடி' என்று குறிப்பிடுகிறார்கள். ஆனால் ஸ்வப்னா திவாரியோ, "நான் பெண் என்பதால் எனக்குப் பப்ளிசிடி கிடைக்கிறது; என்னுடைய சக ஆண் அதிகாரிகளும் என்னைப் போலவே கடமையுணர்வுடன் பணியாற்றினாலும், பத்திரிகைகளின் கண்ணில் படுவதில்லை" என்று கூறுகிறார். இவர் ராஜஸ்தான் மாநிலத்தைச் சேர்ந்தவர்.

பி.ஏ. (பொலிடிகல் சயின்ஸ்) முடித்து விட்டு, எம்.பி.ஏ படித்தவர் ஸ்வப்னா. அதன்பின் தனியார் கம்பெனியொன்றில் எக்ஸிக்யூடிவாகச் சேர்ந்தார். அடுத்து தம் நெடுநாளைய நண்பரான சச்சின் வியாஸைத் திருமணம் செய்து கொண்டார்.

தனியார் துறையில் பணிபுரிந்து கொண்டிருந்த மனைவியை, சிவில் சர்வீஸ் தேர்வு எழுதும்படித் தூண்டியதே சச்சின்தான். அவர் அளித்த ஊக்குவிப்பில் ஸ்வப்னா, ஐ.பி.எஸ்.தேறி விட்டார்.

"ஐ.பி.எஸ். அனுபவம் எப்படி இருக்கிறது?"

"தண்ணியில்லாத காட்டுக்கு மாற்றி விடுவார்களோ என்ற பயத்தை மட்டும் விட்டு ஒழித்து விட்டால், ஒரு ஐ.பி.எஸ். அதிகாரி, யாருக்கும் பயப்படாமல், நேர்மையாகப் பணியாற்ற முடியும். நாம் வளைந்து கொடுக்க மாட்டோம் என்பதை புரிந்து கொண்டு விட்டால் அரசியல்வாதிகள், நம் விஷயத்தில் மூக்கை நுழைக்கத் தயங்குவார்கள். லஞ்சம் தான், லஞ்சம் பெருக வழிகோலுகிறது. போலீஸ் துறையிலும், லஞ்சம் புரையோடி விட்ட ஒரு விஷயம் என்பதை முதலில் ஒப்புக் கொள்ள தைரியம் வேண்டும். அதன்பின்தான் அதை ஒழிக்கச் சாத்தியமுண்டு. காவல்துறை உயர் பதவிகளுக்குப் பணி நியமனங்கள், ஒரு செலக்ஷன் கமிட்டி மூலம் நடைபெற வேண்டும் என்ற போலீஸ் கமிஷன் சிபாரிசு உடனடியாய்ச் செயல்படுத்தப்பட வேண்டும்" என்கிறார்.

பணியில் மறக்க முடியாத அனுபவங்களாக ஸ்வப்னா சொல்பவை: "ஜாலேஸ்வர் காவல் நிலையத்தில், காவல் நிலைய அதிகாரிகள் இரண்டு பேரும் குடித்துக் கொண்டிருப்பதைப் பிடித்து, நடவடிக்கை எடுத்தபோதுதான் அரசியல் தரப்பிலிருந்தும், மேலதிகாரிகள் தரப்பிலிருந்தும் எவ்வளவு முட்டுக்கட்டை! ஆனால், அனைத்தையும் மீறி அவர்கள் இருவரையும் சஸ்பெண்டு செய்தேன்.

"இன்னொரு சமயம். ஒரு ஹரிஜன பெண் கற்பழிப்பு சம்பந்தமான வழக்கை ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டரும், இன்னொரு அதிகாரியும் அமுக்கிவிட முயன்றபோது, அவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுத்தேன்"

**ஸ்**வப்னா திவாரியின் கருத்துக்கள் முற்போக்கானவை. "ஒரு வி.ஐ.பி. வந்தால், ஏன் ஒரு பெண் அலங்காரமாய், பூங்கொத்து கொடுத்து வரவேற்க வேண்டும்? ஆண்கூட அதைச் செய்யலாமே? பொது இடங்களில் மட்டுமில்லை; போலீஸ் அகாடமியில்கூட இதே கதைதான்" என்று கேள்வி எழுப்புகிறார்.

"அழகுப் போட்டிகளில் வென்றதும் அனாதை ஆசிரம சேவை என்றெல்லாம் பேசுகிற அழகிகள் இறுதியில் சினிமா சான்ஸுக்குத்தானே அலைகிறார்கள்?" என்று கோபமும் படுகிறார்.

**— கௌதம் ராம்**



ஹ [illegible] யும் கலந்த மெல்லிய வாசனை சுகன்யாவை எழுப்பியது. டாக்டர் ஷ்யாமளா வெள்ளையில் சிறு பூக்கள் போட்டு, மொட மொடத்த வாயில் சேலையும், உடலை இறுக்காத சௌகரியமான ரவிக்கையுமாகப் பார்க்கும் போதே தெம்பூட்டினார்.

"ஹவ் ஆர் யூ?" ஜில்லென்று டாக்டரின் கை நெற்றியில் பதிந்த போது ஏற்பட்ட இலேசான அசௌகரியத்தைப் பொறுத்துக் கொண்டு பதில் சொன்னாள் சுகன்யா.

"ஐ'ம் ஓகே. எப்போ வீட்டுக்குப் போகலாம் டாக்டர்...?"

"எப்போ வேணா போகலாம் சுகன்யா-பயப்படற மாதிரி எதுவும் இல்லை. டெம்பரசர் நார்மலாயிருக்கு. ப்ளீடிங் அதிகப்படியாக இல்லை... இப்பவே வேணாலும் கிளம்பலாம்... மிஸ்டர் ராமநாதன், நீங்க ரொம்ப அதிர்ஷ்டக்காரர். உங்கள் மருமகளைப் போல தைரியமான பெண்கள் இருக்கறது அபூர்வம். இந்த [illegible] எழுந்து ரகளை பண்ணிடுவாங்க. அவங்களை சமாதானம் பண்றதுக்குள்ளேயே போதும் போதும்னு ஆயிடும். சுகன்யாவை டிஸ்சார்ஜ் பண்ணிடறேன். எதுக்கும் ஒரு மாசம் கொஞ்சம் ஓய்வா இருக்கட்டும். உங்கள் மகன் எப்போ திரும்பி வரார்?"

"எப்படியும் இன்னைக்கு இல்லைன்னா நாளைக்குக் கட்டாயம் வந்துடுவான்... தகவல் கொடுத்திருக்கோம்..."

"அவர் வந்த பிறகும் தொடர்ந்து ஓய்வா இருக்கணும் சுகன்யா. இன்னும் இரண்டு மாசத்துக்குக் கர்ப்பமாகாம இருக்கறது நல்லது. சில பரிசோதனைகள் பண்ணணும்... ஒரு வாரம் கழிச்சு திரும்பவும் அழைச்சுக்கிட்டு வாங்க..."

டிஸ்சார்ஜ் ஸ்லிப் எழுதிக் கொடுத்து விட்டார் டாக்டர் ஷ்யாமளா.

அவர் அடுத்த பேஷண்ட் நோக்கிப் போனதும், சுகன்யா எழ முற்பட்டாள்.

"எங்கம்மா இப்ப எழுந்துக்கறே...? நான்

போய் ரிசப்ஷன்ல பில்லை செட்டில் பண்ணிட்டு வரேன்... அது வரைக்கும் படுத்துண்டிரு..''

''இல்லைப்பா... இந்த சாமானெல்லாம் எடுத்து வைக்கறேன்...''

''நீ பேசாம படு...'' அவள் தோள்களைக் கண்டிப்புடன் அழுத்தி, படுக்க வைத்து விட்டார் ராமநாதன்.

அடுத்திருந்த பாத்ரூமில் நர்ஸ் அடுக்கி வைத்திருந்த டூத் பிரஷ், சோப், முதலான டாய்லெட் சாதனங்கள் தொடங்கி அவள் மாற்றுடை, மருந்துகள், ஹார்லிக்ஸ் பாட்டில் என ஒவ்வொன்றாக, தாமே எடுத்துக் கூடையில் அடுக்கினார்.

பில் பணம் கொடுத்துவிட்டு அவர் அழைத்து வந்த டாக்ஸியில் ஏறி அமர்ந்த போது, ''மெதுவா மெதுவா... அவசரப்படாதே...'' என்று பதறினார்.

''ஒரு தலையணை வேணும்னா வைக்கட்டுமா...? பின்னால் படுத்துண்டே வரலாம் நீ... நான் முன் சீட்லதானே உட்காரப் போறேன்...?''

''அவ்வளவு மோசமில்லைப்பா... உட்

# அசோகமித்திரன்



யிருந்தாலும் இரண்டு நான்ல சுமங்கலி பிரார்த்தனை வேற வருது... அதெல்லாம் முடிஞ்சு நிதானமா போய்க்கலாம்...''

– மாமியாரின் உரிமையுடன் கூடிய வற்புறுத்தல்.

சுகன்யா அந்த அழைப்பை ஏற்க மிகவும் தயங்கினாள். விடிந்தால் வாட்டியெடுக்கப் போகும் மசக்கையை இவர்களிடமிருந்து மறைக்க முடியாது.

'இவ்வளவு நல்ல செய்தியை ஏன் சொல்லவில்லை? எப்படிச் சொல்லாமலிருக்கலாம் என்று மீண்டும் கோபித்துக் கொள்வார்களோ? வசந்திக்கு வழிகாட்டியதற்காக ஏறிய 'பிளஸ்' மதிப்பெண்கள் மீண்டும் மைனஸுக்குப் போய்விடுமோ...?'

''துணியெல்லாம் எதுவும் கொண்டு வரல்லையேம்மா... டூத் பிரஷ் கூட இல்லை... நான் வீட்டுக்கே போய்டறேன்...''

''அதனாலென்ன மன்னி... இப்பவே

# உள்ளே வரலாமா?

கார்ந்து வர முடியும்..'' சுகன்யா புன்னகையுடன் உத்தரவாதம் தர, ராமநாதனையும் ஏற்றிக் கொண்டு டாக்ஸி புறப்பட்டது.

கடந்த இரண்டு நாட்களில் தான் எத்தனை ரகளை!

வசந்தியை சமாதானம் செய்து அழைத்துக் கொண்டு போனபோது, மாமியார் மாமனாரிடமிருந்து வெளிப்பட்ட சந்தேகப் பார்வையும் அடிப்படையற்ற கோபமும் உண்மை வெளிப்பட்ட ஒரு சில கணங்களுக்குள் அசைக்க முடியாத நம்பிக்கையாக உருமாறிப் போன விந்தை.

தொடர்ந்து, ''ஸ்ரீராம் தான் ஊர்ல இல்லையே. அவன் வர்றவரைக்கும் இங்கேயே இருந்துடு... அங்க தனியா சமைச்சு சாப்பிட்டுண்டு திண்டாடுவானேன்.... எப்படி

வாங்கோ... என் ஃப்ரெண்டோட பைக் இருக்கு... பத்து நிமிஷத்துல போய் என்னென்ன வேணுமோ எடுத்துண்டு வந்துடலாம்....'' குமார் உடனடியாக பதில் சொன்னான்.

''இல்ல குமார்! ராத்திரி அண்ணா வேற பக்கத்து வீட்டுக்கு போன் பண்ணுவார். நான் இல்லைன்னா பயந்து போய் கவலைப்படுவார்...''

''என்ன பிரமாதம்! பக்கத்து வீட்ல சொல்லிட்டு வந்துடலாம். கல்யாண வேலையா இங்க வந்திருக்கேன்... இங்க போன் பண்ணிப் பேசிக்கலாம்னு...''

சுகன்யா சொன்ன பலவீனமான காரணங்களை ஒதுக்கித் தள்ளிய குமார், அவளை பைக்கில் ஏற்றி ஜவஹர்புரம்

அழைத்துப் போனான். சின்ன பையில் மாற்றுடைகளும் டாய்லெட் கிட்டும் அவள் எடுத்து வைத்துக் கொள்வதற்குள் அவனே பக்கத்து வீட்டில் போய் தகவல் சொல்லி விட்டு வந்தான். ஜன்னல்களைப் பொறுப்பாக மூடி தாள்போட்டான். கொல்லைப்புறக் கத வின் பூட்டை இழுத்து, மொட்டை மாடியில் துணிகள் இல்லை என்று உறுதி செய்து, 'எல் லாம் எடுத்துண்டுட்டேளா...?' என அவன் கேட்ட பொறுப்புணர்வு சுகன்யாவுக்கு இலே சாக ஆச்சர்யமூட்டியது.

"போகலாம் குமார்..."

அவனிடம் சாவி வாங்கி வாசல் கதவைப் பூட்டினான். "பையை இப்படிக் கொடுங்கோ..." என்று அதை வாங்கி, பைக்கின் சைட் காரி யரில் வைத்து மூடினான்.

வண்டியை ஸ்டார்ட் செய்வதற்கு முன் "போகலாமா...?" என்று ஒருமுறை கேட்டுக் கொண்டான்.

"போகலாம்" என்றபடி, அவன் தோளைப் பிடித்துக் கொண்டு சுகன்யா எச்சரித்தாள்: "இந்த ரோடு முனைல இடது பக்கமா பெரிய பள்ளம் இருக்கு குமார். இருட்டுல சரியா தெரியாது. பார்த்து மெல்ல போ. வசந்தி யோட ஆட்டோவில் வரும் போது டிரைவர் அதை கவனிக்காம வேகமாக போய்ட்டார். ஒரேடியா தூக்கிப் போட்டு உலுக்கிடுச்சு... வண்டி குடை சாயாம இருந்ததே பெரிசு..."

அந்த உலுக்கல் தான் காரணமோ, அல்லது வேறு காரணமோ... மறுநாள் காலைப் பொழுது மசக்கையில்லாமல் விபரீதமாய் விடிந்தது சுகன்யாவுக்கு.

டாக்டருக்கு போன் செய்யவோ வர வழைக்கவோ அவகாசம் அனுமதிக்காமல் மிக அவசரமாய்க் கலைந்துவிட்டது கரு.

சுகன்யா கர்ப்பமாயிருக்கிறாள் என்ப தையே அறிந்திராத குடும்பம், இரட்டிப்பு அதிர்ச்சியில் சில நிமிடங்கள் செய்வதறியாது ஸ்தம்பித்துப்போனது.

இதோ நர்ஸிங் ஹோமின் பெயரும் விலாசமும் சுகன்யாவே சொல்ல, அங்கு போய்ச் சேர்ந்தபோது டாக்டர் சியாமளா உடனே கவனித்து மலைபோல் தைரியமூட்டினார்.

"பயப்படாதீங்க... சில சமயம் இப் படி திடீர்னு காரணமில்லாம நடக்கறதுண்டு... ஓய்வா இருக்கணும்- மனசை தைரியமா வைச்சுக் கணும்.... நீங்களே இப்படி பேயறைஞ்ச மாதிரி இருந்தா பேஷண்டுக்கு எப்படியிருக்கும்... அவங்களுக்கு இன்னும் வயசிருக்கு. ஆரோக் கியம் இருக்கு. நிச்சயமா நல்லது நடக்கும்."

சுகன்யா ஸ்பெஷல் ரூமில் படுக்க வைக் கப்பட்டாள்.

"உங்க பையனுக்குத் தகவல் சொல்லுங்க. இரண்டு நாள் இங்க நர்ஸிங் ஹோம்ல இருக் கட்டும்- ஒரு முன்னெச்சரிக்கையாத்தான்...."

சரஸ்வதி சுகன்யாவுடன் துணைக்கு இருக்க முன்வந்தபோது ராமநாதன் மறுத் தார். "வேண்டாம்... நான் இருக்கேன். நீ தனியா இருந்தா ஏதாவது அவசரம், உதவி வேணும்னா பதறிப் போய்டுவே.... மேலும் அங்கே வீட்ல கல்யாணக் காரியமெல்லாம் கவனிச்சாகணும்... நான் இருக்கேன் சுகன்யா வோட...."

உடம்பும் உள்ளமும் பிழிந்தெடுத்த ஈரத் துணியைப்போல் சோர்ந்து கிடந்த நிலையில் சுகன்யா இந்த உரையாடல்களில் கவனம் செலுத்தவில்லை. மூடிய அவள் கண்களின் ஓரங்களிலிருந்து கண்ணீர் இடைவிடாது அனிச்சையாய் சுரந்தது. சூன்யமாகிப்போன உணர்வுகளினிடையே ஸ்ரீராமின் நினைவு மட்டும் மீண்டும் மீண்டும் அலையாக வந்து மோதியது.

விடைபெற வந்த சரஸ்வதி, சுகன்யாவின் காதருகே வழிந்தோடிய கண்ணீரைக் கவனித் தாள். அரும்பிய தாய்மை பறித்துச் சிதைக் கப்பட்ட கொடுமை தாளாமல் அவளும் உடைந்து போய் அழ ஆரம்பிக்க, மனைவியை அவசரமாக அப்புறப்படுத்தி வீட்டுக்கு அனுப் பினார் ராமநாதன்.

இமைகளின் ஓரங்கள் துணியினால் மென் மையாக ஒற்றப்படுவதை உணர்ந்து கண் திறந் தாள் சுகன்யா. கரிசனத்துடன் நின்ற மாமனா ரைப் பார்த்து பலவீனமாகப் புன்னகை செய்தாள்.

"அவருக்குத் தகவல் சொல்லிட் டீங்களாப்பா..?"

"சொல்றேன்மா.. என்ன நடக் கறதுன்னு புரிஞ்சு உன்னை இங்க கொண்டு வந்து சேர்க்கறதுக்குள்ளேயே பெரும்பாடாப் போச்சு. இங்க ரிசப்ஷன்

**தங்க நகை பரிசு!**

இந்த இருபத்தாறு வாரத் தொடர், ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு கதாசிரியர் பெயரில் வெளியாகி வருகிறது. ஆனால் அவர்களுள் ஒரே ஒரு நபர்தான் இதை எழுதி வருகிறார். தொடரை எழுதியவர் யார் என் பதைக் கண்டுபிடிப்பது உங்கள் சாமர்த்தியம். கடைசி வாரம் வரை காத்திருந்து, அந்த இதழில் வெளியாகும் கூப்பனில் விடை எழுதி அனுப்புங் கள். சரியான விடைக்கு, தங்க நகை பரிசு! பலர் சரியாக எழுதினால் குலுக்கலில் ஒருவரே பரிசு பெறுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

"நம் காதல் ரொம்ப ஆழமானதா இருக்கும்னு எதை வெச்சி சொல்றே சித்ரா?"

– ஜக்கு



லேருந்து ஆபீஸுக்கு போன் பண்ணி ராஜுகிட்டே விஷயத்தைச் சொல்றேன். அவரே ஸ்ரீராமைத் தொடர்பு கொண்டு சொல்லிடுவார்..."

"ரொம்ப பயந்துடப்போறார்பா... நான் சரியாயிருக்கேன்னு மறக்காம சொல்லச் சொல்லுங்க..."

"ஆகட்டும்மா... இப்ப கண்ணை மூடி தூங்க முயற்சி பண்ணு..."

நர்ஸ் ஒருத்தி வந்து "சார்! கொஞ்சம் வெளிய இருக்கீங்களா....? பேஷன்டைப் பார்க்க டாக்டர் வந்துட்டிருக்காங்க..." என்று ராமநாதனை வெளியேற்ற,

"நான் போன் பண்ணிட்டு வந்துடறேன்மா..." அவள் கையில் கர்சீப்பைக் கொடுத்துவிட்டு அகன்றார்.

நேற்றுதான் இவ்வளவும் நடந்தன என்றாலும் ஒரு யுகமாகிவிட்டது போலிருந்தது சுகன்யாவுக்கு.

வசந்தியும் குமாரும் எடுத்து வந்த உணவைத் தட்டில் போட்டுக் கொடுத்து, கையலம்ப தண்ணீர் தந்து, அவள் சாப்பிட்டதும் தட்டை வாங்கி அலம்பி வைத்து – பொதுவாகப் பெண்களுக்கேயுரிய நேர்த்தியுடனும் கூர்மையுடனும் மாமனார் இயங்கியது அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது.

பகல் முழுவதும் தூங்கி, மாலை கண் விழித்தபோது நினைவாய் மாமனாரிடம் கேட்டாள்.

"எப்படிப்பா இவ்வளவு கச்சிதமா வேலைகளைப் பண்ணக் கத்துக்கிட்டீங்க..."

"எல்லாம் எங்கம்மாவோட ட்ரெய்னிங்தான் சுகன்யா. எல்லா வேலையும் தெரிஞ்சிருக்கணும்னு பண்ண வைச்சுடுவா... கிணற்றிலே தண்ணி சேந்தறதுல ஆரம்பிச்சு குமிட்டி அடுப்பு பத்த வைக்கறது வரை எல்லாம் பண்ணுவேன். அப்புறம்... சரஸ்வதி வந்தப்புறம் எல்லாத்தையும் அவளே இழுத்துப் போட்டுண்டுட்டா..."

"உங்களுக்கு கல்யாணமாகி எத்தனை வருஷமாச்சுப்பா..."

"முப்பது வருஷமாச்சு..." அவர் இலேசாக வெட்கப்பட்டுக் கொண்டிருக்கையிலேயே அறைக் கதவு தட்டப்பட்டது.

ராஜு!

"சுகன்யா? என்னம்மா இது...? இப்படி விஷயம்னு நீ சொல்லவேயில்லையே... அந்த தடியன் ஸ்ரீராமும் ஒரு வார்த்தை கூட சொல்லலை...?"

"அவங்க எங்களுக்கே விஷயத்தைச் சொல்லலை மிஸ்டர் ராஜு... இப்படி ஒரு அதிர்ச்சி மூலமாதான் எங்களுக்கு உண்மை தெரிஞ்சது."

ராமநாதன் சுகன்யாவை நோக்கி அடிபட்ட பார்வை பார்த்தபோது, அவள் குற்ற உணர்வால் தலை தாழ்த்த வேண்டியிருந்தது.

"ஸ்ரீராமுக்குத் தகவல் அனுப்பியிருக்கேன்மா. அவன் பம்பாயிலே இல்லையாம். எப்படியும் இன்னிக்கு மெஸேஜ் போய்விடும்... நாளைக்கு வந்துடுவான்... ஏதாவது உதவி வேணும்னா கேட்கத் தயங்காதீங்க..."

"தாங்க்யூ மிஸ்டர் ராஜு..." என்று அவரை வழியனுப்பப் போன மாமனார், வந்ததுமே தன்னைக் கேள்விகளால் துளைப்பார் என எதிர்பார்த்தாள் சுகன்யா...

'ஏன் சொல்லவில்லை? எப்படிச் சொல்லாமல் இருக்கலாம்? இந்தச் செய்தி தெரிய வேண்டிய உரிமை உங்களுக்கு இல்லையா...'

ஆனால் கற்பனை பதில்களைத் தேடவோ, உண்மையைச் சொல்லவோ அவசியமின்றி ராமநாதன் மௌனமாயிருந்துவிட்டார்.

இப்போதும் டாக்ஸியில் முன் இருக்கையில் மௌனமாக வருகிறார்.

நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்த நிலையில் சுகன்யா கண்களை மூடிக் கொண்டிருந்தாள். அப்படியே அயர்ந்து தூங்கியும் போனாள்.

"இறங்கறியாம்மா... வீட்டுக்கு வந்தாச்சு" என்ற குரல் கேட்டுக் கண் திறந்தவளுக்கு மேலும் அதிர்ச்சி.

டாக்ஸி நின்றிருந்தது ராமநாதனின் வீட்டு வாசல் இல்லை.... அவளது ஜவஹர் நகர் தனிக் குடித்தன வீட்டின் கேட்டருகே....

மாமனார் தன்னை இங்கே இறக்கிவிட்டு விட்டுத் திரும்பிப் போய்விடும் திட்டத்தில் இருக்கிறாரா...?

தனியாக இந்த வீட்டில் என்ன செய்வது? ஸ்ரீராம் எப்போது வருவான்? அந்தக் கணமே ஸ்ரீராமைப் பார்க்க வேண்டும்போல் ஏக்கம் வந்தது. அவன் தோளில் சரிந்து மனம் விட்டு அழ வேண்டும்.

(தொடரும்)

சென்ற வாரம் தபால் ஊழியர்கள் ஸ்டிரைக்கெல்லாம் முடிந்த இரண்டாவது நாள் எனக்கு வார்ஸாவிலிருந்து ஓர் ஏர்-மெயில் வந்தது. வடக்கே திருப்பதி வெங்கடாசலபதியைத் தாண்டி எனக்கு சொந்தபந்தம் யாரும் கிடையாது. சொல்லிக் கொள்கிற மாதிரி நண்பர்களும் இல்லை. போலந்து தேசத்திலிருந்து யார் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள்?

'இக்கடிதம் கண்ட இரண்டு நாட்களுக்குள் இதை நானூறு பிரதி எடுத்து, தெரிந்தவர்களுக்கெல்லாம் அனுப்பினால் சர்வ மங்களமும் உண்டாகும்; இப்படித்தான் கண்ணம்மாப் பேட்டை சுப்பிரமணி என்பவர்...' – என்பதாக இருக்குமோ என்று நினைத்தேன். ஜோசப் ஓலேஸ்கியின் ஆட்சியில் மக்களுக்கு இதற்கெல்லாம் அவகாசமிருக்காது; எல்லாரும் பணத்தைத் துரத்திக் கொண்டு, பார்ட்டிகளில் ஒயின் அருந்திக் கொண்டிருக்கவே பொழுது சரியாக இருக்கும் என்பதாக, சம்பந்தமில்லாமல் என்னென்னவோ நினைத்துக் கொண்டு உறையைப் பிரித்தேன்.

அன்புள்ள ராகவ்,

நலமா? ஒரு நல்ல செய்தி. இப்பவும் கடந்த செப்டெம்பர் பதினேழாம் தேதி, பிரடரிக் குவாஸ் நீல்ஸ்கியைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டேன். இரண்டு வருஷமாக நாங்கள் காதலித்து வருவதை உங்களிடம் சொல்லியிருக்கிறேன்தானே? பழைய நினைவுகளையெல்லாம் அடுப்பெரிக்கப் போட்டுவிட்டு, இப்போது சந்தோஷமாக இருக்கிறேன். ஜனவரியில் மறுபடி இந்தியா வருகிறேன். இந்த முறை திருவனந்தபுரமாமே? திரைப்பட விழாவில் மறுபடி சந்திப்போம். பேச எத்தனையோ இருக்கிறது. அன்புடன், ஜூலியா.

கடிதத்தைப் படித்ததும் முதலில் குழம்பினேன். யார் இத்தனை உரிமையுடன் என் பெயரைச் சுருக்கி, இத்தனை செல்லமாய் விளிப்பது? கடைசியில் பெயரைப் பார்த்ததும் தான் பிடரியில் பேய் அடித்தது. ஜூலியா, ஜூலியா,



## பா. ராகவன்




சென்ற வருடம் புதுதில்லியில் நடந்த திரைப்பட விழாவுக்கு வந்திருந்தாள் ஜூலியா. என்னமோ, ஞாபகம் வைத்துக் கொள்ளச் சிரமமான ஒரு பத்திரிகையின் பெயரைச் சொல்லி, அதில் திரைப்பட விமர்சகியாகப் பணிபார்ப்பதாகச் சொல்லி, ஐடெண்டிடி கார்டெல்லாம் காட்டினாள்.

எனக்கு ஒரே ஆச்சர்யம். அவளை விமர்சக வித்தகியாக எங்ஙனம் ஏற்பது? ஜீன்ஸெல்லாம் போட்டுக்கொண்டு, சூயிங்கம் மென்று கொண்டு, தேன் நிற, குட்டைத் தலைமுடியை இடதுகையால் கோதிக் கோதி விட்டுக் கொண்டு – பார்த்தால் இருபத்தைந்து வயதுக்கு மேல் சொல்ல முடியாது. கையில் ஒரு மைக்கைக் கொடுத்து, எம்டீவி பாடகி என்று சொன்னால் சுலபமாக நம்பி விட முடியும்.

சிரிஃபோர்ட்டின் பிரதான திரையரங்கில் ஷெக்குரு என்கிற ஜப்பானிய மொழிப் படம் ஓடிக் கொண்டிருந்த ஒரு காலைக் காட்சியில்தான் நான் அவளை முதலில் சந்தித்தேன். எனக்குப் பக்கத்து சீட்டில் அவள்.

அடிக்கடி கைக்கடிகாரத்தைப் பார்த்து, உதட்டைக் கடித்துக் கொண்டிருந்தாள். அவளது இந்தச் செய்கை என்னை மிகவும் தொந்தரவு செய்தது. படம் பார்க்கவென்றே வந்துவிட்டு, எதற்காக நேரம் பார்த்துப் பார்த்துப் பதைக்கிறாள்? விஸா கேன்ஸல் ஆகி, ஊருக்கு மூட்டை கட்டு என்று சாணக்கியபுரி சாந்திபாத்திலுள்ள தூதரகத்திலிருந்து தகவல் வந்து விட்டதா?

இல்லை. பதினொன்றரைக்கு உபஹாரில் வேறொரு படம் தொடங்கவிருக்கிறது. அவர்களின் போலந்து நாட்டுப்படம். விட்டுவிட விருப்பமில்லை என்று ஜூலியா சொன்னாள்.

"உங்கள் நாட்டுப்படம்; நீங்கள் ஏற்கெனவே பார்த்திருப்பீர்களே?"

"எழுபத்தி ஒன்பது தடவை" என்றாள் ஜூலியா.

எனக்கு ஆச்சர்யமாக இருந்தது.

"அத்தனை நல்ல படமா?"

"என்னளவில்" என்று நிறுத்திக் கொண்டாள். ஒரு நிமிட இடைவெளியில் அவளே தொடர்ந்து, "என்னிடம் அந்தப் படத்தின் நல்ல வீடியோ பிரதி ஒன்று கூட இருக்கிறது" என்றாள்.

"அப்புறம் ஏன் இப்படித் துடிக்கிறீர்கள்?"

என் கேள்விக்கு அவள் பதில் சொல்லவில்லை. மாறாக, "நீங்கள் வந்து பாருங்களேன்!" என்றாள்.

திரையில் உணர்ச்சிமயமாக ஜப்பானிய ஓவியன் தற்கொலைக்கு முயன்று கொண்டிருக்க, நான் அரை மனத்துடன் எழுந்து, அவளைப் பின் தொடர்ந்தேன்.

தில்லிக் குளிரில் நாக்கு ஒட்டிக் கொள்ள, சூடாக ஒரு பானை காப்பி அல்லது தேநீர் கிடைக்குமா என்று நான் அக்கம்பக்கம் பார்த்துக் கொண்டே நடந்தேன்.

"மிஸ்டர் ராக்வான், எனக்காகச் சற்று சிக்கிரம் வருகிறீர்களா? உங்களுக்குக் காப்பி வேணுமென்றால், நான் பையில் - ஃப்ளாஸ்கில் வைத்திருக்கிறேன். உள்ளே போனதும் தருகிறேன்" என்றாள் ஜூலியா.

இது ஏதடா ரோதனை என்று நினைத்துக் கொண்டேன். நல்ல ஜப்பானியப் படம் பார்த்துக் கொண்டிருந்தவன், எதற்காக இவள் கூப்பிட்டதும் எழுந்து நாய்க்குட்டி போலப் பின்னால் வருகிறேன் என்று யோசித்துப் பார்த்தேன். 'எக்ஸிஸ்டென்ஷியல் ரீஸன்... அழகான ஒரு பெண் விரும்பிக் கூப்பிட, எழுந்து போவதற்கு என்ன யோசனை வேண்டிக்கிடக்கிறது' என்றது மனம். ஆனால், அத்தகைய சலனங்களுக்கெல்லாம் நான் அப்பாற்பட்டவன் என்று எனக்குள் நானே சொல்லிக் கொண்டேன். அது நிஜம்தானா என்று பின்னால் யோசித்துத் தெளியவும் முடிவு செய்து கொண்டேன்.

உபஹார் தியேட்டரை அடைந்து, இரண்டாம் தளத்தில் எங்கள் அடையாள அட்டைகளைக் காட்டி, உள்ளே போய் உட்காரவும் படம் தொடங்கவும் சரியாக இருந்தது.

கண்கள் இருட்டுக்குப் பழகியவுடன் ஜூலியா, சொன்ன சொல் தவறாமல்

● சிறைச்சாலைகளை மாமியார் வீடு என்று செல்லமாகச் சொல்லுவோம். மகாராஷ்டிராவில் உள்ள ஜெயில்களுக்கு இந்தப் பெயர் மிகப் பொருத்தம். இங்குள்ள அனைத்து சிறைகளிலும் மருமகள்களைக் கொன்ற மாமியார்கள் நூறு பேர்களுக்கு மேல் இருக்கிறார்கள்!

● இனிமேல் லண்டனுக்குப் போகிறவர்கள்- நகரை சைக்கிளிலேயே சுற்றிப் பார்க்கலாம். விமான நிலையத்திலிருந்தே நகரம் முழுவதற்கும் சைக்கிள் பாதை தனியாகப் போடப்பட்டு, டூரிஸ்ட்களின் வசதிக்கு வாடகை சைக்கிள்களையும் அரசே தரப் போகிறது. வாகனப்புகையால் சுற்றுச்சூழல் கெடாமலிருக்க இப்படியொரு ஐடியா, அங்கே.



● த.நா-01-எ-10. என்ன இது? செந்தமிழ் விரும்பி, அமைச்சர் தமிழ்க்குடிமகனின் கார் நம்பர்! ஸாரி- சொகுசு ஊர்தி எண்!

● பழைய சினிமா ஸ்டூடியோக்கள் அரிசி மற்றும் உர கொடோன்களாக மாறும் விஷயம் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஒரு மாறுதல். அடையாறு சத்யா ஸ்டூடியோவில் தற்சமயம் ஒரு கல்லூரி இயங்கி வருகிறது. 'எம்.ஜி.ஆர்-ஜானகி மகளிர் கல்லூரி' என்பது பெயர்.

● குறித்த காலத்தில் டெலிபோன் பில் கட்டாவிட்டால் தொலைபேசி இலாகா நம்மை உண்டு, இல்லை என்று ஆக்கி விடுகிறது. ஆனால் வி.ஐ.பி.க்கள் விஷயத்தில்? மூச்! மும்பையில் 'மகாநகர் டெலிபோன் நிகாம்' நிறுவனத்துக்கு அமைச்சர்கள், எம்.பி.க்களிடமிருந்து மொத்தமாக வர வேண்டிய பாக்கித்தொகை எட்டரை

ஃப்ளாஸ்கிலிருந்து ஒரு கப் கடுங்காப்பி ஊற்றி, என்னிடம் தந்தாள். ஒரே மூச்சில் குடித்து விட்டு, நன்றி சொன்னேன். அவள் அழகாகப் புன்சிரித்தாள். சற்றே முகத்தைப் பக்க வாட்டில் சாய்த்து, இடதுகையால் தலையைக் கோதியபடி, "லெட்'ஸ் வாட்ச் தி மூவி" என்றாள்.

இத்தனை சின்ன வயதில் எத்தனை தீவிர சினிமா ரசனை!

அது உண்மைதான். ஆனால் இந்தப் படத்தைப் பொறுத்தவரை தன் அதீத ஈடுபாட்டிற்குப் பிறிதொரு காரணம் உள்ளதாக ஜூலியா சொன்னாள்.

"தெரியுமா? பிரடரிக் குவாஸ் நீல்ஸ்கி. இந்தப் படத்தின் இயக்குநர், என் காதலர்."

நான், ஜூலியாவுக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்களைச் சொன்னேன். பின், வெளிச்சம் அதிகம் இல்லாத சினிமாவில் விழிகளைப் பொருத்திக் கொண்டேன்.

வாழைப்பழம், கொய்யா, கேரட், தக்காளி எல்லாவற்றையும் சேர்த்து, மிக்ஸியில் ஒரு சுழற்று சுழற்றி, வாயில் ஊற்றிக் கொண்டு பேசுவது போல ஒரே குழகுழப்பாக இருந்தது போலீஷ் மொழி. பனிச்சறுக்கு மாதிரி வாக்கியங்கள், ஆங்கில சப்-டைட்டிலில் வேகவேகமாக ஓடிக் கொண்டிருக்க, ஒரு மாதிரியாக நான் புரிந்து கொண்ட அளவில், கதை என்னை மிகவும் அதிர்ச்சியுறச் செய்தது.

தெரியாத்தனமாக ஒரு சாடிஸ்டைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டு விடுகிற ஒரு பெண்ணுக்கு எத்தகைய அனுபவங்கள் வாய்க்கும்? அவன் கொடூரத்தின் வேரைத் தேடிக்கொண்டு போனால், அவள் மீதுள்ள எல்லையில்லாக் காதலில் போய் முடிகிறது.

உறங்கும் மனைவியின் மேல் ஊர்ந்து போகிற ஒரு ஈ கூட உயிரோடு இருக்கக் கூடாது என்று நினைக்கிற வெறி. ஒரு விருந்தில் அவள் கையைப் பற்றிக் குலுக்குகிற நண்பனின் விரல்களை முறிக்கிற ஆக்ரோஷம்.

என் இயல்பு நிலை பறிபோய் நெஞ்சு வரண்டு, ஜூலியாவிடம் இன்னொரு காப்பி கேட்கலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, திரையில் ஒரு டீவி நிருபர் எதற்கோ அவளை பேட்டிகாண வந்தான்.

கேமராவில் வைத்தகண் வாங்காமல் அவளைப் பார்த்துக் கொண்டே இயக்கிக் கொண்டிருந்தவன், அவளது ஓர் அசாத்தியப் புன்னகைக்கு உடனடி ரியாக்ஷனாக 'ப்யூட்டி ஃபுல்' என்று சொல்லிவிட, அவனைப் போட்டுப் புரட்டி எடுத்துவிட்டு, கையோடு மன்னிப்பும் கேட்டு விடுகிறவனின் குணம் எனக்கு வெகு குழப்பம் தந்தது.

"சே, பயங்கரம்!" என்றேன் நான்.

ஜூலியா என்னைத் திரும்பிப் பார்த்தாள். இதழ்களில் ஒரு வரட்டுப் புன்னகை தெரிய, "கஷ்டமாக இருக்கிறதா?" என்றாள்.

இல்லையென்று எப்படிச் சொல்வேன்? "ரியலிஸத்தின் பெயரில் இனி திரையில் காட்ட அருவருப்பான விஷயங்கள் ஏதும் மிச்சமில்லாமல் பண்ணிவிட்டார் உங்கள் பிரடரிக்" என்றேன்.

"மிச்சமில்லையா? இன்னும் அரைமணி நேரப் படம் பாக்கி இருக்கிறதே? முழுக்கப் பார்த்துவிட்டுச் சொல்லுங்கள்."

"மன்னிக்க வேண்டும் ஜூலியா. எனக்குத் தாங்கவில்லை. நான் வெளியே உங்களுக்காகக் காத்திருப்பேன். நீங்கள் நிதானமாக முழுப்படமும் பார்த்துவிட்டு வந்து மிச்சக் கதையைச் சொல்லுங்கள்" என்று எழுந்து வெளியே

வந்து விட்டேன்.

**ப**டம் முடிந்து, ஜூலியா வந்தாள். தியேட்டர் வாசலில் ஒரு தூபாவில் நின்று கொண்டு, ரொட்டி கடித்துக் கொண்டிருந்த என்னைக் கண்டுபிடித்து, அருகே வந்து, "போகலாமா?" என்றாள்.

"எங்கே போவது? இன்றைக்கு இன்னொரு படம் பார்க்கிற மனநிலை எனக்கில்லை. அறைக்குப் போய், சுலோகம் சொல்லிவிட்டு, இழுத்து போர்த்திக்கொண்டு படுத்து விட உத்தேசம்."

"நல்லது. நான் உங்கள் ஹோட்டல் அறை வரைக்கும் உடன் வரலாமல்லவா? மிச்சக் கதையைக் கேட்கிற விருப்பம் உண்டா?"

கேட்காமல் விடமாட்டாள் போலிருக்கிறது. விழாவிற்கு வந்திருந்த நூற்றுக்கணக்கான இந்தியப் பத்திரிகையாளர்களுள் என்னைத் தவிர வேறு யாரும் ஏன் இவளுக்குப் பேச்சுத் துணைக்குக் கிடைக்கவில்லை? என் முகத்தில் அப்படியென்ன எழுதி ஒட்டியிருக்கிறது?

"தெரியுமா! உங்கள் மென்மையான சுபாவம்தான் உங்களின்பால் என்னைக் கட்டி இழுக்கிறது. அந்த ஜப்பானியப் படத்தில், காட்சிகளுக்கேற்ப உங்கள் முகபாவம் மாறிக் கொண்டே வந்ததை நான் கவனமாக கவனித்துக் கொண்டே ரசித்தேன்!"

சுத்தம். போலந்து வாழ் பெருங்குடி மக்களுக்கு ஒரு மதராஸியின் முகபாவ மாற்றம் பற்றி ஒரு வியாசம் தனியாக எழுதுவாளாயிருக்கும் என்று நினைத்துக் கொண்டேன்.

"போகட்டும். அந்த ராஸ்கலிடம் மாட்டிக் கொண்ட பெண், என்னதான் ஆகிறாள் இறுதியில்? பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டியதாயிருந்திருக்குமே? சே. காதலிக்க நல்ல ஆளைத் தேர்ந்தெடுத்தாளே?"

ஜூலியா சிரித்தாள்.

"மிகவும் சிரமப்பட்டு அவனைச் சம்மதிக்க வைத்து, ஒரு சைக்கோதெரபி ட்ரீட்மென்ட்டுக்குக் கூட்டிப் போகிறாள். அங்கே அவன் டாக்டரைத் தாக்கிவிட, போலீஸ் கேஸ் ஆகி, அவன் சிறைக்குப் போய் விடுகிறான்."

"பிறகு?"

"இவள் தினமும் அவனைப் பார்க்க ஜெயிலுக்குப் போக, பிற கைதிகள் அவளை - அவள் அழகைப் பார்த்து வழிய, அங்கும் அவன் கைகலப்பில் இறங்கி விடுகிறான்."

"போச்சுடா!"

"ஒருவழியாக அவன் ரிலீஸாகி வந்ததும் அவள் வேறு கோணத்தில் யோசிக்கத் தொடங்குகிறாள். அவன் குணத்தை மாற்ற முடியாது; அவன் அத்தனை முரட்டுத்தனங்கள் காட்டக் காரணமாயிருப்பது அவளுடைய அழகு தானே? அதைப் பிறர் ரசிப்பதைத்தானே அவனால் பொறுத்துக் கொள்ள முடியாமல் போகிறது...?"

"அதனால்?"

"அவள் தன் முகத்தில் தானே ஆஸிட் ஊற்றிக் கொண்டு, அவனுக்கு அதிர்ச்சி வைத்தியம் பண்ணி, சரி பண்ணி விடுகிறாள்."

"கடவுளே! இதுதான் கதையா? எழுபத்தொன்பது தரம் பார்க்கும்படி என்ன இருக்கிறது இதில்? எங்கள் ஊரில் இப்படியொரு படம் எடுத்தால், கல்லால் அடிப்பார்கள்."

ஜூலியா பேசவில்லை. ஆட்டோ, கோவிந்த்புரிக்கு -

கோடி ரூபாய்! "எங்களால் வசூலிக்க முடியவில்லை" என்று தொலைபேசித் துறையினர் கைவிரித்து விட்டார்களாம்! பாக்கி வைத்துள்ளோர் பட்டியலில் சில மிக முக்கியஸ்தர்கள் : வெங்கட கிருஷ்ணா ரெட்டி (11 லட்சம்), சிந்தாமோகன் (9.5 லட்சம்), ராம்சந்தர் தாஸ் (11 லட்சம்) அர்ஜுன்சிங் (7 லட்சம்) கனில் தத் (2 லட்சம்) பட்டியலில் உள்ள முன்னாள் எம்.பி.க்களில் சிலர் இறந்தே விட்டார்கள்!



● 'இப்போதைக்குப் பேசாமல் இருங்கள்; பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்று தம் வக்கீல்கள் சொன்னதால் செய்ய நினைத்த காரியத்தைத் தள்ளிப் போட்டிருக்கிறார் ஹர்ஷத் மேத்தா.
என்ன செய்ய நினைத்தார்? பெரிசாக ஒன்றுமில்லை. ஒரு வாழ்க்கை வரலாறு!



● இங்கிலாந்தில் வசிக்கும் இந்தியரான ஸ்வராஜ் பால் (வயது 65) இனி ஸ்வராஜ் பால் பிரபு (Lord) என்று அழைக்கப்படுவார். காரணம், அவரை இங்கிலாந்து அரசி இரண்டாம் எலிசபெத், பாராளுமன்றத்தின் 'பிரபுக்கள்' அவை உறுப்பினராய் நியமித்திருக்கிறார். இங்கிலாந்தின் பெரும் பணக்காரர்கள் பட்டியலில், ஸ்வராஜ் பாலுக்குப் பின்னால்தான் எலிசபெத் ராணியே இருக்கிறார்!

தொகுப்பு : **மௌஷ்மி**

"ஆனாலும் இந்த டீவிக்காரர்களுக்கு இவ்வளவு கிண்டல் கூடாது."
"ஏன்? என்ன செய்தாங்க?"
"ஊழல் வழக்குகள் பற்றிய செய்திகளை அறிவிக்க தற்பொழுதுள்ள செய்தி அறிவிப்பு நேரம் போதவில்லையாம். அதனால், "ஊழல் சிறப்புச் செய்திகள்" அறிவிக்கப் போகிறார்களாம்."

- பா. முத்துலிங்கம்



என் ஹோட்டல் அறையை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. பனிக் காற்றில் நான் ஏகதேசம் ஐஸ்கட்டி மனிதனாகவே ஆகி யிருக்க, குளிரை மறக்கும் பொருட்டு, அவளுடன் மேலும் பேச்சுக் கொடுத் தேன்.

"ஜூலியா, ஏன் அமைதியாகி விட்டீர்கள்?"

"ஒன்றுமில்லை. உங்களுக்குப் படத்தின் அடிநாதம் புரிகிறதா?"

"நாதமாவது, வேதமாவது? கிறுக்கனைக் காதலித்த பாவத்துக்கு, அவள் ஆஸிட் ஊற்றிக் கொண்டதில் தப்பே இல்லை!"

"நீங்கள் கிண்டலாகப் பேசுகிறீர்கள். மனசில் எத்தனை ரணம் இருந்தால் அவள் அப்படி யொரு முடிவுக்கு வந்திருப்பாள்? கூடவே, அவளுக்கு அவன் மேல் எத்தனை காதலும் இருந் திருக்க வேண்டும்?"

"காதல் நாசமாய்ப் போக. ஜூலியா, நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்? அவளுக்காக அனு தாபப்படச் சொல்கிறீர்களா? ஸாரி. என்னால் முடியாது."

"அவள் வேறென்ன செய்திருக்க முடியும்?"

"சிம்பிள். டைவர்ஸ் வாங்கிக் கொண்டு சந் தோஷமாகப் போயிருக்கலாம். முடிந்தால் அவன் மேல் ஒரு கேஸ் கூடப் போடலாம். இந்த அமரக் காதல், தெய்வீகக் காதல் எல்லாம் எங்கள் ஊர் சினிமாவில் மட்டும்தான் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். இது விஷயத்தில் உலகம் முழுக்க ஒரே ரகம்தான் போலிருக்கிறது."

**ஹோ**ட்டல் வாசலில் ஆட்டோவை விட்டு இறங்கி, அறைக்குப் போய் ஒரு காப்பி சாப்பிட்டு ஆனதும் ஜூலியா சொன்னாள் : "தெரியுமா? இது நிஜமாக நடந்த கதை."

"அப்படியா? அந்தப் பெண்ணுக்கு என் ஆழ்ந்த அனுதாபங்கள்."

"அவசரப்படாதீர்கள். கதை என்னவோ நடந்த விஷயம்தான். கிளைமாக்ஸைத்தான் மாற்றி விட்டார்கள்."

"நல்லது. நிஜத்தில் நடந்த கிளைமாக்ஸ் தான் என்ன?"

"அந்தப் பெண்ணின் தங்கைக்கு, சர்ச்சில் திருமணம் நடந்து கொண்டிருந்தது. மான் குட்டி மாதிரி அவள் சந்தோஷத்தில் துள்ளிக் கொண்டிருந் தாள். திருமணச் சடங்குகள் முடிந்து, தங்கையும் அவள் கணவனும் இவளுக்குக் கைகுலுக்க வர, அவள் எல்லையற்ற மகிழ்ச்சி யின் வெளிப்பாடாக அந்தப் பையனின் நெற்றியில் ஒரு முத்தம் வைத்தாள்..."

"சரிதான். நமது ஹீரோ பொங்கி எழுந் திருப்பாரே?"

"ஆமாம். அவளைத் தரதரவென்று வீட்டுக்கு இழுத்துப் போய் ஓர் அறையில் கட்டிவைத்து, ஒரு பிளேடால் உடம்பு முழுவதும்..."

நான் அதிர்ந்து விட்டேன். ஒருமாதிரி சமாளித்துக் கொண்டு, "அப்புறம்?"

"அவனே அவளை ஹாஸ்பிடலுக்கும் கூட் டிப் போய் வந்தான். அன்றிரவு அவள் ஒரு முடிவுக்கு வந்தாள்."

"அதென்ன?"

"ஒரு கிளாஸ் ஒயின். இரண்டு தூக்க மாத்திரைகள். ஒரு பிளாஸ்டிக் கவர்."

"என்னது?"

"ஒயினில் தூக்க மாத்திரைகளைப் போட்டு அவனுக்குக் கொடுத்து விட்டு, அவன் உறங்கிய தும் ஒரு பிளாஸ்டிக் கவரால் முகத்தை மூடி, இறுகக் கட்டி விட்டாள். மூச்சு விட முடியாமல் அவன்..."

"ஐயோ!"

ஜூலியா எழுந்து போய் ஒரு குவளை தண்ணீர் குடித்து விட்டு வந்து என் எதிரே அமர்ந்தாள். அதே மாறாத புன்னகை.

"என்ன, பயந்து விட்டீர்களா?"

என்னால், இல்லை என்று சொல்ல முடிய வில்லை.

"இந்தச் செய்தி உங்கள் நாட்டுப் பத்திரி கையில் வந்ததா?"

"இல்லை. இது ஒரு செய்தி ஆகவே இல்லை. தூக்கத்தில் இறந்தான் என்று அவன் ஆத்மா சாந்தியடையப் பிரார்த்தித்து விட்டு, நல்லடக்கம் செய்து விட்டார்கள்."

"எனில், அந்தப் பெண்ணை நீங்கள் அறிவீர்களா?"

"மிகவும்" என்றவள், சட்டென்று தன் ஓவர் கோட்டை விலக்கி, சட்டையைத் தளர்த்தி, தோளைக் காண்பித்தாள்.

வரிவரியாகக் கீறல் தழும்புகள்.

●● லைலா மஜ்னு கதைப்புத்தகம் யாரிடமாவது இருந்தால் வி.பி.பி.யில் அனுப்பித் தரவும்.

ப. வேலாயுதப் பெருமாள்,
802, கற்பகநகர், மதுரை - 625 007.

●● B.E. Civil Engineering, Final year படிக்கிறேன். Elective subjects, Foundation subjectsக்கான புத்தகங்கள்/நோட்ஸ்கள் தேவை. விவரம் தெரிவித்தால் தபால் செலவுடன் பெற்றுக் கொள்கிறேன்.

G. Mahesh,
Hearamb II Floor,
Butta Nagar,
Dombivli (East),
421 201.



# பாலம்

●● பட்டி தொட்டி கனிலெல்லாம் கோவில் கொண்டிருக்கும் சோனையா சுவாமியின் வரலாறு பற்றிய புத்தகம், தகவல்கள் தேவை.

இரா. கல்யாணசுந்தரம்,
7, நடுத்தெரு,
அனுப்பானடி,
மதுரை - 625 009.

●● கம்பராமாயணம், அண்ணாமலை பல்கலைக்கழக வெளியீடு, சுந்தரகாண்டம் நீங்கலாக பதினைந்து தொகுதிகள் உள்ளன. வாங்க விரும்புவோர் தொடர்பு கொள்க.

கி. நரசிம்மன்,
56, பெருமாள் சன்னதி தெரு,
திருநெல்வேலி - 627 001.

●● அண்ணாமலை பல்கலைக் கழக தொலைதூரக் கல்வி எம்.ஏ. பொருளாதாரம் (தமிழ் வழி) எட்டுத் தாள்களுக்கான நோட்ஸ் தேவை. தகுந்த விலை தரப்படும்.

எஸ்.கஷ்மீர் ராஜா,
3/41, அனுமந்தராயன்கோட்டை (அ),
திண்டுக்கல்-அண்ணா - 624 054.

●● மலர்கள், பூஞ்செடிகள், பொம்மைகள் போன்ற கைவினைப் பொருட்கள் செய்ய கற்றுக் கொடுக்கப்படும். தபால் மூலமும் கற்கலாம்.

Modern crafts,
33, அண்ணாமலை கவுண்டர் தெரு,
தருமபுரி - 636 701.

●● கணிதமேதை ராமானுஜம் வாழ்க்கை வரலாறு பழைய புத்தகம் இருந்தால் தேவை. சன்மானம் தரப்படும்.

ஈ.டி. விஜயகுமார்,
23, வடக்கு பெருமாள் கோயில் வீதி,
ஈரோடு - 638 001.

●● CBSE +2 வகுப்புக்கான NCERT (1) Business Studies (2) Accountancy Part I பழைய அல்லது புதிய புத்தகங்கள் தேவை. பணம் தந்து பெற்றுக் கொள்கிறேன்.

S. விஜய்பிரசாத்,
பிரகாசம் ஃபினாட்ஸ்,
2, பிரகாசம் தெரு,
சென்னை - 600 017.

●● இருபது ஆண்டுகளாகத் தபால் தலைகள் சேகரித்து வருகிறேன். என் போன்ற தபால் தலைகள் சேகரிப்பவர்கள், தபால் தலை பரிமாற்றத்துக்குத் தொடர்பு கொள்ள வேண்டுகிறேன்.

எஸ். தங்கப்பெருமாள்,
124, பாரப்பட்டித் தெரு,
விருதுநகர் - 626 001.

●● சுமார் நூறு ஆண்டுகளுக்கு முந்தையதாகக் கருதப்படும் 2.5 செ.மீ நீளம், 1.8 செ.மீ அகலம், 1 செ.மீ பருமன் உள்ள புனித குர் ஆன் உள்ளது. தக்க சன்மானம் தருபவருக்கு வழங்கப்படும்.

ஆர்.பி. அரவிந்தன்,
ஸ்டேட் பாங்க் ஆப் திருவாங்கூர்,
சுசீந்திரம் - 629 704.

●● IIT-JEE-95 course material இருந்தால் விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்.

த. ஜெயஸ்ரீ,
378, 4-D, Main, II stage,
W.C.Rd, Bangalore
560 086.

●● ஏழை 28 வயது இளைஞனுக்கு ஆங்கிலம் பேசவும் எழுதவும் இலவசமாகக் கற்றுத்தர விரும்புவோர் தொடர்பு கொள்ளவும். .. துடிக்கிறேன்.

N Venkateshan,
Leader Curring,
1.B, Serran godu first st,
K.N.P. Colony, Tirupur.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி அலுவலகம் பொறுப்பு ஏற்க இயலாது - ஆர்.)

# மும்பையில் வீடு வேண்டுமா? மூணே முக்கால் லட்சம் டாலர்!

"டெலிபோன் ஸ்டிரைக்... தபால் கிடையாது... ரெண்டு நாளா எனக்கு 'சென்னைக் கண்'... வர முடியலே..."

அச்வின் ஒட்டை விழுந்த கம்ப்யூட்டர் பேப்பரை புறாக்காலில் கட்டிச் செய்தி அனுப்பி இருந்தான்.

யார் செய்த புண்ணியமோ... எங்கள் பேட்டையில் மனீஷா கொய்ராலா போல டெலிபோன் மணி தொடர்ந்து சிரிக்கும் சப்தம். கம்ப்யூட்டரை ஆன் செய்தேன்.

"என்ன... தனியாகவே தகவல் வீதியில் திரியக் கிளம்பிட்டீரா...?"

ஔரங்கசீப் மூக்குக் கண்ணாடியைச் சட்டையில் துடைத்தபடி உள்ளே நுழைந்தார்.

"அதான் துணைக்கு நீர் வந்துட்டீரே..."

அச்வின் விட்டுப் போயிருந்த நோட்டுப் புத்தகத்தைக் கை போன போக்கில் புரட்டி கம்ப்யூட்டரில் நான் கொடுத்த இன்டர்நெட் விலாசம் http://www.mumbainet.com.

"மும்பை சலோவா... பலே... பால்தாக்கரே... அமிதாப்... அம்பானி... யாராவது மாட்டறாங்களா பாரும்... ஒரு வழி பண்ணிடலாம்..."

ஔரங்கசீப் ப்ரீப்கேஸைத் திறந்து, பாக்குப் பொட்டலத்தைப் பிரித்துக் கொண்டிருக்க, திரையில் மும்பை தகவல் பக்கங்கள். மையமாக 'ஃப்ளாட் விற்பனைக்கு' விளம்பரம்.

"அதை முதல்லே பாருமய்யா... அமிதாப் கிடக்கட்டும்..."

"மும்பை கஃப் பாரேட் பகுதியில் 625 சதுர அடி ஃப்ளாட்... கடற்கரைப் பக்கம்... நாரிமன் பாயிண்டிலிருந்து அஞ்சே நிமிட தூரம்... மூணு லட்சத்து எழுபத்தஞ்சு ஆயிரம்தான்..."

நான் உரக்கப் படிக்க, ஔரங்கசீப் உற்சாகமானார்.

"பரவாயில்லையே... நம்ப ஊர் ரேட்டு போலதான்... ஒரு தம் பிடிச்சுப் பணம் புரட்டிடலாமா? வர்ற பொங்கலுக்கு பால் காய்ச்சிக் குடிச்சுக் குடி போயிடலாம்..."

"கொஞ்சம் பொறும்... மூணே முக்கால் லட்சம் ரூபாய் இல்லே... டாலர்... ரூபாய் மதிப்புக்கு ஒரு கோடியே முப்பது லட்சம்... சொச்சம்...."

"ஆர்க்டிக் துருவப் பிரதேசத்திலிருந்து ஒரு எஸ்கிமோ சிநேகிதன் டிராப்ட் அனுப்பறதா சொல்லியிருக்கான்... வந்ததும் பார்க்கலாம்..."

ஔரங்கசீப் நம்பிக்கையுடன் கம்ப்யூட்டரின் எலிக்குட்டியை நகர்த்த (அதாங்க... mouse...) திரையில் 'போன நூற்றாண்டில் மும்பை'.

போன நூற்றாண்டுக்கு முந்தைய மும்பை, தமிழ் சினிமாவின் 'பதினெட்டுப் பட்டி கிராமம்' போல சின்னதும் பெரிசுமான கிராமங்களின் தொகுதி. அங்கே பத்தரே பிரபு இனம்தான்

மெஜாரிட்டி. பதிமூணாம் நூற்றாண்டிலேயே இந்த இனத்தவர் மகிகாவதி தீவுக்கிராமத்தில் (இன்றைய மாஹிம் பகுதி) குடியேறி விட்டார்கள். மும்பையில் பிரபலமான பிரபாதேவி கோவில் தான் இவர்களுக்கு ஆத்தா உன் கோவில். 1668-ல் குடியேறிய பார்ஸிகள்தான் துறைமுகம், பஞ்சாலை, நீராவி யந்திரம் எல்லாம் ஏற்படுத்தி மும்பையைக் கன்னாபின்னா என்று வளப்படுத்தியது.

நான் சரித்திரம் படித்துக் கொண்டே போக, ஔரங்கசீப் ஆதங்கப்பட்டார். அதுலே ஒரு பத்து பார்ஸிக்களாவது பொட்டி படுக்கையோட இங்கே வந்திருக்கக் கூடாதா...? இன்னைக்கு நம்பாளு பொட்டியைத் தூக்கிட்டு ஏதாச்சும் வேலை கிடைக்கு மான்னு அங்கே ஓட வேண்டாம் பாரு...''

அவர் மூடை மாற்ற நான் நகைச்சுவைப் பகுதிக்குள் நுழைந் தேன். அங்கே மகாதேவன் ரமேஷின் கதை. மும்பையிலிருந்து அமெரிக்க பிட்ஸ்பர்க்கில் குடியேறிய தமிழர்கள் வாங்குகிற டீ.வி பற்றியது. வயசான டீ.வி கைமாறிக் கடைசியில் அதை வாங்குகிறவர் சொல்லுகிறார்... "வாங்க... டீ.வி கேட்டுக்கிட்டே சாப் பிடலாம்..."

மும்பை வீதியில் இன்னும் நடக்க, 'சில்க்' என்று திரையில் தலைப்பு. ஓரிபாங்க்ஸ் வைத்து நடத்தும் இசைக்குழு பற்றியது... பியானோ, சாக்ஸபோன், வயலின், கடம் என்று கிழக்கும் மேற்கும் சந்திக்கும் இசை.

"உமக்குத்தான் சங்கீதமே பிடிக் காதே..." ஔரங்கசீப்பைப் பார்த்தபடி மும்பையில் இருந்து வெளியே வந்தேன்.

"யார் சொன்னது... நான் நல்லா வீணை வாசிப்பேன் தெரியுமா?"

சொல்லிக்கொண்டே ஔரங்கசீப் எடுத்துக் கொடுத்த அடுத்த விலாசம் - 'http;www.clark.net.pub'

"இது இன்டர்நெட் கடைவீதி... அமெரிக்காவிலே இருக்கு... ஒவ்வொரு கடையிலும் என்ன விக்கறாங்களோ, அதோட படம், விலை விவரம் எல்லாம் விலாவாரியா இங்கே போட்டு வச்சிருப்பாங்க... சாவகாசமாப் பாத்து வேணுங்கறதை செலக்ட் செஞ்சு, கிரடிட் கார்ட் நம்பரைக் கொடுத்திட்டாப் போதும்... சரக்கு நம்ப விலாசத்துக்கு வந்து சேர்ந்திடும்... நாம அமெரிக்காவிலே இருக்கப்பட்டவங்களா இருக்கணும்... அம்புட்டுத்தான்..."

நான் முடிக்கும்முன் திரையில் 'கம்ப்யூட்டர் நகைக்கடை' என்ற பகுதியைத் தேர்ந்தெடுத்தார் ஔரங்கசீப். அங்கே விலைப் பட்டியல்-

கம்ப்யூட்டர் வயர் பிரேஸ்லெட் - 3.25 டாலர்
மைக்ரோ சில்லு காதுத்தோடு - 2.75 டாலர்
மைக்ரோ சில்லு பின் - 2.25 டாலர்

"இன்னும் ஒட்டியாணம்... மூக்குத்தி... வளையல்... சங்கிலி... இதெல்லாம் இல்லையா... ஒண்ணு விடாமே வாங்கி

மாட்டிக்கிட்டு அப்படியே கெத்தா தெருவிலே நடந்து போனால்..."

ஔரங்கசீப் எதையோ நினைத்துக் கொண்டு சிரிக்க, நான் தேடிப் பிடித்தது 'ராஜாராணி சுத்த சைவ இந்திய ஓட்டல்'

"உங்கள் நாவுக்கு ருசி கரமான வெஜ், புலவு, வெஜ் பிரியாணி, சப்பாத்தி, நான், நீ, அமெரிக்காவிலே மிச சிகன் நகரில் வசிப்பவர்கள் கம்ப்யூட்டர் மூலமாகவே ஆர்டர் செய்யலாம்... கடச் சுட வீட்டுக்கே வந்து டெலி வரி கொடுக்கப்படும்."

தொலைபேசி இணைப்பு திமர்கட்.

"புளியோதரை கொண் டாந்திருக்கேன்... சாப் பிடலாம் வாரும்..."

ஔரங்கசீப் டிபன் டப் பாவைத் திறந்தார்.

—இரா. முருகன்

## நெட் ஜோக்

ஒரு கம்ப்யூட்டர் ஆசாமி கிராமப் பக்கம் போனான். அங்கே நிறைய ஆடுகளை மேயவிட்டுக் கொஞ்சம் தள்ளி மரத்தடியில் ஆடு மேய்க்கிறவன்.

"உன்னோட மந்தையிலே எத்தனை ஆடு இருக்கு?" கம்ப்யூட்டர் காரன் கேட்டான்.

"எண்ணித்தான் சொல்லணும்"- ஆட்டுக்காரன் சொன்னான்.

"நான் எண்ணாமலேயே சரியாச் சொன்னா, உன் பக்கத்திலே மேயறதே அந்த ஆட்டுக்குட்டியைத் தருவியா?"

"சரி"

"அறுபத்திமூணு...." கம்ப்யூட்டர்காரன் சர்வ நிச்சயமாகச் சொன் னான்.

எண்ணிப் பார்த்தான். அறுபத்திமூணுதான்!

கம்ப்யூட்டர்காரன் காலரைத் தூக்கி விட்டுக்கொண்டு, குட்டியும் கையுமாக நகர, பின்னால் இருந்து குரல்-

"கம்ப்யூட்டர் ஐயா... ஒரு நிமிசம்..."

இவன் கலவரத்துடன் திரும்பிப் பார்த்தான்.

"எனக்கு என்ன தொழில்னு நீ எப்படி கண்டு பிடிச்சே...?"

கேள்வியைக் கவனிக்காததுபோல் ஆட்டுக்காரன் பதில் சொன் னான்-

"நீங்க தூக்கிட்டுப் போற என் நாய்க்குட்டியைக் கொஞ்சம் இறக்கி விடுங்களேன்..."



**ப**ராசர பட்டரின் கேள்வியோடு போன வாரம் நிறுத்தி னேன்: 'தூக்கத்திலே நம்மை ரக்ஷிக்கிற பரமாத்மா விழிப்பின் போதும் ரக்ஷிக்க மாட்டானா...?'

தூக்கம் என்பதை நமக்கு விதித்ததே இந்தப் பேருண்மையை நாம் உணரவேண்டும் என்பதற்காகத்தான்! அவன் சர்வாந்த்ர யாமி என்பதை உணர்த்துவதற்குத்தான்!

பகவானே ரக்ஷகன் என்பதை சகல சித்தாந்தங்களும் ஒப்புக் கொள்கின்றன.

இப்படிப்பட்ட பகவானை ஆவாகனம் பண்ணி, சாதாரண மாய் யாக பூஜைகளுக்கு வரவழைக்க வேண்டும். ஆனால் அதெல்லாம் பண்ணாமலே, பலி சக்ரவர்த்தியின் அசுவமேத யாகத்துக்கு வருகிறான் பரமாத்மா. மஹாபலியுடைய யாகத்தின் பயனே நேரே வருகிறது!

எங்கும் வியாபித்து இருக்கக்கூடிய விபு - விச்வமாக இருப் பவன், தன்னை ஒடுக்கி, எல்லாவற்றையும் மறைத்து, குள்ளமாய் வாமனனாய் அல்லவா வருகிறான்! அவன் விபு; அவன் பிரபுவும் கூட - எல்லாவற்றுக்கும் மேலானவன்; எல்லாவற்றையும் நியமிக் கக்கூடியவன். அவனே யாசித்தலுக்கு வருகிறான் என்றால்... அதுதான் பரமாத்மாவினிடத்திலே இருக்கிற உத்தமமான குணம்.

இந்த வாமன அவதாரத்திலே ஆண்டாள் ரொம்ப ஈடுபாடு கொண்டு, வாமன மூர்த்தியை 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்று கொண்டாடுகிறார்.

உத்தமன்...? பிறருக்காக காரியம் செய்கிறவன் உத்தமன் தம்மை ஆச்ரயித்தவர்களுக்காக எதையும் செய்பவன்.

தன்னை ஆச்ரயித்த அர்ஜுனனுக்கு ஸாரதியாய் இருந்தான் பகவான். 'உனக்கு நான் ஸாரதியாக இருக்கிறேன்' என்று, தானே அந்த வேலையைக் கேட்டு வாங்கிக் கொண்டான். எடுத்துக் கொண்ட காரியத்துக்கு ஏற்ப பவ்ய மூர்த்தியாய் விளங்கினான். ரதத்தை நிறுத்தியபோதெல்லாம் தான் முன்னதாகக் கீழே இறங்கி, அர்ஜுனனுக்குக் கைகொடுத்து கீழே இறக்கி விட்டான். அவ்வளவு பவ்யம்! 'இங்கே நிறுத்து,' 'அங்கே கொண்டு போ' என்று அர்ஜுனன் இஷ்ட வழக்காய் வேலை செய்தான்.

கடைசியில் யுத்தமெல்லாம் முடிந்த பிறகு பகவான் மாறி விட்டான்! தான் முன்னே இறங்காமல் அர்ஜுனனை இறங்கச் சொன்னான். 'கீழே இறங்கி, தூரப் போய்விடு!' என்றான். அர்ஜுனன் நகர்ந்ததும் பகவான் இறங்கினான்; அந்த ரதம்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

அப்படியே கருகிப் போய்விட்டது! அத்தனைக் காலமும் பாணங் களின் சக்தியால் அந்த ரதம் அழியாமல் பகவான் அல்லவா ரக்ஷித்துக் கொண்டிருந்தான்!

அதைப் போல, இந்திராதி தேவர்கள் தன்னை ஆச்ரயித்ததற் காக அவர்கள் பொருட்டு - இந்த யாசகத்தை மேற்கொண்டான் பகவான். வாமனனாக அவதரித்து வந்தான். இந்த யாசகம் இருக்கிறதே... ரொம்ப சிரமமான காரியம்.

கேட்கிறபோது கை நடுங்கும்; வாக்கு குழறும். உடலெல்லாம் வியர்க்கும்.... என்ன கேட்பதென்று புரியாமல் வார்த்தையே வராது... "அடியேன்... அடியேன்..." என்று யாசிப்பவர் மேலே கேட்கத் தெரியாமல் தவிப்பார்.

அந்திம காலத்திலே என்னென்ன விகாரங்கள் எல்லாம் ஏற் படுகின்றனவோ, அது மொத்தமும் ஒருத்தரிடம் கையை நீட்டி யாசிக்கும்போதும் ஏற்படும் என்று சாஸ்திரம் சொல்கிறது.

ஆகையினால் இரத்தல் இறத்தலுக்குச் சமம்! அப்படியிருந்தும் அந்தத் தொழிலையே பரமாத்மா மேற்கொண்டானே...!

**வ**ந்து நின்ற பகவானைப் பார்த்து ஒரே ஆச்சர்யமாம் மகாபலிக்கு!

"தாங்கள் யார்? தெரியலையே...!" என்று அவன் கேட்கிறான்.

யாரென்று சொல்வான் பரமாத்மா...!

"அபூர்வ:" என்று பதில் சொல்கிறான். "என்னை நீ பார்த்திருக்க முடியாது. நான் யார் என்பதைச் சொன்னாலும் புரியாது."

தினமும் இங்கே நான் வந்து உபந்யாஸம் பண்ணுகிறேன். இதில் சொல்வது எல்லாம் புரிகிறதா என்றால், இல்லை! எனக்கே இன்னும் பல விஷயங்கள் முழுவதுமாய்ப் புரியவில்லை. விச்வ சப்தத்தினுடைய முழு அர்த்தமும் புரிந்து விட்டதாகச் சொல்ல முடியுமா! ஏதோ பரஸ்பரம் இங்கே வந்து பகவான் குணத்தை நாம் பரிமாறிக் கொள்கிறோம்.



'கொண்டி பசுவுக்குத் தடி கட்டி விட்டாற்போலே...' என்று பழமொழி சொல்வார்கள். அது மாதிரிதான் இந்த உபன்யாசம்.

ஒருத்தன் நூறு பசு வைத்திருந்தான். அதிலே ஒரு பசு ரொம்ப துஷ்டை...! புல்லை மேயாமல் கதிர் விட்டிருக்கிற பயிரைப் போய் மேயும்! பயிருக்குச் சொந்தக்காரரான விவசாயி அதை நன்றாகப் போட்டு அடித்து விட்டார். பசு மாட்டுக்காரனுக்கு ஒரே வருத்தம். 'இந்தப் பசு இப்படி அடிபடறதே' என்று ஒரு மரக் கட்டையை அதன் கழுத்திலே கட்டி வைத்தான். பசு அப்படி இப்படிப் போனால் அந்தக் கட்டை ஆடி, அதன் முட்டியிலே இடிக்கும். இடித்தால் ஏகமாய் வலிக்கும். அதனாலே பசு மேயப் போவதை நிறுத்தி விட்டது!

நாமும் அப்படித்தான். விஷ்ணு சஹஸ்ர நாமம் என்கிற தடி கட்டி வைத்திருக்கு நமக்கு! – தினமும் இரண்டு மணி நேரம் அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதாலே மனம் அங்கே இங்கே போகாமல் இருக்கிறது. எல்லோரும் ஒரே இடத்திலே ஒரே மனத்துடன் பகவானை நினைக்க ஒரு வாய்ப்பு கிடைக்கிறது. கலியுகத்திலே இதைப் போன்ற கூட்டுப் பிரார்த்தனைக்கு மகிமை அதிகம். இப்படி உபன்யாஸம் சொல்லிக் கொண்டேயிருந்து, கேட்டுக் கொண்டேயிருந்தால் பகவத் அனுக்கிரஹத்தினாலே ஒருநாள் எல்லாம் புரிய ஆரம்பிக்கும். அதுவும் அவன் அருளால்தான் நடக்கிறது!

ஆக, அறிய முடியாத தன்மையைத்தான் 'அபூர்வ:' என்கிற பதில் மூலம் பலிசக்ரவர்த்திக்கு உணர்த்தினான் பகவான்.

சக்ரவர்த்தி அடுத்த கேள்வி கேட்கிறான் :

"சரி, உங்களுக்கு எந்த ஊர்?"

"பிரும்ம சிருஷ்டியிலே இருக்கும்படியானது மொத்தமும் என் ஊர்தான்!"

இந்த பதிலைக் கேட்டு பலி சக்ரவர்த்திக்கு 'ஐயோ பாவம்!' என்று தோன்றியதாம். 'இவ்வளவு தேஜஸ்வியாய் இருக்கிறாரே... இவருக்கு இவ்வளவு ஏழைமையா!' என்று வருத்தம் வந்ததாம்.

"இந்த சென்னை மொத்தமும் என்னுது" என்று ஒருத்தர் சொன்னாரானால் என்ன அர்த்தம்? ஒரு அடி மண் கூட சொந்தமில்லை – மேலே ஆகாசம் கீழே பூமின்னு வாழ்கிறவர் என்றுதானே அர்த்தம்! அப்படி அர்த்தம் புரிந்துகொண்டான் மஹாபலி.

அடுத்த கேள்வி கேட்டான் :

"உங்க அப்பா என்ன பண்ணுகிறார்? யாருடைய பிள்ளை நீர்...?"

"நான் அனாதை. எனக்கென்று யாரும் கிடையாது."

இதைக் கேட்டு பலி சக்ரவர்த்திக்கு ரொம்ப வீர்யம் ஏற்பட்டுப் போய்விட்டது.

'ஆஹா! எப்பேர்ப்பட்ட பாத்திரமிது! நல்ல பாத்திரத்திலே தானம் செய்ய வேண்டும் என்பது சாஸ்திரமல்லவா... வந்திருப்பவரோ ஏழை, அப்பா – அம்மா கிடையாது. பிரும்ம தேஜஸ் வேறு சொட்டுகிறது அவரிடத்திலே...' என்று எண்ணுகிறான். பெரிதாக ஒரு வார்த்தை வருகிறது அவனிடமிருந்து.

"என்ன வேண்டும் உனக்கு...? என்ன வேண்டுமானாலும் கேள்; தருகிறேன்."

பகவான் தன் சின்ன திருவடியைக் காட்டிச் சொல்கிறான் – "இந்த அடியினாலே மூன்றடி மண் வேண்டும்."

"அதற்கு மேலே வேண்டாமா...?"

"வேண்டியதில்லை. அதிலேயே சந்தோஷம் எனக்கு ஏற்படும்."

இந்த சம்பாஷணையை சுக்ராச்சார்யார் பார்த்துக் கொண்டேயிருக்கிறார். 'இவனுக்காக இவ்வளவு தூரம் சிரமப்பட்டு யாகத்தை செய்து கொண்டிருக்கிறோம்.... இந்தச் சமயத்திலே ஏமாற்றுவதற்கென்றே ஒருவன் வந்திருக்கிறானே...!'

மஹாபலியை எச்சரித்தார் சுக்ராச்சார்யார். ஆனால் பலிசக்ரவர்த்தி கேட்கவில்லை. 'சாக்ஷாத் நாராயண'னே வந்தாலும், அவன் கை தாழ்ந்து யாசிக்க, என் கை உயர வேண்டும் என்று இருக்கிறதே.... அதுவும் அவனுடைய சங்கல்பத்தினாலேதானே அமைந்திருக்கிறது. அதனால் அவன் கேட்டதைக் கொடுப்பேன்' என்றான்.

பரம பாகவதோத்தமன் அந்த பலி சக்ரவர்த்தி. தேவதைகளைச் சித்ரவதை பண்ணினாலும் சொன்ன வாக்கை காப்பாற்றியவன். தன்னிடம் யாசித்தது பகவானே என்று உணர்ந்த பிறகும் அவன் பின்வாங்கவில்லை.

மஹாபலியின் தர்மபத்தினி வித்யாவளி, அவன் தானம் கொடுக்கும்போது அருகிருந்து தீர்த்தம் சேர்க்க வருகிறார். அப்போது சுக்ராச்சார்யார் தவளை வடிவாக மாறி, கமண்டலத்திலிருந்து ஜலம் விழுவதைத் தடுக்கிறார்.

அப்போது பகவான் தம் கையில் அணிந்திருந்த விச்வாமித்ர தர்ப்பத்தினால் அந்த கமண்டலத்தின் தாரையைக் குத்துகிறார்.

தர்ப்பத்தை, பகவான் கையிலே வைத்திருக்கிறார். தேஜஸ் மிகுந்த பிரும்மச்சாரியாய் வந்தார் என்று பார்த்தோமல்லவா. அந்தக் கோலத்துக்கு உரியதுதான் இந்த தர்ப்பம் (தர்பை). கிருஷ்ணாஜனம் என்னும் வஸ்திரத்

தாலே மார்பைப் போர்த்திக் கொண்டு வருகிறார். மார்பை ஏன் மறைத்துக் கொள்கிறார் என்றால், அந்த பிரும்மச்சாரி கோலத்திலும் மஹாலக்ஷ்மி தாயார் விடாமல் அவன் திருமார்பிலே வாசம் பண்றாளாம். அவள் பார்வை மஹாபலியின் பக்கம் படக்கூடாது என்பதற்காக மார்பை மறைத்துக் கொண்டானாம் பரமாத்மா. லக்ஷ்மி கடாக்ஷம் பட்டு விட்டால் மஹாபலிக்குக் கொள்ளைக் குறையா செல்வமல்லவா ஏற்படும்! அப்புறம் அவதார பூர்த்தி ஆகாது அல்லவா!

எனவே கிருஷ்ணாஜனம் போர்த்தி வருகிறார் பகவான். மஹாபலியின் மனைவி தீர்த்தத்தை அவர் கையிலே விடும்போது அதை வாங்கிக் கொள்வது போல, தம் கையில் இருக்கும் தர்ப்பத்தைக் கொண்டு சுக்ராச்சார்யாரின் கண்ணைக் குத்தி விடுகிறார். அவருக்கு ஒரு கண்ணே போய் விட்டது!

தர்ப்பத்தால் குத்தினால் கண் போய் விடுமா? என்று கேட்டால், பகவான் சுதர்ஸன சக்ரத்தை அல்லவா பவித்ரமாகப் (விரலில் மோதிரம் போல் அணியப்படும் தர்ப்பை) போட்டுக் கொண்டிருக்கிறான்? அதனால் அத்தனை சக்தி, தர்ப்பத்தைக் கொண்டு செய்த அந்த பவித்ரத்துக்கு!

கிண்டியிலிருந்து ஜலம் பகவான் கையிலே விழுகிறது. அந்த நேரத்திலே அவன் திருவடி எங்கே போச்சு.... என்று கேட்டால்.... நீண்டு கொண்டே போகிறது! பூலோக மேலோகங்களெல்லாம் தாண்டி, பிரும்மாவின் உறைவிடமான சத்யலோகம் வழியே போகிறது அந்தத் திருவடி. சத்யலோகத்தையும் தாண்டிப் போய் ஆவரண ஜலத்தைக் கிழிக்கிறது!

ஆவரண ஜலம் என்றால் ஒவ்வொரு அண்டத்தையும் சுற்றிக் காணப்படும் ஜலம். கருவிலே சிசுவைச் சுற்றி ஜலம் இருப்பது போலே ஒவ்வொரு அண்டத்தைச் சுற்றியும் இப்படி ஆவரண ஜலம் இருக்கும். பகவானின் திருவடி இந்த ஆவரண ஜலத்தைக் கிழித்து விடுகிறது.

பிரும்ம லோகத்தைத் தாண்டி ஆவரண ஜலத்தை நோக்கிப் போன அந்தத் திருவடியை பிரும்மா பார்த்தார். நான்கு வேதங்களும் தேடிக் காண முடியாமல் தோற்ற திருவடி! மனகம் வாக்கும் அலைந்து தேடியும் கண்டறியாத திருவடி!

மனமும் வாக்கும் அந்தத் திருவடியைத் தேடி அலைந்த கதையொன்று உபநிஷத்தில் உண்டு... அதை அடுத்த வாரம் சொல்கிறேனே....

(தொடரும்)

குழந்தை, நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிற அப்பாவின் சைக்கிளைப் பார்த்து விட்ட மாதிரி என்ன பாதுகாப்பு தருகிறது!

இந்த முறை ஆர்மி போஸ்டிங் லேலடாக்கில். பதட்டம் கூடுதல். விளைவு? விடுமுறை கிடைப்பது பிந்தி விட்டது.

மனசு ரொம்ப அலைந்து விட்டது. ஜங்ஷனுக்காக. மேம்பாலத்துக்காக.

மேம்பாலத்தில் ஹரிபாவாவின் ஒட்டை ஹார்மோனிய சங்கீதம் கேட்டு பதினான்கு மாதங்கள் ஆகி விட்டன. அப்புறம்... அப்புறம்...' சாரு மதியோடு பேசிக் கொண்டே ஏறி வந்த படிகள்.

கிழக்கும் மேற்குமாக நீண்ட மேம்பாலத்தின் நடுவில் நின்று இரும்பு கர்டர்களைப் பிடித்த படி கீழே ஓடும் தண்டவாளச் சிற்றாறுகளைப் பார்த்தவாறே அவளோடு செலவழித்த சிற்சில நிமிடங்கள்.

# செய்தி



அந்த நிமிடங்களுக்கு அதைப் போன்ற யாராருடையவோ எந்தெந்த நிமிடங்களுக்கோ, ஒரு யுகாந்திர சாட்சியம் போல் கம்பீரமாக நிற்கும் ஏலகிரி மலை.

தொலைந்து போகிறோம். கண்டுபிடிக்கிறோம். மீண்டும் தொலைதல். மறுபடியும் கண்டுபிடிப்பு.

ஜங்ஷனில் ரயில் நுழையும் முன்பே மேம்பாலம் தெரிந்தது. ஜன்னல் வழியே எட்டிப் பார்த்த தர்மராஜுக்கு மனசு ஜிவ் வென்று தூக்கிற்று. கையில் இருந்து ஊச்சென்று ஆகாயத்திற்கு வீசி விட்ட புறாப் போல. சிக்னல் விழாததால் அவுட்டரில் நின்றது.

ரயில் வந்த வழியில் எத்தனையோ மேம்பாலங்கள். ஜங்ஷன்கள்.

ஆனால் இந்த ஜங்ஷன். இந்த மேம்பாலம். ஆள் கூட்டத்திலே தொலைந்து போன

லேலடாக்கில் உறைபனியும் உதிர் பனியும் கைகோக்கும் குளிரில் வலது பக்கத்துக் கட்டிலில் பாஸ்கரன் நாயர் சொன்னான்.

"நீ ஒரு ரொமாண்டிக் நோயாளி!"

இடதுபக்கக் கட்டிலில் கரீந்தர் சிங்குக்குப் பதிலடி கொடுக்கத் தோன்றியது.

"யார்தான் இல்லை? நீ, நான்.... எல்லா மனுஷனும் என்னிக்கோ ஒருநாளாவது ரொமாண்டிக் நோயாளிதான்! இல்லேன்னு

எவன் சொன்னாலும் அது பொய்."

இந்த முறை இருவருமே டில்லி வரை உடன் வந்தார்கள். ஆக்ராவுக்கும்.

தாஜ்மஹால் சற்று கறுத்து விட்டிருந்தது.

பாஸ்கரன் நாயர் என்ற சினிக்குக்குக் கூட அது வருத்தம்.

சுரீந்தர் சிங் தர்மராஜின் தோளை உள்ளங்கை அழுந்த வலுவாகப் பிடித்தான். அது ஒரு செய்தி. வாய் விட்டுச் சொல்லாத செய்தி. தாஜ்மஹாலின் சலவைக்கல் சங்கீதம் போல.

இருவருமே நல்ல நண்பர்கள்தாம். சுரீந்தர் சிங் ரொம்ப சென்ஸிடிவ். அவன் தாய் ஒரு வங்காளி.

தாஜ்மஹாலின் அர்த்தம் சுரீந்தருக்கு உரிய விதத்தில் புரிந்திருந்தது. தர்மராஜையும் கூட.

சாருமதி ஏன் அவனை நிராகரித்தாள் என்று சுரீந்தர் கேட்கவே இல்லை.

ஒருவிதத்தில் ஹரிபாவாவும் அவனும் ஒன்றுதான்.

ஹரிபாவா பார்த்தார்.

சுரீந்தர் கேட்டுக் கொண்டான்.

இரண்டிற்கும் பெரிய வித்தியாசம்.

கண்ணால் ஒன்றை மௌனமாகக் காண்பதற்கும் காதால் ஒன்றை ஒருதலையாகக் கேட்பதற்கும் உரிய வித்தியாசம்.

ஒன்று சாட்சி. மற்றொன்று வாக்குமூலம்.

"நிராகரிக்கப்படுவதோ அங்கீகரிக்கப்படுவதோ அல்ல விஷயம். யுவர் கபாஸிடி ஆஃப் லவ், டு லவ்... அதுதான். அது முக்கியம்."

எதையோ யோசித்துவிட்டு ஒருநாள் சுரீந்தர் சொன்னான்.

# சொல்லாத சங்கீதம்

## வையவன்

**க**ல்லூரி விடுமுறையில் கிராமத்து பாங்கில் மானேஜராய் இருந்த அண்ணன் வீட்டிற்கு வந்த சாருமதிக்குப் பேசிப் பழகக் கிடைத்த ஒரே நபர் தர்மராஜ்தான்.

துஷ்பிரயோகம் செய்து கொள்ள வசதியாக எத்தனையோ சந்தர்ப்பங்கள். சுதந்திரங்கள்.

எப்படியோ பாங்க் மானேஜருக்கும், சாருமதிக்கும் அவற்றை தர்மராஜ் ஒருக்காலும் பயன்படுத்திக் கொள்ள மாட்டான் என்று புரிந்திருக்கிறது.

என்ன ஒரு நம்பிக்கை அது!

ஆற்றங்கரை சிவன் கோவிலுக்கு அன்றாடம் மாலையில் நடந்து செல்வது.

கவிதை. கம்ப்யூட்டர். க்ரையோஜெனிக்ஸ். காம்பஸ் வாழ்க்கையின் தறிகெட்ட போக்கு. செக்ஷுவல் பெர்வர்ஷன்கள். அச்சுறுத்திக் கொண்டிருக்கும் உலகின் எதிர்காலம்.

எதைத்தான் விட்டு வைத்தார்கள்?

ஆனால் என்ன பேசினாலும் சாருமதியிடம் ஒரு தேவதையின் மேன்மை, லகுவான, இயல்பான ஒரு பெருமிதம்.

புன்மையான விஷயங்களைப் பேச நேரும் போது நேரடியாகச் சொல்ல மாட்டாள். வருத்தமாகச் சிரிப்பாள். புன்மைகளுக்குக் கூட சிறிது அனுதாபம் தேவை போல.

உலகம் அவளது ஆசீர்வாதத்திற்கும் கருணைக்கும் பாத்தியப்பட்டிருப்பது போல் தர்மராஜ் நினைத்தான்.

அது ஆராதனையோ என்று அவனுக்குள்ளேயே கேள்வி எழும்.

சாருமதியின் கண் தெளிவும், புன்னகைத் தூய்மையும் ஆராதனையில் எழும் தற்கூச்சத்தை அகற்றின. இருந்தாலென்ன?

வெகுகாலம், ஏன் பல பிறவிகளாகப் பழகிய நண்பர்கள் போல்தான் இருவரும் நடந்து கொண்டனர்.

ஆராதனையிலும் அசல்நட்பிலும் பேதமில்லை. ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவில் உதிக்கும் பேதமோ, ஸ்வரபேதமோ இல்லாத பரிச்சயம் அது.

ஒன்றாக நடந்தார்கள். சிரித்தார்கள். சாப்பிட்டார்கள். சீட்டாடினார்கள். சங்கீதம் கேட்டார்கள். சினிமா பார்த்தார்கள்.

"யூ ஃபூல்... எப்படியெல்லாம் சான்ஸை மிஸ் பண்ணியிருக்கே" என்று பாஸ்கரன் நாயர் கை உதறியிருப்பான்.

பருந்திற்கு இறைச்சிதான் தெரியும்.

அவனிடம் சொன்னதில்லை.

"உன்னை ரொம்ப க்ளவரா பொழுது

போக்க கம்பானியனா பயன்படுத்தியிருக்கா. நீ ஒரு பூச்சி" என்று மேலே போயிருப்பான்.

பெருச்சாளிகள் வளை தோண்டும்.

சட்டென்று சிக்னல் விழுந்து ரயில் ஜங்ஷனில் நுழைந்தது.

தர்மராஜ் இறங்கினான். கூட்டம் வடியும் வரை காத்திருந்தான். பின்பு படியேறி மேம் பாலத்தை மிதித்தான்.

முதலடி வைத்ததுமே வருஷா வருஷம் வந்தாலும் சிலிர்த்தது. அவனோடு சேர்ந்து முதல் முதல் வந்த அந்த முன்னிரவு. ஊரெல் லாம் விளக்கு வைத்த தீபம் மாதிரி மனை திண்டாடிய அந்தப் பரவசம்.

தர்மராஜ் சூட்கேஸை நெடுக்கு வாட்டில் கர்டர் ஓரம் நகர்த்தி அதன் மீது உட்கார்ந் தான்.

தொடுவானில் தொலைந்து போன அந்த முன்னிரவு ஒரு தூரத்து நட்சத்திரமாகச் சிரித் தது.

"அப்பப்பா... காத்து என்னமா பிச்சுகிட்டுப் போகுது!" என்று இடைவெளி விட்டு ஆட் டோவில் அமர்ந்திருந்த சாருமதி கேட்டாள்.

காற்றின் வேகம் அவள் புடைவைத் தலைப்பை சரித்து அவன் முகத்தின் மீது தொட்டுத் தொட்டுப் படர வைத்தது. என்ன மணம்.

"யாரைப் பார்க்கப் போறோம்?" என்று கேட்டான் தர்மராஜ்.

"பார்க்கப் போறதில்லே. வழியனுப்பப் போறோம்" அவள் சிரித்து விட்டுச் சொன் னாள்.

"யாரை?" மீண்டும் துளைத்தான் தர்மராஜ்.

"பாக்கத்தானே போறே?"

"சொல்ல மாட்டியா?"

லேசாகக் கண்களைச் சிமிட்டி விட்டு சாருமதி சிரித்தாள். அடுத்து "சஸ்பென்ஸ்" என்றாள்.

"உன் சஸ்பென்ஸை எல்லாம் காட்ட றதுக்கு கை சொடுக்கியதும் ஓடி வர்ற நாய்க் குட்டி மாதிரி நானும் கிளம்பிட்டேன்."

"தோ பார்ப்பா... நீயே ஏன் ஒன்னை இன்ஸல்ட் பண்ணிக்கறே? நீ ஏன் வந்தே?"

"ஏதோ ஒங்கண்ணா உள்ளூர் பாங்க் மானேஜர் ஆச்சே. ஏதாவது லோன் சாங்ஷன் பண்ணுவாரே... அதுக்கு நீ ரெகமெண்ட் பண்ண மாட்டியான்னு வந்தேன்!"

ஜங்ஷன் மேம்பாலம் வந்து விடவே அவள் ஆட்டோவிலிருந்து முதலில் இறங்கினாள். ஆட்டோக்காரரிடம் காசைக் கொடுத்துவிட்டு அவன் அடுத்து இறங்கினான்.

"நெஜம்மா சொல்லு... நீ அதுக்காக மட்டும்தான் நான் கூப்பிட்டதும் வந்தியா?"

தர்மராஜ் அவளது விரிந்த விழிகளை உற்றுப் பார்த்தான்.

## அருள் வாக்கு



ஜலத்துக்கு நிறைவு சமுத் திரம். டம்ளரில், செம்பில், குடத் தில், அண்டாவில், கிணற்றில், குளத்தில், நதியில் என்று ஒன் றைவிட ஒன்று ஜாஸ்தியாக இருக்கிற ஜலம் கடைசியில் சமுத்திரம் என்று முடிகிறது. இப்படியே ஞானத்துக்கும், கிருபைக்கும் நிறைவான சமுத்திரம் பராசக்தி. நமக்குக் கொஞ்சம் அறிவு, கொஞ்சம் அன்பு இருக்கிறது. பிராணிகளுக்கு நம்மைவிடக் குறைவு. நம்மை விட ஜாஸ்தி அறிவுள்ள, ஜாஸ்தி கிருபா சக்தி உள்ள தேவ ஜாதிகள் இருக்கின்றன. நம்மிலேயே மஹான்களானவர்கள் மகா ஞானிகளாக, பரம காருண்யத் தோடு இருக் கிறார்கள். இந்த ஞானம், கிருபை பூரணமாக நிறைந்த இடத்தைத் தான் ஸ்வாமி, பர மாத்மா, பராசக்தி என்று சொல்வது.

எல்லாவற்றையும் அறிகிற ஞானம் அது; அறிகிறது மட்டுமில்லை, அறியப்படுகிற எல் லாமுமே அதுதான். அதற்கு வேறாக இன் னொன்று இருந்து, அதை இது அறிகிறது என்றில்லை. அப்படி இன்னொன்று இருப் பதற்கு இடம் இருந்து விட்டால், இது எங்கும் நிறைந்த பூரணம் ஆகாது. இன்னொன்று

அவற்றில் எந்த உட்பொருளும் இல்லை. காரணமற்ற உல்லாசம் தவிர.

மழை துரத்துவது போல் பாய்ந்து வந்த பெருங்காற்று சட்டென்று நின்று விட்டது. இடிமுழக்கம் இடம் மாறிவிட்டது.

ஆட்டோக்காரர் போய் விட்டார்.

இருவரும் இடம் பொருள் மறந்து மேம் பாலம் ஏறாமல் நின்றனர். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு.

ஜங்ஷனில் அது எந்த ரயிலும் வராத நேரம். போக்கு வரவு இல்லை. ஒரு தெரு நாய் முதல் படிக்கட்டில் சுருண்டு படுத்திருந்தது.

"ஏன் என்னை அப்படிப் பார்க்கிறே?" என்று சாருமதி கேட்கக்கூடியவள்தான். ஆனால் கேட்கவில்லை.

வழியெல்லாம் வயல்கள். காற்றில் குதூக லித்த பயிர்கள். சலசலத்த மரங்கள். உற்சவ வெடிகள் போல் கேட்ட, ஆங்காங்கே அறைந்து மூடிய கதவு ஜன்னல்கள்.

எல்லாமே அவனை எதையோ சமர்ப்பிக் கச் சித்தமாக்கியது போல் ஒரு மனோநிலை.

அவளை அவன் வெகு சுலபமாகத் தொட்டிருக்க முடியும். இடையில் கைகோத்து அருகே இணைத்து மோவாயில் கை வைத்து நிமிர்த்திக் கண்ணுக்குக் கண்ணான நேர்ப்பார் வையில் பார்த்துக் கொண்டே அந்தச் செய்தி

துளித்துளி இருந்துவிட்டால் கூடச் சரி, இதற்குக் குறைதான்- இது அந்தத் துளியில் இல்லாததால் இது பூரணமில்லை, நிறைந்த ஒரே நிறைவில்லை என்று தானே அர்த்தம்? இதனால் என்ன முடிவாகிறது என்றால், பரமாத்மாவைத் தவிர அறியப்படுகிற வஸ்து என்று இரண்டாவது பதார்த்தமே கிடையாது என்பதுதான்.

அப்படியானால் இத்தனை ஜீவாத்மாக்கள் வேறு வேறாக இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறோமே இது என்ன? இது ஒரு பெரிய வேஷம்தான், மாயா நாடகம்தான். வேஷம் கலைந்து விட்டால், நிறைந்த நிறைவான ஒன்றே ஒன்றுதான், அதுவே அறிவாக நிற்கும். 'சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே' என்று தாயுமான ஸ்வாமிகள் சொல்கிற அறிவு! அது பூரணமானதால், அதனால் அறியப்பட வேண்டிய வஸ்து என்று வேறு எதுவுமே இல்லை. தன்னையே அறிந்து கொண்டிருக்கிற அறிவு அது.

இப்படி இரண்டாவதாக வேறே இல்லாமல் ஜீவாத்மாவை அந்தப் பரமாத்ம சமுத்திரத்தில் கொண்டுபோய்க் கரைப்பதுதான் வாஸ்தவமான நிறைவு.

**-ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

யைச் சொல்லி இருக்க முடியும்.

சூழ்நிலையும், முன்னிரவும் ஆட்டோப் பயணமும் வழங்கிய அந்த சுதந்தரத்தை அவள் அனுமதித்திருப்பாள். மறுத்திருக்க மாட்டாள். அறிவான்.

ஆனால் அவன் விலகியே நின்றான்.

அந்த இடைவெளி கௌரவமானது. தொழுகைக்கு உரியது என்று அவன் நினைத்தான்.

"சாரு..."

"ம்ம்ம்" மேலே முன்னேறிச் சொல்ல வந்ததைச் சொல்லு என்பது போல், நிஷ்களங்கமாகக் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு அவள் சிரித்தாள்.

நிரம்பி வழிந்து மோதித் ததும்புகிற மேட்டூர் அணையின் மதகு திறக்கிற பொறுப்பு இருப்பது போல் அவனுக்கு மேல் மூச்சு வாங்கியது.

"ஒண்ணும் சொல்லாதே! பேச வேண்டாம்"

தர்மராஜ் திணறினான்.

சாருமதி அவனுடைய திண்டாட்டத்தை கண்டு ரசிப்பது போல் வாய்விட்டு ஆனந்தமாகச் சிரித்தாள்.

இவள் தன்னைப் பரிகசிக்கிறாளோ? ஏதோ விளையாட்டுப் பொருள் என்று நினைக்கிறாளோ? இல்லை, இது முற்றிலும் குழந்தைத் தனமா?

தேவையில்லாத சந்தேகம் குறுக்கிட்டது. எதுவாய் இருந்தாலென்ன என்று ஓர் ஆவேசத்தில் அது ஓடி மறைந்தது.

"நீ என்னை வேணாம்னு கூடச் சொல்லிடு. மறுத்திடு. திட்டு. கோவிச்சுக்கோ."

சாருமதியின் ஆனந்தம் தடைப்படவில்லை. அந்த சிவந்த உதடுகளிலும் கறுத்த கண்களிலும் ஒரு துல்லியமான மகிழ்ச்சியில் திளைக்கிற நிறைவு தெரிந்தது.

"நான்.... நான் உன்னை எவ்வளவு எவ்வளவுன்னே சொல்ல முடியாத அளவு நேசிக்கிறேன்."

காட்டுத் தீ அனல் ஜ்வாலையாக உயர்ந்து நிற்கும்போது அதைக் கண்டு பயமில்லாமல் ரசிக்கிற குழந்தை போல் அவனைப் பார்த்து சாரு சப்தமின்றிச் சிரித்தாள்.

இப்போது எல்லாமே சுலபம். விரல் மீட்டிய வீணையின் கம்பிகள் நெகிழ்ந்திருக்கின்றன. விரும்பிய ராகத்தை வாசித்து விடலாம்.

ஆனால் இந்தத் தருணம்?

இச்சைகளின் சாம்பல் மீது நின்று ஆடும் இந்தச் சுடரின் ஒளி?

"முடிஞ்சாச்சு" என்று சகஜமாகக் கேட்டு அவனை மீட்டு விட்டாள் சாருமதி.

அவன் முகத்தில் வருத்தம் கலந்த ஒரு மகிழ்ச்சிப் பிரவாகம். ஏதோ பெரிய வெகுமதி பெற்று இதற்கு நான் தகுதியா என்கிற ஆச்சரியம்.

முதல் ஏற்றத்தில் ஹரி பாவா உட்கார்ந்திருந்தார். தலையில் வட்டத் தொப்பி. பாதி மார்பு வரை படர்ந்து மூடிய வெள்ளைத் தாடி.

இருவரையும் பார்த்தார். தம்பதிகளாக வந்திருக்கிற பேரக் குழந்தைகளைப் பார்த்துக் களிக்கிற முகபாவம்.

ஹார்மோனியப் பெட்டி அசைகிறது. விறுவிறுவென்று விரல்கள் ஓடி விளையாடுகின்றன.

'அபுதேரசிவா கௌன்ஹமாரா கிருஷ்ண கன்னையா' பழைய ஹிந்திப் பாட்டு. புது ஜீவன் பெற்றது போல் ஒரு நயம்.

இருவரும் நின்றனர்.

"இன்னொரு பாட்டு" சாருமதி கேட்டாள்.

"சொப்பன வாழ்வில் மகிழ்ந்து"

ஹரி பாவா பாடவில்லை. ஹார்மோனியம் ஒலித்தது.

மெய்ம்மறந்து இருவரும் கேட்டனர்.

"எல்லாம் பழைய பாட்டுத்தானா?" சாருவே கேட்டாள்.

ஹரிபாவா வெள்ளைப் பல் தெரியச் சிரித்தார். தலையசைத்தார்.

"வேற ஒரு பாட்டு? காதல் பாட்டு?"

"வள்ளிக்கணவன் பேரை வழிப்போக்கர் சொன்னாலும் உள்ளம் குளிருதடி" விரல்கள் தேர்ந்த கலைஞர்தான் என்று அடித்துப் பேசின.

சாருமதி ஐந்து ரூபாய் நோட்டை நீட்டினாள்.

ஹரிபாவா புன்முறுவலும் வினயமும் மின்ன மறுத்துத் தலையசைத்தார்.

"அதிகமா வேணுமா?" தர்மராஜ் கேட்டான்.

"அம்பது பைசா போதும். ஒரு டீ"

அப்போது ஜங்ஷனுக்கு வெளியே டீக் கடைகளில் அதுதான் டீயின் விலை.

"இதிலே பத்து டீ வருமே?"

"இப்ப ஒரு டீ போதும்"

ஐம்பது பைசாவைத்தான் ஹரிபாவா வாங்கிக் கொண்டார்.

"விநோதமான ஆள்" என்று மேம்பாலத்தில் நடக்கும்போது சாருமதி சொன்னாள்.

தர்மராஜ் மௌனமாய் நடந்தான்.

அன்று அவர்கள் வழியனுப்ப வந்தது ஓடிப்போகும் ஒரு காதல் ஜோடியை. பெண், சாருமதியின் கல்லூரித் தோழி. ஜாதி அந்தஸ்து என்று பெற்றோர்களிடையே பெரிய முரண்பாடு. சாருமதியை ஜங்ஷனுக்கு வரச் சொல்லியிருந்தாள் தோழி. வாழ்த்துக் கூறி பரிசு கொடுத்தாள் சாருமதி.

'நீயும் என் கேஸா?' என்பது போல் அந்த ஆண் தர்மராஜைப் பார்த்தான்.

வேதனையும் இரக்கமும் தொனிக்கிற ஒரு சிரிப்பை உதட்டுக்குள் நிறுத்திக் கொண்டான் தர்மராஜ்.

அவர்கள் ஏறிய ரயில் போய் பதினைந்து நிமிஷங்கள் சாருவும் தர்மராஜூம் ஜங்ஷனின் மர பெஞ்சில் உட்கார்ந்திருந்தனர்.

பேசவில்லை.

பேச்சு அவசியமில்லாதது போல் ஒருவரை ஒருவர் புன்னகையோடு பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

"போவோமா?" என்று சாருமதி எழுந்தாள்.

"போவோம்" அவன் தொடர்ந்தான்.

கல்லூரி விடுமுறை முடிந்து சாருமதி கல்லூரிக்குத் திரும்பிப் போனாள்.

காத்திருந்தான்.

பாங்க் மானேஜருக்கு மாறுதல் உத்தரவு- தெற்கே வெகு தொலைவில். வழியனுப்பி வைத்தான்.

பிறகும் தர்மராஜ் காத்திருந்தான்.

சாருமதியிடமிருந்து ஒன்பது மாதம் வரை ஒரு தகவலும் இல்லை.

எனினும் ஒரு நம்பிக்கை. காத்திருந்தான்.

திடீரென்று ஒருநாள் ஒரு திருமணப் பத்திரிகை. எவனோ ஒரு மெரைன் எஞ்சினியருக்கும் சாருமதிக்கும் அடுத்த வாரம் திருமணம்

> "சர்வர் காபியில இரண்டு ஈ இருக்கு...."
> "COFFEE- ல இரண்டு ஈதான் சார் இருக்கணும். இல்லைனா அது ஸ்பெல்லிங் மிஸ்டேக்காயிடும்!"
> - பா. ஜெயக்குமார்

என்ற பளபளப்பான அட்டையில் வந்த அழைப்பிதழ். வெகு நேரம் அதை வெறித்துப் பார்த்தான்.

அன்று அவன் ஜங்ஷனுக்கு வந்தான்; ஹரிபாவா ஹார்மோனியம் வாசித்தார். வெகு நேரம்.

அவன் முகத்தில் என்னமோ அவருக்குப் புரிந்திருக்க வேண்டும். பரிவும் பிரியமும் கலந்த ஒரு சிகிச்சை செய்கிற புன்னகையோடு வாசித்தார்.

அன்றும் அவன் ஐந்து ரூபாய் நோட்டை நீட்டினான். மறுத்தார்.

"ஐம்பது பைசா"

"ஏன் அதிகமா வாங்கிக்க மாட்டேங்கிறீங்க?"

"அதிகமா வாங்கினா எதிர்பார்ப்பு அதிகமாயிடும். ஆசை வரும். சந்தோஷம் போகும்."

ஹரிபாவா சுருக்கமாகச் சொன்னார். சட்டென்று நாகேஸ்வரராவ் நடித்த தேவதாஸிலிருந்து 'துணிந்தபின் மனமே நீ துயரம் கொள்ளாதே' பாட்டை ஹார்மோனியத்தில் வாசித்தார்.

பின்பு சிரித்தார். பெயர் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

"ஹரிபாவா... நீங்க காதலிச்சிருக்கீங்களா?"

அவர் அதற்கு ஹார்மோனியத்திலேயே பதில் சொன்னார்.

"காதலே... தெய்வீகக் காதலே" - பாதாள பைரவிப் பாட்டு.

ஐம்பது பைசாவைக் கொடுத்தபின் எழுந்து தர்மராஜ் மேம்பாலத்தின் மேலும் கீழும் இரண்டு முறை நடந்தான்.

இழந்தது போன்ற உணர்வு மாறிவிட்டது.

சாருமதியின் மீது கோபம் வரவில்லை. ஏமாற்றமில்லை.

ஒரு பெண்ணிடம் இப்படித் தன்னை நூறு சதவீதம் சமர்ப்பித்தது குறித்து வெட்கமோ வருத்தமோ இல்லை.

எவ்வளவு உயர்வாகத் தன்னை ஒருத்திக்கு வழங்க முடிந்தது? அது விளையாட்டல்ல. பொழுதுபோக்கல்ல. உணர்ச்சி வேகமல்ல.

தர்மராஜ் திருப்தியுற்றான்.

அந்த வருஷம் பட்டாளத்துக்கு ஆள் எடுக்கும்போது தர்மராஜ் போனான்.

அதில் தன்னிரக்கம் இல்லை. ஒரு தோல்வியைக் கொண்டாடும் பேதைமை இல்லை.



தோன்றியது. போனான். தேர்ந்தெடுக்கப்பட்டான்.

ஒவ்வொரு வீவிலும் மேம்பாலம் கடந்துதான் ஊர் வர வேண்டும். அங்கே ஹரிபாவா. அவர் சங்கீதம்.

இதேபோன்று மேம்பாலத்து இரும்பு கர்டரைப் பிடித்துக் கொண்டு தொடுவானம் பார்ப்பது ஒரு சுகானுபவம்.

அவன் வழக்கமான தர்மராஜ் அல்ல என்று சிலர் சொன்னார்கள். அவன் சிரித்துக் கொண்டே மறுத்தான்.

அது உண்மை. அவன் மாறியிருந்தான். கனிந்திருந்தான். எல்லாருக்கும் அது தெரிய வேண்டிய அவசியம்?

தர்மராஜ் சூட்கேஸைத் தூக்கிக் கொண்டு மேம்பாலத்தில் நடந்தான்.

முதல் இறக்கம். ஹரிபாவா முழங்கையால் முகம் மறைத்துப் படுத்திருந்தார்.

"பாவா... பாவா" எழுப்பினான்.

"அடடே, தர்மராஜ்" துள்ளிச் சிரித்துக் கொண்டே எழுந்து உட்கார்ந்தார். "எப்ப வந்தாப்பிலே?"

"இதோ இப்பத்தான்" என்று சொல்லிக் கொண்டே மாட்டியிருந்த தோள் பையிலிருந்து சாந்தினி சௌக்கில் வாங்கிய வட்டத் தொப்பியை எடுத்து அவரிடம் நீட்டினான்.

அதைக் கையில் வாங்கியவர் திருப்பி அவன் தலையில் மாட்டி விட்டு, ஹரிபாவா ஹார்மோனியத்தின் கொக்கியை நீக்கினார்.

"எந்தரோ மஹானுபாவுலு அந்தரிகி வந்தனம்" சரசரவென்று சுருதி சுத்தமாக கிருதி வந்து விழுந்தது.

அவர் எதிரில் சப்பணம் கட்டி உட்கார்ந்தான்.

அவன் கண்மூடித் திளைத்தான். நேரம் மறந்து, மறந்து நிலை மறந்து.

"சார் கொஞ்சம் நகர்ந்து உட்காரக் கூடாதா?" என்று யாரோ சொன்னது கேட்டதும் நடைவழியில் உட்கார்ந்திருக்கிற ஞாபகம் வந்தது.

ஒதுங்கியவாறே நிமிர்ந்து பார்த்தான்.

தலையில் சுமையோடு ஒரு போர்ட்டர். கூட? சாரு. அவனுடைய சாருமதி.

பக்கத்தில் நிற்பவன்தான் அந்த மெரைன் எஞ்சினியரோ?

முதலில் சாருமதிதான் கைகூப்பினாள்.

முகத்தில் அதே மலர்ச்சி. அதே புன்னகைத் தூய்மை. கண் தெளிவு.

அருகில் நின்ற கணவனை அறிமுகம் செய்தாள்.

"இதுதான் என் ஹஸ்பெண்ட் கிரீஷ். தாய் மாமாவும் கூட."

இரண்டாவது வாக்கியத்தில் ஏதோ ஓர் அழுத்தம். மீண்டும் ஒரு புன்னகை. கண் நிறைய மலர்ந்த மல்லிகை போல் அதில் என்ன ஒரு வெண்மை.

கிரீஷ் கைகுலுக்கினான்.

மிகவும் மரியாதை காட்டினான்.

தர்மராஜுக்கு அவன் கண்ணைப் பார்த்த போது கிரீஷுக்கு ஏதோ தெரிந்திருப்பது போல் தோன்றியது. ஒருவேளை அது கற்பனையோ?

"மங்களூர் போய்ட்டிருக்கோம்" சாருமதி சொன்னாள்.

"ஐ ஸீ"

"நீங்க ஊர்ல இருந்து வர்றாப்பிலேயா?"

"ஆமாம். லே லடாக்."

"ரொம்பக் குளிரும் இல்லே" குழந்தை போலக் கேட்டான் கிரீஷ்.

"போர்ட்டர் ரொம்ப தூரம் போய்ட்டாரு" என்று ஞாபகமூட்டினாள் சாருமதி.

"ரெண்டாவது பிளாட்பாரம்தானே. நானும் வர்றேன்" என்று தர்மராஜ் ஸூட் கேஸை ஹரி பாவாவிடம் வைத்துவிட்டு உடன் நடந்தான்.

சாருமதி போர்ட்டரின் பின்னே நடந்தாள். பின்தொடர்ந்து கிரீஷும், தர்மராஜும். ஏதாவது பேச வேண்டுமே!

ரயில் பயணம். வட இந்தியர்கள். எல்லைப் பாதுகாப்பு. கப்பல் பயணங்கள்.

படியிறங்கி பிளாட்பாரம் வருவதற்குள் ஒரு மாதிரி கிரீஷும் தர்மராஜும் நெருங்கியிருந்தார்கள்.

முதல் வகுப்பு வெய்ட்டிங் ரூமில் பெட்டிகளை வைத்துவிட்டு போர்ட்டர் போனான்.

சாருமதி டாய்லட் போனாள்.

இருவரும் வெளியே வந்தனர்.

"தர்மராஜ் யூ ஆர் கிரேட்!" என்று திடீரென்று கிரீஷ் அவன் கையைப் பிடித்தான்.

பளிச்சென்று தர்மராஜுக்குப் புரிந்து விட்டது. சாருமதி எல்லாவற்றையும் இவனிடம் சொல்லியிருக்கிறாள்.

"உங்களை நேருக்கு நேராப் பார்க்கிற வரையில் எனக்கு நம்பிக்கையில்லே... யூ ஸீ... நானும் சாருமதியும் பிறந்தவுடனே நிச்சயிக்கப் பட்டவங்க."

அவன் கைகுலுக்கினான்.

அது அவன் ஆண்மைக்கோ, அதனிலும் மேலான ஒரு மேன்மைக்கோ தந்த வெகுமதி போல் தர்மராஜுக்குத் தோன்றிற்று.

சாருமதி சாதித்திருந்த மௌனத்தில் சொல்லில் வராத ஒரு சோகம் இப்போது அவனுக்குப் புலப்பட்டது.



இவை கதைகள் அல்ல; கட்டுரைகள் அல்ல; சிந்தனைச் செதுக்கல் என்று சொல்வதைவிட, நெருடும் நிகழ்வுகளை முன்னிறுத்திய சுட்டிக்காட்டல்கள்!

பெரும்பாலும் நடுத்தர வர்க்கத்தின் அவலங்களை, பெண்ணின் மனநிலையில் வருடிய பார்வை; எனினும் நடுநிலையான நியாய உணர்வுடன் அலசிய பான்மை!

பிச்சையெடுக்கும் பெண்ணை அதற்குத் தூண்டுவது யார் என்பதில் தொடங்கி, நம்மை ஆட்டி வைக்கும் சினிமா மாயை, தனியார் பள்ளி மோகம், பெண்களைக் கிண்டல் செய்யும் அநாகரிகம், திருமணமான ஆண்களை, சில இள மங்கையர் வளைத்துப்போடும் சாகசம், கானாப்பாட்டு ஆபாசம், வதந்திகளின் வக்கிரங்கள், குழந்தைகளை அடிக்கும் கொடுமை, குழு நடனக் கேவல அசைவுகள், வளரும் வன்முறை, தொலைக்காட்சி அபத்தங்கள், திருமணத் தோல்விகள் என்று பல சமுதாய உறுத்தல்களை- ஏற்கனவே நமக்குத் தெரிந்தவைதான் என்றாலும்- பட்டவர்த்தனப் படுத்தி, வகுத்துப் பகுத்துத் தொகுத்துத் தந்திருக்கிறார், சுமதி.

பிரச்னைகளின் அகராதியோ என்றும் எண்ணத் தோன்றுகிறது! நம்மைப் பாதித்தவை எழுத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. வருணனை இல்லாமல், கிளுகிளுப்புகள் இல்லாமல், சொகுசு இல்லாமல், ஆனால் "இதுதான் உண்மை" என்னும் தெம்போடு, துணிச்சலோடு எழுதி இருப்பதால் சுமதி பாராட்டுக்குரியவர்!

"கோபப்படுவதற்கும் ஒரு பயிற்சி வேண்டும்!" என்கிறார். உண்மைதான்! 'ஏன் புயல்?' என்று வானிலை மீது நம்மால் சினங் கொள்ள முடியாதே! 'மீசை முளைத்து விட்டது என்று ஒரு இளைஞனுக்கு சடங்கு செய்வீர்களா?' என்று கேட்பது முதல், "பிறரிடம் கண்ணீர் சிந்துவதிலும் பெண்கள் கவனமாக இருக்க

## பார்வைக்கு வந்தவை

● ஜோதி வழியில் வள்ளலார் /Sakithya Shodh Sansthan, 8A/141, W.E.A. Karol Bagh, New Delhi - 110 005/ ரூ.360/-

தொழிலதிபர் நா.மகாலிங்கம் தேர்ந்தெடுத்த 250 திருவருட்பாக்கள் தமிழிலும் ஹிந்தியில் அதன் ஒலி வடிவிலும் மொழி பெயர்ப்பிலும் இடம் பெற்றுள்ளன. மொழி பெயர்ப்பாளர் டாக்டர் ஆர்.கே.சேத், ஏற்கனவே பல பண்டைத் தமிழ் இலக்கியங்களை ஹிந்திக்கு அறிமுகப்படுத்தியவர்.

● விலங்குகள் பேசினால் /கி.சுந்தர்ராஜ்/ SUNRAYS PROMOTIONS, No.145-A, Jalan Sultan Abdul Samad, 50470, Kualalumpur, Malaysia / $. 10.00

சிறுவர்களுக்கான நூல். அச்சு அமைப்பும் இடம் பெற்றுள்ள வண்ணப்படங்களும் கண்ணைக் கவர்கின்றன.

● வாழும் நெறி / டாக்டர் ஆர்.எ.சுப்பிரமணியன்/ ஸ்ரீசெந்தில் பதிப்பகம், 78-A, காங்கிரஸ் ஹவுஸ் ரோடு, புதுப்பேட்டை; குடியாத்தம்- 632 602/ரூ.37.00.

பழந்தமிழ் இலக்கிய உதாரணங்களுடன் நெறியோடு இயைந்த வாழ்க்கைக்கான அவசியம், வழிமுறைகளைக் கூறும் நூல்.

● சட்டமன்றம் ஓர் அறிமுகம் /க.பழனித்துரை/ நியூ எட் பதிப்பகம், த.பெ. எண்.8, 124, என்.ஜி.ஓ காலனி, திண்டுக்கல் - 624 009/ ரூ.30.00

சட்டசபைச் செயல்பாடுகள், எம்.எல். ஏக்களின் கடமை, நடைமுறை பிரச்னைகள், ஜனநாயகம் என்று பல விஷயங்கள் பற்றிப்

வேண்டும்" என்று சொல்வதுவரை எல்லாமே பயனுள்ள கருத்துக்கள்தாம்!

**கா**தல் என்னும் பெயரில் ஏற்படும் பலவீனங்களைச் சாடியிருப்பது 'ஒரு தொண்டு' என்றே போற்றப்பட வேண்டும்! சோதிடப் பிதற்றல்களைக் கண்டிக்கிறார். முதியோர் பிரச்னைகளைத் தொட்டிருக்கிறார். 'தற்கொலை'களைப் பரிசீலனை செய்வதோடு தடுக்கும் முறைகளை முன் வைக்கிறார்.

இந்த நூலின் முன்னுரை சுமதியை 'எழுத்தில் வழக்கறிஞர்' என்கிறது. நான் அப்படி நினைக்கவில்லை! (வாதங்கள் ஒருதலைப்பட்சமாக இல்லாததால்.)

# மீசை முளைத்ததற்கு சடங்கு செய்வீர்களா?

நோய் நாடி, நோய் முதல் நாடும் சமுதாய மருத்துவர்களின் வரிசையில் இந்த நூல் சேர்க்கப்படலாம். நடுத்தர வகுப்பு 'ஸ்பெஷலிஸ்ட்' என்றும் சொல்லலாம்! மருந்து கொடுத்தார் என்று முழுமையாய்ச் சொல்ல முடியாது எனினும், பத்தியங்களைப் பரிந்துரைக்கிறார். காரணங்களைக் கண்டு பிடிப்பதில் ஒரு டாக்டர் வல்லவராயிருப்பதும் தேவைதானே! அவ்வகையில் தேறிய சுமதி, சில யோசனைகள், சில ஆதங்கங்கள், சில எதிர்பார்ப்புகள், சில அறிவுரைகள் என்று தன்னையே கரைத்து, தன் உணர்வுகளை இழையோட விட்டிருப்பதை நாம் கவனிக்காமலிருக்க முடியாது.

வாசகர்களுக்கு இந்த நூல் ஒரு கண்ணாடியைத் தரும்; முகம் பார்த்துக் கொள்ள! ஒரு அடையாள அட்டையை வழங்கும்; சமுதாய ரேஷனில் நல்ல ஒழுக்கத்தைப் பெற்றுக் கொள்ள!

**- நிர்மலா சுரேஷ்**

*ரௌத்திரம் பழகு/ 'துக்ளக்' சுமதி/ அல்லயன்ஸ் கம்பெனி, 244, ஆர்.கே.மடம் சாலை, மயிலாப்பூர், சென்னை - 4. / ரூ.56.00*

---

பேசும் நூல் (மைக் எறிதல், வேட்டி உருவுதல் பற்றி ஏதும் இல்லை.)

- மோகவில்/ ஏ.நடராசன்/ வானதி பதிப்பகம், சென்னை - 17/ ரூ.65.00

"அவர் கதைகள் அமெரிக்காவில் தான் நடக்கும். நிச்சயம் இரு கதாநாயகிகள் இருப்பார்கள். காதல் மோதல் - சுபம். கதையைப் பற்றிக் கவலைப்படாமல் நடை அழகுக்காகவே படித்துக் கொண்டு போகலாம்" என்கிறார் அ.மா.சாமி, முன்னுரையில். சரியான விமர்சனம்!

- ஒரு வித்தகனும், ஆயிரம் வீணைகளும்/ கவித்தா சபாபதி/ திருமகள் நிலையம், 55. வெங்கட் நாராயணா ரோடு, சென்னை-17/ ரூ.15

நதிகள் அழகானவை
எனில்
நதிகளை நான்
பாடவில்லை.
நதிக்கரைகளைப் பாடுகிறேன்.

சில இடங்கள் சிலாகிக்கும்படி உள்ள புதுக்கவிதைகள்.

- பொய்த்திரை/ கா.சு.வேலாயுதன்/ குமரிப் பதிப்பகம், 8. நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம்-611 001/ரூ.25.00

சமூதாயப் பார்வையுடன் எழுதப்பட்ட தரமான சிறுகதைகள்.

- வைரமுத்துவின் திரைப்பாடல்களில் கற்பனை வளம் / தங்க செந்தில் குமார்/ செழியன் பதிப்பகம், 110. நிர்மலா நகர், புதுக்கோட்டை சாலை, தஞ்சாவூர்- 613 007/ ரூ.20.00

ஆய்வுக் கட்டுரைகள்.

# சில முரண்பாடுகள்

## போட்டிக்கதை-12

"ஏம்மா! எல்லாரும் கௌண்டரை மூடி விட்டு வாங்கம்மா!"- யூனியன் லீடர் கர்ஜித்து விட்டுச் சென்றார்.

"எதுக்குப்பா? இன்னும் ஒரு மணி நேரம் இருக்கே! இப்பவே க்யூ பெரிசா இருக்கு. எப்படி அப்ட்ரப்டா விட்டுட்டுப் போவது?"

ஒருவருக்கொருவர் கசமுசத்துக் கொண்டிருந்தபோதே, யூனியனின் வால் ஒன்று வந்து, "கௌண்டர் க்ளோஸ்டு" போர்டுகளை வைத்தபடி இருந்தது.

நாங்களும் வேறு வழியின்றி பணத்தைப் பூட்டிவிட்டு, எங்களைக் கேள்விக் குறியுடன் பார்க்கும் பப்ளிக்கின் கண்களைத் தவிர்த்துவிட்டு, சீஃப் ரூமிற்குச் சென்றோம்.

சீஃப் சேம்பர் அருகே அமர்ந்தோம். முதல் வாரம் ஆதலால் வாடிக்கையாளர் கூட்டம் அதிகமாக இருந்தது. எங்களுக்குத்தான் மிகவும் பதைபதைப்பாக இருந்தது, எந்த வாடிக்கையாளர் புகார் புத்தகத்தில் எழுதப் போகிறானோ என்று.

"எதற்காக இந்த அமைதிப் போராட்டம்பா?" நான் திவ்யாவைக் கேட்டேன்.

"ஓ! தெரியாதா! நம்ப ஆபீஸ்ல தற்காலிகமா வேலை செய்துண்டிருந்தாங்களே, அவர்களை நிரந்தரமாக்குவதற்காக ட்ரெயினிங் போய்விட்டு வந்தார்களில்லையா? அவர்களுக்கு வேற சிட்டி டிவிஷனில் அப்பாயிண்ட்மெண்ட் போட்டிருக்கு. நம்ப ஆபீஸ்லேயே போஸ்டிங் கிடைக்கலியாம். அதான் காரணம்."

"என்னது! அதற்கா இந்தப் போராட்டம்? என்னப்பா இது! வேலைக்கு வரும் போது இந்தியாவிற்குள் எந்த இடத்திலும் வேலை செய்வோம்னு அண்டர்டேக்கிங் குடுத்து விட்டு, இப்படி செஞ்சா நல்லாவா இருக்கு? அதுவும் இதே சிட்டிக்குள்ள தானே? அங்க நிக்கற பப்ளிக்கோட போராட்டத்தைப் புரிஞ்சுக்க மாட்டேங்குறாங்களே?"

"ஸ்ஸ்ஸ்.... மெல்ல! சும்மா இருக்க மாட்டே?" திவ்யா என்னை அதட்டினாள்.

அப்படி இப்படி ஒரு மணி நேரம் போயிற்று. ஒவ்வொருவராகச் சேம்பரை விட்டு வரத் தொடங்கினர்.

"என்ன சார் ஆச்சு?"

"சர்க்கிள் ஆபீஸுக்குத் தொலைபேசியில் பேசினாராம் சீஃப். பதில் இன்னும் சில நாட்களில் தெரியும் என்றார்கள்."

நாங்கள் கௌண்டருக்கு வந்தோம். அதிகாரி எங்களைப் பணத்தைச் சரி பார்த்து, அன்றைய கணக்கை டேலி செய்து சீக்கிரம் முடித்துத் தருமாறு பணித்தார். வாடிக்கையாளர்களின் அதிருப்தியை ஒருவராக இருந்து சமாளித்ததால் வந்த எரிச்சல் அவர் குரலில் ஒலித்தது.

சில நாட்களில்....

அனைவருக்கும் மெமோ வந்தது. ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப் போவதாகவும், உங்கள் விளக்கத்தை மூன்று நாட்களுக்குள் தரும்படியும் அதில் போட்டிருந்தது.

யூனியனே அனைவருக்குமான பதிலை எழுதி டைப் செய்யப்பட்ட காப்பியை எல்லாருக்கும் கொடுத்தது. அதில் கையெழுத்துப் போட முனைந்த எனக்கு அந்த விளக்கம் வியப்பாக இருந்தது. அதில் எழுதியிருந்த வாசகம் இதுதான்.

அந்த சமயத்தில் நான் காபி/டீ சாப்பிட மட்டுமே வெளியே சென்றதாகவும், அதனால் என்மேல் எடுக்கப் போகும் ஒழுங்கு நடவடிக்கையை கைவிட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்படுவதாகவும் எழுதியிருந்தது!

"என்னப்பா இது? முழு பூசணிக்காயை சோத்தில் மறைக்கறான்?"

"என்ன பண்ணா என்ன! கையெழுத்துப் போட்டுக்குடு!"

நான் மெதுவாக அந்த விளக்கத்தை கிழிக்க ஆரம்பித்தேன்.

"ஏய்! என்ன பண்ற?" திவ்யா படபடத்தாள்.

"இதப்பாரு திவ்யா! போராட்டம்னா இழப்பு இருக்கத்தான் செய்யும். நான்

செய்த காரியத்தை நியாப்படுத்தவும் இல்லை; பண்ணவே இல்லன்னு வேற சாதிச்சா...? நான் தனியா மன்னிப்பு கேட்டு எழுதப் போறேன்."

"ஏண்டி, எல்லாருடனும் ஒத்துப் போக மாட்டேங்கறே?" திவ்யா, ஆதங்கத்துடன் கேட்டாள்.

"லுக் திவ்யா! போராட்டத்துல கலந்துக்கலன்னாதான் யூனியன் என்னைத் திட்டும். இந்த ஆபீஸ்ல யாரும் ஏன் கேள்வியே கேட்க மாட்டேங்கறான்னு தெரியல! நாளைக்கு நம்மை ஏதானும் தண்ணியில்லா காட்டுக்கு அனுப்பிச்சா என்ன பண்றது? யூனியன் மூலமாதானே காரியத்தை சாதிச்சுக்கணுங்கற பயமா? ஒண்ணு போல இந்த ஆபீஸ்ல இருக்கற அத்தனை பேருக்கும் இதே பயமா? இல்லை யூனியன்தானே செய்யத் தூண்டியது; அது குடுக்கற பதிலே போதும்கற மெத்தனமா? எனக்குப் புரியலை."

"பாவம்னு தெரிஞ்சுண்டே ஏன் இந்த முறை மட்டும் கலந்துண்டே?"- திவ்யா நக்கலாகக் கேட்டாள். இந்தமுறை மட்டும்- என்பதை சிறிது அழுத்தமாகச் சொன்னாள்.

ஆம். நான் இருமுறை யூனியன் செய்வது சரியில்லை என்று என் மனதுக்குப் பட்டபோது, போராட்டத்தில் கலந்து கொள்ளாமலும் இருந்திருக்கிறேன்! அதற்காக மறைமுகமாக மிரட்டப் பட்டுமிருக்கிறேன்.

"இதப்பாருப்பா! நானும் மனுஷிதானே! ஒவ்வொரு முறையும் ஆட் ஃபிகரா வித்தியாசமா இருக்கிறது கஷ்டமாக இருக்கு. செஞ்சது தப்புதான். செஞ்ச தப்புக்கான தண்டனையை ஏத்துக்க நான் தயார்ங்கறதைத் தடுக்க யாருக்கும் உரிமை யில்லை."

மடமடவென்று மன்னிப்புக் கடிதம் எழுதி அதிகாரியிடம் கொடுத்துவிட்டு வந்தேன்.

ஒரு வாரத்தில் அனைவருக்கும் பதில் வந்தது. கொடுக்கப் பட்ட விளக்கம் திருப்தியாக இல்லாததால், ஒரு மணிநேரம் செய்யாத வேலைக்காக ஒரு நாள் சம்பளத்தை கட் பண்ணுவதாக!

எனக்கும் வந்தது. செய்த தவறை ஒத்துக் கொண்டதால் இம்முறை எச்சரிக்கையுடன் விடப்படுகிறாய் என்று.



**மானஸா**
**(அறிமுக எழுத்தாளர்)**

# சசி வாங்கிய சமுத்திரம்!
# வெளிவரும் திடுக்கிடும் தகவல்!!



**ஜெயலலிதாவுக்கு ஜாக்கெட் துணி விற்ற ஒரு வியாபாரிக்கு மைலாப்பூரில் ஒரு பங்களா, ஒரு கோடி ரூபாய் சொத்து இருப்பதாக லஞ்ச ஒழிப்புத் துறையினர் லேட்டஸ்டாகக் கண்டுபிடித்துச் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் மெதுவாக ஒவ்வொரு விஷயமாக வெளிப்படுத்தட்டும். நமது கற்பனையில் ஓர் அதிரடி அவசர ரெய்டு நடத்தியதில் கிடைத்த திடுக்கிடும் இரண்டு விவரங்கள் கீழே:**



சென்னை, நவம்பர் 14

முன்னாள் முதல்வர் ஜெயலலிதா, அவரது முன்னாள் உடன் பிறவா சகோதரி சசிகலாவின் சொத்து விவரங்கள் லஞ்ச ஒழிப்புத் துறையினரால் கண்டுபிடிக்கப்பட்டு தினம் ஒன்றாகத் தவணை முறையில் வெளியிடப்படுவது தெரிந்ததே. தற்சமயம், அவர்களுக்குச் சேவை செய்த வகையில் கோடீஸ்வரர்களான சிலரைப் பற்றிய திடுக்கிடும் செய்திகள் கிடைத்துள்ளன. விவரமாவது:-

## காஜா கன்னியப்பன்

சென்னை, சூளைமேடு பகுதியில் வசிப்பவர் கன்னியப்பன். ஒரு டெய்லர் கடையில் சட்டைகளுக்கு காஜா எடுக்கிற வேலை பார்த்து வந்தார். ஐந்தாண்டுகள் முன்பு சீரணி அரங்கில் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் பேச வந்த அன்றைய முதல்வர் ஜெயலலிதாவுடன் தற்செயலாக அறிமுகமானார் இவர்.

## எடுக்கவோ? கோர்க்கவோ?

அரங்கில் ஏற வந்த ஜெயலலிதாவின் பூப்போட்ட மேல் கோட்டை, அவர் அருகே வந்து கொண்டிருந்த பாதுகாப்பு அதிகாரி, தன் துப்பாக்கி முனையால் தெரியாமல் இடித்துவிட, காலர்

பட்டன் அறுந்து விட்டது. அப்போது கையில் ஊசி, நூலுடன் தயாராக இருந்த காஜா கன்னியப்பன், விரைந்து சென்று "எடுக்கவோ? கோர்க்கவோ?" என்று "கர்ணன் படத்து துரியோதனன் பாணியில்" கேட்டு, ஜெயலலிதாவின் உத்தரவு கிடைத்ததும், நொடிப்பொழுதில் அந்த ஒவர் கோட்டைத் தைத்துத் தந்ததாகச் சொல்லப்படுகிறது.

## பரிசு

இதற்குப் பரிசாக காஜா கன்னியப்பனுக்கு சென்னை வளசரவாக்கத்தில் ஒரு பெரிய குளுகுளு சொகுசு பங்களாவும் இருநூறு தையல் மிஷின்களும் ஒரு பட்டன் பேக்டரியும் ஜெயலலிதா வைத்துத் தந்திருப்பது தற்சமயம் தெரிய வந்துள்ளது. போலீசார் காஜா கன்னியப்பனிடம் புலன் விசாரணை செய்து வருகிறார்கள்.

## மன்னார்குடி மன்னார்சாமி

மன்னார்குடியில் உப்பு மண்டி வைத்திருக்கும் மன்னார்சாமி என்பவருக்கு சசிகலா உதவியால் நாகைப்பட்டினம் கடல் பகுதியில் "இருநூறு ஏக்கர் கடல்" பட்டா செய்யப்பட்டு, தரப்பட்டுள்ள அதிர்ச்சித் தகவல் வெளிவந்துள்ளது.

## உப்புக்குள் வைரம்

சசிகலா தமது சொந்த ஊரான மன்னார்குடிக்கு வரும்போதெல்லாம் அவரைக் கண்டு, வணங்கி, ஆசி பெற்றுச் செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார் மன்னார்சாமி.

கடந்த 1992, அக்டோபர் 28-ஆம் தேதி 'சசிகலா மன்னார்குடி வந்திருந்தபோது, வழக்கம்போல் அவரைக் காணச் சென்ற மன்னார்சாமி, ஒரு மூட்டை உப்பை அவருக்கு அன்பளிப்பாகத் தந்துள்ளார். "உப்பை அன்பளிப்பாகத் தருவதா?" என்று வெகுண்டெழுந்த சசிகலா, அந்த மூட்டையைக் காலால் எட்டி உதைத்ததாகக் கூறப்படுகிறது. மூட்டை பிரிந்து, சிதறியபோது, உப்புக்குள், அவர் ஒரு வைர மாலையை ஒளித்து வைத்துப் பரிசளித்தது தெரிய வந்தது.

## 300 கேரட்

வைரமாலையைக் கண்ட சசிகலாவின் உள்ளம் துள்ளியது.

"ஆ, இது எனக்கா?" என்று மன்னார்சாமியிடம் கேட்க, "ஆமாம். ஏழையின் எளிய பரிசு" என்று அவர் பணிந்து, "முகலாய மன்னர் முன் காவலர் போல" குனிந்து சலாமிட்டு வணங்கி, ஏற்றுக் கொள்ளக் கோரியதாகத் தெரிய வருகிறது.

சசிகலா "பெரிய மனம் கொண்டு" ஏற்றுக் கொண்ட அந்த வைரமாலையைத் தற்போது போலீசார் கைப்பற்றியுள்ளனர். சென்னை நகரின் பெரிய நகை மாளிகை அதிபர்களால் நேற்று பார்வையிடப்பட்ட அந்த வைர மாலை, அவர்களை வியப்படையச் செய்தது. "இது சாதாரண வைரம் அல்ல; "300 கேரட்" மதிப்புள்ள ஏழுலக அதிசயம்!" என்று அவர்கள் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள்.

## 200 ஏக்கர் கடல்

இதற்கிடையில் தனக்கு வைர மாலை பரிசளித்த மன்னார்சாமிக்கு, சசிகலா 200 ஏக்கர் கடலைப் பட்டா செய்து தந்த விவரம் வெளியாகியுள்ளது.

## நாகையில்

நாகை-காயிதே மாவட்டத்தில் உள்ளது, நாகப்பட்டினம். இங்கே வங்கக் கடலும் உள்ளது. இந்தக் கடலில் 200 ஏக்கர் பரப்புள்ள நீர்ப்பரப்பை சசிகலா, மன்னார்சாமிக்கு "அன்பளிப்பாக"க் கொடுத்துள்ளதாகத் தெரிகிறது.

"சசிகலா கடலையும் முன்னதாகவே வாங்கி விட்டாரா?" என்று நிருபர்கள் காவல் துறையினரிடம் கேட்டபோது, அது பற்றி விசாரித்தபோது, கடலைத் தாம் வாங்க வேண்டிய அவசியமில்லையென்றும் ஏற்கனவே அது தம் குடும்ப சொத்தாக முன்பு தஞ்சையை ஆண்ட "சரபோஜி" மன்னரால் சாசனம் செய்து தரப்பட்ட ஒன்றுதான் என்று சசிகலா தரப்பில் தெரிவிக்கப்பட்டிருப்பதாக காவல்துறையினர் சொன்னார்கள்.

கற்பனைச் செய்தியாளர்:
—விடாக்கண்டன்

"அந்த ஆளை ஏன் அடிக்கறாங்க?"
"வீட்டுக்கு ஒரு மரம் வளர்க்கணும்னு சொன்னா, 'அப்ப சின்ன வீட்டுக்கு செடி போதுமா'ன்னு கேட்டாராம்!"

— ஜக்கு

# வட்டமேஜை

♦ தேங்கும் தபால்; குவியும் நஷ்டம் தலையங்கம், ஏங்கும் பொது மக்களுக்கு ஒரு ஆறுதலாக அமைந்தது. தலையங்கம் வெளி வந்த அன்றே ஸ்ட்ரைக்கும் வாபசாகி விட்டது. அரசின் பிடிவாதம் தளர்ந்து விட்டது. அத்யாவசியத் துறைப் பணியாளர்கள் பொது மக்களுக்கிழைத்த ஒருவார தீங்கிற்குப் பிறகாவது பொறுப்புணர்ந்து கடமையாற்றுவார்களா?

ஸ்ரீரங்கம், அ. சம்பத்

♦ 25-ம் தேதி பதவியேற்பு... 30-ம் தேதி கல்கியைப் பார்த்தால், களமிறங்கியிருக்கும் மேயர்! மேயரைப் பாராட்டுவதா.... கல்கியைப் பாராட்டுவதா?

விராலிமலை, ச. நாகராஜன்.

♦ சுயநலம் மிகுந்துள்ள இந்தக் காலத்திலும் நாராயணன் மாதிரி ஒரு வீர இளைஞர்! இம்மாதிரி ஊருக்கு ஒரு நாராயணன் இருந்தால் நாடு சுபிட்சப் பாதையில் செல்லும். சுயநலமிக்க அரசியல்வாதிகள் அட்டகாசமும் குறையும்!

வேதாரண்யம், இரா. ஜானகிராமன்.

♦ 'மூன்று மாத காலத்திற்குள் மத்திய ஆட்சி காங்கிரசின் கைக்கு வரும்; அல்லது பொதுத் தேர்தல் வரும்' என்று கூறும் குமரி அனந்தன், அழிவின் விளிம்பில் நின்று கொண்டிருக்கும் காங்கிரசை அரியணை ஏற்ற அப்படி என்ன அசுர பலம் கொண்ட ஆயுர்வேத டானிக் வைத்திருக்கிறாராம்?

நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

♦ நிறைய 'டெக்னிக்கல்' விஷயங்களோடு வெளியிடப்பட்டிருக்கும் புதிய நூறு ரூபாய் நோட்டின் 'வாட்டர் மார்க்' பகுதியில் அரசியல் காரணங்களில் சிக்காத ''தாடிப் பிரபலம்'' யாரும் கிடைக்காத காரணத்தால் தேசப்பிதா காந்தியையே போடும்படி ஆகி விட்டது என்று ரிசர்வ் வங்கியின் மூத்த அதிகாரி அங்கலாய்த்தது ஆச்சர்யம் அளித்தது. தேசியக் கவி ரவீந்திரநாத் தாகூரை எப்படி இவ்வளவு எளிதில் மறந்து போனார்கள்?

மதுரை - 14, எஸ். வைத்தியநாதன்.

**பரிசு பெறும் கடிதம்**

♦ 3.11.96 இதழில், புதிய நோட்டு பற்றி வெளியான தகவல்களில் ஒன்று விடுபட்டுவிட்டது. புதிய நூறு ரூபாய்த் தாளின் இடது பக்கத்தில் கறுப்பு வண்ணத்தில் வழவழப்பான ஒரு முக்கோணம் அச்சிடப்பட்டுள்ளது. இதைத் தடவிப் பார்த்து, பார்வையற்றவர்களும் 'இது 100 ரூ. நோட்டு' என அடையாளம் காணலாம்!

கோயமுத்தூர், நளினி ராமச்சந்திரன்.

# தாகூரை எப்படி மறந்தார்கள்?

♦ அயன்புரம் பொது நலச் சங்கத்தினர் கோரிக்கையின்படி, தமிழக அரசு வனத் துறையின் கட்டுப்பாட்டில் இயங்கும் ''நகர அழகு மேம்பாட்டு (வடக்கு) சரகத்தினர்'' முதல் தவணையாக அயன்புரம் கொன்னூர் நெடுஞ்சாலைப் பகுதியில் கடந்த 2.11.96 அன்று தகுந்த பாதுகாப்புடன் 100 மரக்கன்றுகளை நட்டு முடித்துள்ளனர். 'அயன்புரம் பொது நலச் சங்கம்' மேற்கொண்ட முயற்சியோடு 'களத்தில் கல்கி' (1.9.96) கட்டுரை மிகவும் உறுதுணையாக விளங்கி வெற்றி கிட்டியதில் பெரு மகிழ்ச்சி. வனத்துறையினருக்கும் மனமார்ந்த நன்றி.

சென்னை - 23, கே. ராமதாஸ்
செயலாளர், அயன்புரம் பொதுநலச் சங்கம்.

♦ 'படித்ததில் பிடித்தது' சாவி அவர்கள் தம் ரசிப்பினை ருசிகரமான வார்த்தைகளால் வர்ணித்த பாங்கு, மனித தெய்வம் காந்தி காதை 5500 பாடல்களையும் இப்போதே படிக்க வேண்டுமென்ற நல்லுணர்வை நல்குகிறது!

இனாம் மணியாச்சி, ச.ஆ. கேசவன்.

♦ இன்டர் நெட்டில் இரா. முருகன் பிடித்தவற்றை வாசித்தேன். கம்ப்யூட்டர் அரிச்சுவடி தெரியாத என் போன்ற பலருக்கும், எளிய காதல் பாஷை போன்று, உணர முடிகிற விஷயமாய்ப் பிடிபடுகிறது. ஒரேயடியாய் கம்ப்யூட்டர் குறியீடுகளை இட்டு நிரப்பாமல் எளியனவாயும், அதே நேரம் நகைச்சுவை கலந்தும் தந்திருப்பது வரவேற்கக்கூடியது.

தஞ்சாவூர் - 2, புத்தகன்.

♦ தாரக பதில்களில், ....அது 'டிங்கி' அல்ல; 'டிங்கு' என்று கூறுகிறார். அந்தச் சொல்லின் ஆங்கில உச்சரிப்பு 'டெங்கி'. அதன் மூல மொழி, ஆப்பிரிக்க மொழிகளில் ஒன்றான 'ஸ்வஹீலி'.

சென்னை - 85, ஆர். சுவாமிநாதன்.

♦ ''இந்திர தனுசு'' வர்ண ஜாலங்களைக் காட்டி ஏக்கத்தை ஏற்படுத்தி விட்டு, மறைந்து விட்டது. அன்றைய தமிழக மன்னர்கள் காட்டிய ஒற்றுமை உணர்வை இந்திய முதல்வர்கள் கடைப்பிடித்தால் பாரதம் பாருக்குள் முதன்மை பெறுவது உறுதி! யுவானும், யாங்சினும் கரையில் இருந்தவர்களின் நெஞ்சங்களை விட்டு மட்டுமல்ல, கதை படித்தவர்களின் உள்ளங்களை விட்டும் அகலவே மாட்டார்கள்.

திருவண்ணாதபுரம், தி.ச. பாலசுப்பிரமணியன்.

♦ விஷ்வக்சேனனின் இந்திர தனுசுவில் சோழ மன்னர் துறவியாராக வேடம் பூண்டு கடைசி அத்தியாயத்தில் தனது வேடத்தைக் கலைப்பது கல்கியின் பார்த்திபன் கனவில் சிவனடியாராக வேடம் பூண்டு கடைசிக் காட்சியில் வேடத்தைக் கலைக்கும் பல்லவச் சக்கரவர்த்தி மாமல்லரை நினைவூட்டுகிறது.

சென்னை - 86, கே.எஸ். நாராயணன்.

♦ விஷ்வக்சேனனின் 'இந்திர தனுசு' நாற்பத்தி நான்கு வாரங்கள் சென்றதே தெரியவில்லை. அவ்வளவு விறுவிறுப்பாகவும், சரித்திரச் சுவையுடனும் இருந்தது. ஓவியர் ஸ்யாமின் தூரிகை வண்ணங்கள் தொடருக்கு மேலும் மெருகூட்டின.

ஜலகண்டபுரம், ஆர். ரவிச்சந்திரன்.

# ஜாலி போட்டி - 16 பரிசு ரூ. 5000/-



மேலே உள்ள அரசியல் வி.ஐ.பி.க்களைப் பாருங்கள்.

இந்தக் கூட்டத்தில் மூன்றே மூன்று பேர் பெயர்தான் இதுவரை எந்த ஊழல் குற்றச்சாட்டிலும் அடிபடவில்லை.

யார் அவர்கள்?

கண்டுபிடித்து, 25.11.96க்குள் அனுப்புங்கள். சரியாக எழுதினால் பரிசு ரூ.5000. பலர் சரியாக எழுதிவிட்டால் குலுக்கலில் ஒருவர்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**ஜாலி போட்டி - 16**

ஊழலில் சிக்காத அந்த மூவர் :

1.
2.
3.

பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

..........................................

கல்கி – அனுபவப் கவிதைப் போட்டியில்
இரண்டாம் பரிசு ரூ. 5,000 பெறும் கவிதை.

உதகை எனது ஊர்!
ஓடித் திரிந்த
காலம் ஒன்றுண்டு!

மரகதப் புல்வெளிகளில்
துள்ளியது எது
மனமா? மானா?

பனித்துளிகளுக்கும் பரவசம்
பாதங்களில் பட்டுத் தெறிக்கையில்...

கருப்பும் கபடுமில்லாத
நீரோடைகள்
முகம் பார்க்கும் கண்ணாடி!

தூரத்துக் காடுகள்...
தினம் இரவு
அம்மா மடியில்
தேவதைக் கதைகள்
நிகழ்கின்ற இடங்கள்!

அடர்த்தியான
மரங்களின் ஊடே
சின்ட்ரல்லாவின் செருப்பும்
கிடக்கலாம்.

போய்ப் பார்க்க
அச்சம்!
அரக்கர்களும்
அங்கிருக்கக் கூடும்!

மேகங்கள் நகர்கிறபோது
மேனியெல்லாம் சிறகு
முளைத்தது போலிருக்கும்

அப்போதெல்லாம்
எனக்கு
அழவே தெரியாது
உள்ளத்தை ஒத்தியெடுக்க
ஒட்டுமொத்த குத்தகையாய்
இயற்கை!

வானம் 'சோ'வென்று
அழுவதைப் பார்த்தால்
சிரிப்பாய் வரும்

அதிகாலையில் எழும்பி
அப்பாவுடன் ஓடுகையில்
ஓசோன் காற்று
ஓங்காரமாய் முகத்திலடிக்கும்!

ஓசோன் படலம்
இயற்கை அரண்களின்
ராணி என்று
அப்பா சொன்னார்

வானத்து விந்தைகள்
வந்து கொட்டாமல்
காக்கின்ற கடவுள் என்றார்



அந்த ராணியின் மேனியில்
இன்று ரணங்கள்

தோல் கழிவுகள்
நீரோடைகளை ரசம்போன
கண்ணாடியாக்கி விட்டன

தூரத்து மரங்கள்
தூர தூர போய் விட்டன
- தீக்குச்சி தொழிற்சாலைக்கு
தினசரி உணவு!

காடுகளைக் காணவில்லை!
மொட்டை வீதிகளின் ஊடே
சின்ட்ரல்லாவின் செருப்புக்கு
வாய்ப்பேயில்லை!

அலறிக் கொண்டு போகும்
வாகனங்கள்
தும்மித் தீர்க்கிற எரிதிரவங்கள்
வானளாவிய புகைமண்டலங்கள்
வாசலோரப் பாலீதின் பைகள்...

ஒன்றா ரெண்டா
கச்சை கட்டிப் புறப்பட்ட
எதிரிகள் எய்த அம்புகள்
ராணியின் மேனியில் ரணங்களாய்!
முற்றி அழுகி ஓட்டைகளாய்!
வானத்து வக்கிரங்கள்
வந்திறங்க வசதியாய்!

அழுக்கிலே ஒடிப்புதைகிற
என்மகனின் கால்களில்
மரகதப் பச்சை படவேயில்லை!
என் மகளுக்கு
இன்னமும் தெரியாது
காலை நேரக் காற்று
ஒருகாலத்தில்
கலப்படமற்றது என்று!

நினைத்தால் நடுங்கும் நெஞ்சம்
நாளை என்பது
கறுப்புப் போர்வையாய்
கவியப் போகிறது
கரப்பான் போல்
இருட்டில் நெளியப் போகிறது...

அவசரம், ஓர்
அசுர ஊசி!

முகமறிந்த என்
பிரியமானவர்களுக்கும்
முகம் தெரியா தோழர்
களுக்கும்
இந்த நூற்றாண்டின்
மிகப்பெரிய பரிசு!

பட்டு தேவையில்லை
நூல்தானென்றாலும்
தரவேண்டும்
ஓட்டைகள் இல்லாத
ஒரு போர்வை!

- சு. தாமரை





# சர்ச்சைக்குரிய 'கல்கி'

பாலசந்தரின் கல்கி, பல சர்ச்சைகளுக்கு உள்ளாகப் போகிற; சர்ச்சைகளை உண்டாக்க விருக்கிற— அவரே சொல்வது போல்— ஒரு டிபிகல் கே.பி. படம். 'போர்வையை மாற்றுவது போல் பெண்டாட்டியை மாற்றுகிற' ஒரு அயோக்கியனுக்கும் அடுத்த நூற்றாண்டுப் பெண் ஒருத்திக்கும் நடக்கிற மௌனயுத்தம் என்கிற ஒருவரி கதைச் சுருக்கம் படத்தைப் புரிந்து கொள்ள உதவாது. பல தளங்களில் பரவும் கதை, பற்பல பிரச்னைக்குரிய முடிச்சு களைத் தொடுகிறது. கடந்த வெள்ளிக்கிழமை காலை (8.11.96) நடைபெற்ற இப்படத்தின் சிறப்புக் காட்சிக்கு, கல்கி சுலோகன் போட்டி யில் வென்ற திருவாரூர் அரசியன்பன், சீர்காழி ரமணன், திருச்சி சுவாமிநாதன் மூவரும் வந் திருந்தனர். பாலசந்தருடன் இப்படத்தைப் பார்த்துவிட்டு, அன்று மாலை, மயிலாப் பூரிலுள்ள கே.பி.யின் அலுவலகத்தில் மறுபடி யும் அவரைச் சந்தித்து, படம் பற்றி விவாதித் தனர். கல்கி ஆசிரியர் குழுவினரும் கலந்து கொண்ட இவ்விவாதத்தின் சில பகுதிகளின் தொகுப்பு இங்கே:

*ரமணன்:* வணக்கம் சார். காலைல உங்க படம் பார்த்ததுல, முதல்ல தோன்றின விஷயம் இதுதான். இதுவரைக்கும் யாரும் எடுக்காத சப்ஜெக்டா இருக்கு. துணிச்சலா பண்ணியிருக் கிங்க.

**கே.பி:** நன்றி. யாரும் எடுக்காத சப்ஜெக்ட் அப்படீங்கறது முக்கிய மில்லை. நான் எடுத்ததை கரெக்டா பண்ணியிருக் கேனாங்கறதுதான் முக்கி யம்.

*ரமணன்:* அதைப் பேசத் தொடங்கறதுக்கு முன்னால ஒரு விஷயம்- இந்தப் படத்துக்கு -ஹீரோ யினுக்கு ஏன் 'கல்கி'ன்னு பேர் வெச்சீங்க?

**கே.பி:** ஒரு வித்தியாசத்துக்காகத்தான். அந்த ஹீரோவுக்கு ஏன் பரஞ்சோதின்னு பேர் வெச்சேன்? அதே காரணம் தான். வசந்தா, சாந்தி, நாராயணின்னு என்ன வேணா வெச்சிருக்கலாமே? அப்ப அந்த கேரக்டரும் அதனோட தனித்தன்மையும் மறைஞ்சி, சாதாரணமாயிடுதே?

**கல்கி:** இல்லை. குறிப்பா வேறெதையாவது உணர்த்துவதற்காக இந்தப் பேர் வெச்சீங்களா?

**கே.பி:** இல்லை. இதுல எந்த உள்ளர்த் தத்தையும் நான் சேர்க்கலை!

**அரசியன்பன்:** ஆனா ஒண்ணு சார். கடந்த மூணு வருஷமா நான் இப்படி ஒரு 'போல்டா'ன படத்தைப் பார்த்ததில்லை.

**சுவாமிநாதன்:** படம் 'போல்டா' இருக் குங்கறது வாஸ்தவம் தான். ஆனால் 'ஏற்பது' எப்படிங்கறதுல தான் பிரச்னை வருது. கதாநாயகி 'கல்கி' எடுக்கிற முடிவு சாதாரண ஜனங்களுக்கு ரொம்ப அதிர்ச்சி தரும்; ஜீரணிக்கக் கஷ்டமா இருக்கும்னு நம்பறேன்.

**கே.பி:** ஒண்ணு சொல்றேன். ஒரு கதையில ஒரு கேரக்டர் தற்கொலை பண்ணிக்குதுன்னு வெச்சிங்கங்க.. அது பண்ணிண்டது சரியா, தப்பான்னு வேணா நாம பேசலாமே தவிர அந்த நிமிஷத்துல, அந்த கேரக்டர் ஒரு முடிவு எடுத்து, தற்கொலை பண்ணிக்கிட்[illegible] ...து நிஜம்





• 'கல்கி' படத்தில் ரகுமான், சுருதி

தானே? ஏன் பண்ணிக்கிட்டேன்னு எப்படி கேட்க முடியும்? காரணகாரியங்களை எப்படிக் கேள்வி ஆக்குவீங்க? அதே மாதிரிதான் இந்தப் படத்திலேயும். 'கல்கி' எடுக்கிற அந்த முடிவை ஒட்டித்தான் யோசிக்கணுமே தவிர, ஏன் அப்படி ஒரு முடிவை எடுத்தான்னு கேட்கறது எப்படி சரி? இன்னொண்ணு... தன்னோட ஒவ்வொரு செயலுக்கும் அவளே படத்துல காரணமும் சொல்லியிருக்கா. அதை ஒத்துக்கறதும் ஒத்துக்காததும் உங்க இஷ்டம். படத்தோட கிளைமேக்ஸ்ல அவ என்ன சொல்றா...? 'நான் செஞ்சது தான் ரைட்டுன்னு சொல்ல வரலை; ஆனா நான் செஞ்சது தப்பு இல்லை...' அதான்... அந்தத் தீர்மானம் தான்... அதுலேயே எல்லாம் முடிஞ்சு போச்சே!

**ரமணன்:** குழந்தையில்லாத சீதாவுக்கு உதவற நோக்குலதான் அவ அப்படியொரு காரியம் பண்றான்னா... ஏன் ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் குடுக்கக் கூடாது?

**கே.பி:** அவ என்ன எடுத்துத் தரது? சீதாவே தத்து எடுத்துக்கலாமே?

**கல்கி:** இல்லைசார். படம் முழுக்க என்ன காட்டறீங்க? அந்தக் கல்கி கேரக்டருக்கு சென்ட்டிமென்ட்டுல நம்பிக்கை கிடையாது. உணர்வு பூர்வ மான எந்த விஷயத்திலேயும்– காதல் உட்பட– பெரிய ஈடுபாடு கிடையாது. அப்படி இருக்கறப்ப, குழந்தை இல்லாத பெண்ணோட சோகத்தைத் துடைக்க முடிவெடுக்கறது– அதுவும் இப்படி ஒரு வழியில – அப்படீங்கறது படத்துக்கு சென்ட்டிமென்ட் பலம் கூடுதலா குடுக்கறதுக்காகத்தானோன்னு...

**கே.பி:** நீங்க சென்ட்டிமென்ட்ங்கறதை தவறா பயன்படுத்தறீங்க. சென்ட்டிமென்ட்டுன்னு சொல்றது– இந்த விஷயத்துல ஸோ-கால்டு-சினிமா சென்ட்டிமென்ட் இல்லை. படத்துல, ஒரு சினிமாவுக்குப் போற கல்கி, அஞ்சு நிமிஷத்துல போரடிச்சி, எழுந்து வந்துடறா. சினிமா சென்ட்டிமென்ட்டையெல்லாம் கூட அவ எதிர்க்கறாங்கறதை அந்த சீன்ல காட்டிடறேன். அப்படிப்பட்டவளுக்கு என்ன பெரிசா சென்ட்டிமென்ட்டல் அட்டாச்மென்ட் வந்துடும்? அயோக்கிய ராஸ்கலான ஒரு புருஷன். படாத பாடு பட்டு அவன் கிட்டேருந்து பிரிஞ்சு வந்திருக்கா. ஒரு குழந்தை இல்லாம போச்சேங்கற ஆதங்கம் இருக்கு. நாம ஏன் உதவக் கூடாதுங்கற இயல்பான மனிதாபிமானத்தால அப்படி செய்யறா. இதை சென்ட்டிமென்ட்டுன்னு சொல்றது சரியில்லை.

**ரமணன்:** இல்லையே? சீதாவை மறுமணம் செய்துக்கத் தூண்டியிருக்கலாம். அல்லது முன்னாடி சொன்னாப்பல தத்து எடுத்துக்க வெச்சிருக்கலாம். 'குழந்தை' தான் அவளை அப்படி ஒரு காரியம் பண்ண வெச்சதுன்னா அதுக்குப் பல தீர்வு இருக்க, இப்படி ஒரு முடிவு ஏன் எடுக்கணும்?

**கே.பி:** மறுமணம் பண்ணிக்கறதா? அது வேற கதை ஆயிடும் அப்ப. நீங்க எழுதுங்க. அப்படி ஒரு கதை! இந்தக் கதை இவ்ளோதான் சார்! முடிவை ஏத்துக்கறது, ஏத்துக்காததுங்கறது அவங்கவங்க சொந்த விஷயம். ஆனா முடிவு ஏன் இப்படி வெச்சீங்கன்னு என்னைக் கேக்காதீங்க. ஏன் இப்படி வெக்கக் கூடாதுன்னுதான் நான் திருப்பிக் கேட்பேன்.

**ரமணன்:** அது சரி சார்! படம் முழுக்க ரெண்டு மனைவிகளை அடுத்தடுத்து கொடுமைப்படுத்திட்டே இருக்கற பிரகாஷ் ராஜை, இவ–கல்கி வந்து ஆட்டிப் படைக்கறா. அவனோட ஆணாதிக்க உணர்வையெல்லாம் தன் காலுக்கடியில போட்டுச் செஞ்சுடறா. அவ்ளோ தெளிவு, அவ்ளோ தீர்மானமா, இருக்கறா. அவ சராசரிப் பெண் இல்லை. அப்படிப்பட்டவளும் கடைசியில தனக்கு ஆதரவு யாரும் இல்லைன்னு ஆளதும்



• கே.பியுடன் கலந்துரையாடும் அரசியன்பன், சுவாமிநாதன், ரமணன்.

ரகுமான்கிட்டத்தானே போய் சரண்டர் ஆகறா? இது முரண்பாடா இல்லையா?.

**கே.பி:** தப்பு பண்றீங்க. 'காதல் மேல எனக்கு நம்பிக்கை இல்லை'ன்னு சொல்ற கேரக்டர் அவ. ஆனா ரகுமானோட செயல்கள் அவளை நம்பிக்கை கொள்ள வைக்கறது. எப்படி? இன்னொருத்தனுடன் வாழ்ந்து, அவன் குழந்தைக்குத் தாய் ஆகறா இவ. அப்பவும் ரகுமான் ஏன்; எதுக்குன்னு கேக்கலை. பல தடவை அவன் 'லவ் பண்ணலியா, பண்ணலியா'ன்னு கேட்டப்ப கிண்டலா பேசிட்டுப் போறவ, தான் வெட்டி எறிஞ்ச தலை முடியைக் கூட ஒருத்தன் எடுத்துப் பாதுகாத்து வெப்பானான்னு நினைக்கும் போது, நிச்சயம் பிரமிப்பு வரத்தான் செய்யும். அந்த பிரமிப்பு காதலா மாறுவதோட மட்டுமில்லாம, நிஜமான காதலை தனக்குள் ளேருந்தே கண்டெடுக்கவும் அதுதான் உதவுது.

**கல்கி:** படத்துல 'கல்கி' கேரக்டரைவிட ரகுமான் கேரக்டர் உயர்வாயிடுது.

**கே.பி:** அப்படியா? சரி. நான் 'கல்கி'ன்ற ஒரு கேரக்டரை வெச்சிட்டுத்தான் கதையை 'பில்ட்' பண்ணத் தொடங்கினேன். கதை உருவாகிட்டே இருக்கறப்ப ஒவ்வொரு கேரக்டரும் நல்லாவே வந்துட்டிருக்கறதை உணர முடிஞ்சது. அந்த பாத்திமா பாபு கேரக்டரை எடுத்துக்கங்க... ஒரு சம்பவம் சொல்றேன். நேத்திக்கு அவங்களோட ஆறு வயசுப் பையன் வந்து படம் பார்த்திருக்கான். வீட்டுக்குப் போயி 'என்னம்மா நீ? கல்கி வந்து தண்ணி கேக்கறா? குடுக்கமாட்டேன்னுட்டியே?'ன்னு சண்டை போட்டானாம்.

**கல்கி:** உண்மை. அந்த கேரக்டர் யாருக்கும் பிடிக்கும்.

**கே.பி:** என் அஸிஸ்டென்ட் ஒருத்தர் கூடக் கேட்டார். 'ஏன் சார், கீதாவோ, பாத்திமா பாபுவோ– ரெண்டு கேரக்டர்ல யாராவது ஒருத்தர் 'கல்கி' எடுக்கற முடிவை ஒத்துக்கறா மாதிரி காட்டலாமே சார்'ன்னாங்க. நான் தீர்மானமா மறுத்துட்டேன். கடைசில கூட பாத்திமா என்ன சொல்றா... 'நீ என்னதான் சொல்லு, நீ செஞ்சதை ஏத்துக்க முடியலை'ன்னு தானே?

**அரசியன்பன்:** அந்த ரேணுகா கேரக்டர், அத்தனை அப்பாவியா இருந்துட்டு சடார்னு பிரகாஷ்ராஜை எதிர்த்துப் பேசறது, டைவர்ஸ் வரைக்கும் போறது தனியா தெரியுதே?

**கே.பி:** நோ! படத்தை சரியா ஃபாலோ பண்ணா புரியும். என்ன பண்றான் அவன்? கல்கி கர்ப்பமாயிருக்கா. நோவெடுத்து, ஆஸ்பத்திரியில சேர்ந்திருக்கா. போன் வருது. பேச மறுக்கறான். எப்படியாவது இந்த விஷயத்துல சிக்காம வெளியிலே இருக்கணும்னு விரும்பறான். இதைப் பார்க்கறபோது எந்தப் பெண்ணுக்குமே இயல்பா கோபம் வருமா? வராதா? அதோடு கூட ரேணுகாவே போயி அவளை ஆஸ்பத்திரியில கவனிச்சுட்டு வரா. அப்பத்தான் முடிவு பண்றா. 'இவன் ஒரு புருஷனா'ன்னு அவருவருப்பு வரும் போது, அவனோட இயல்பான பயம் போய், கேள்வி கேட்கத் தொடங்கறா. இதையும் பெரிய நாடகம் மாதிரி காட்டி பக்கம் பக்கமா வசனம் எழுதி இருக்கலாம் தான்! காரணத்தை நான் சஜஷன்ல சொல்லிட்டுப் போயிட்டதால சரியா ஃபாலோ பண்ணாத்தான் புரியும்.

**சுவாமிநாதன்:** வில்லன் பிரகாஷ்ராஜ் கேரக்டர் ரொம்ப அருமையா வந்திருக்கு சார்.

**கே.பி:** அவன் வில்லனே இல்லை. ஈகோ உள்ள ஆசாமி. அவ்ளோதான்.

**சுவாமிநாதன்:** படம் முழுக்க அராஜகம் பண்ற அந்த கேரக்டர், சட்டுனு ரேணுகா 'டைவர்ஸ்' பண்றேன்னு சொன்னவுடனே மிரள்றானே, ஏன்?

**கே.பி:** கையில எச்சில் துப்பினப்ப பார்த்துட்டுப் பேசாம இருந்த பெண்டாட்டி... இவளே இப்படி அதிரடியா இயங்கறாளே, ஒரு வேளை நாம தவறுகிறோமோன்ற பயம் வராதா பின்னே? அவனும் மனுஷன் தானே? பயத்தாலதான் தடுமாறுகிறான். பயத்தாலதான் திருந்தி வரதாச் சொல்றான். நீங்க சொல்றீங்களே, என் அஸிஸ்டென்ட் ஒருத்தரே கேட்டார். 'என்ன சார், அந்த கேரக்டர் தடால்னு திருந்திடற மாதிரி இருக்கே'ன்னுட்டு! நான் என்ன பண்ணுவேன்? பொதுவா சினிமாக்கள்ல யாராவது திருந்தணும்னா நிறைய நாடகத்தனமான காட்சிகள் வருது. கடைசில துப்பாக்கி வெடிக்குது. இதையெல்லாம் பார்த்துப் பார்த்து இயல்பா ஒரு ஆள் திருந்தறதைக் காட்டறப்ப ஏற்கக் கஷ்டமா இருக்கு! ஆனா நான் அவசரப்பட்டதா தெரியலை. அந்த கேரக்டர் திருந்தப் போதுமான காரணங்கள் படத்துல இருக்கறதாகவே நினைக்கறேன்.

**கல்கி:** ஆரம்பத்துல இது ஒரு 'ம்யூசிக்கல் பிக்சர்'ங்கற மாதிரி ஒரு பிரமை ஏற்படுத்தறீங்க. பின்னணியில ஹரிஹரன் குரல்... கீதாவை ஒரு பாடகியாகக் காட்டறது... பின்னால...

**கே.பி:** பின்னால இது ம்யூசிக்கல் பிக்சர் இல்லைங்கறீங்களா?

**கல்கி:** நிச்சயமா இல்லை! அந்த ஆரம்பக் காட்சிகள்ல ஏற்பட்ட எதிர்பார்ப்பு பின்னால

"ஒவ்வொரு ஊர்லயும் தண்ணீர்த் தொட்டி, குழாயடி இங்கெல்லாம் போலீஸ் பாதுகாப்பு போட்டிருக்காங்களே... எதற்கு?"

"அது வேறொண்ணுமில்லே... பாதுகாக்கப் பட்ட குடிநீர் தருவோம்' என்ற வாக்குறுதியை இந்த அரசாங்கம் நிறைவேற்றுகிறது... அவ்வளவுதான்!"

– சுந்தர் அழகேசன்



மாறிடறதுங்கறதுதான் உண்மை.

**கே.பி:** சரி! உங்க எதிர்பார்ப்புப் படியே நான் படம் எடுத்துட்டிருக்க முடியுமா?

**கல்கி:** ஹரிஹரன் பாடியிருக்கற அந்த டைட்டில் மியூஸிக் ரொம்பப் பிரமாதம்! நடுவுல நடுவுல கீதாவோட குழந்தை ஏக்கத்தைச் சொல்ற இடங்கள்ல அது ரிப்பீட் ஆறது பொருத்தமா இருக்கு.

**கே.பி:** கரெக்ட்! அங்கமட்டுமில்லை. கல்கி–கீதா காம்பினேஷன் சீன்ஸ் சிலதுலயும் அதை ரிபீட் பண்ணியிருப்பேன். காரணம் என்னன்னா அவளை, இவ தன் பெண்ணா நினைக்கறாங்கறதை சொல்லாம சொல்றதுக்காகத்தான்!

**கல்கி:** படத்துல உறுத்தற விஷயம், 'கல்கி'க்கு என்ன பேக்கிரவுண்ட்டுனே தெரியலை. 'அநாதை'ன்னு ஒரு இடத்துல வருது. மற்றபடி அவ யாரு, எப்படி அநாதை, அவ்ளோ தீவிரமா எப்படி மாறினா. எதுவுமே தெரியலை.

**கே.பி:** அவளுக்கு ஒரு சின்ன பேக்கிரவுண்ட் வெச்சிருந்தேன். பல காரணங்களால அதை நீக்கிட்டேன். அதுவே வேற ஒரு கதை! இப்ப சொல்ல விரும்பலை. ஆனா, அவளோட புத்திசாலித்தனம், துணிச்சலான நடவடிக்கைகள் இதுக்கெல்லாம் முன் கூட்டி அவ சந்திச்சிருக்கக் கூடிய மனிதர்கள்– பிரச்னைகள் காரணமாயிருக்கலாம். அதைத் தனி படமா எடுக்கலாம்.

**கல்கி:** 'பேக்கிரவுண்ட்' என்பது ஒரு கேரக்டருக்கு அவசியம்னு நீங்க நினைக்கலியா?

**கே.பி:** வேண்டியது இல்லை. இது விஷுவல் மீடியம். நாவல் இல்லை. நாவலுக்குத்தான், ஒரு கேரக்டர்னா– அதுக்கு அப்பா, அம்மா, தம்பி, பாட்டியெல்லாம் வேணும். சினிமாவுக்கு அவசியம் இல்லை. இப்ப இதையே ஒரு கணவன்– மனைவி கதையா தொடங்கியிருந்தேன்னா, அவங்க எப்படி கணவன், மனைவி ஆனாங்க, ரெண்டு பேரோட பெற்றோர் யார், எந்த ஊர்னு எல்லாம் கேக்க மாட்டீங்க. தனியா, ஒரு சின்னப் பொண்ணுன்னாவே பேக்கிரவுண்ட் எதிர்பார்க்கறீங்க. இந்தக் கதைக்கு அவ ஒரு அனாதைங்கற குறிப்பு தவிர வேற எதுவும் தேவையில்லைன்னு நினைக்கிறேன்.

**கல்கி:** சாதாரண கணவன்– மனைவிக்கும் இதுமாதிரி அசாதாரண பெண் பாத்திரத்துக்கும் வித்தியாசம் இல்லையா? இதன் பின்னணி முக்கியம்னு நினைக்கறது இயல்புதான்!

**கே.பி:** நீங்க சொல்றது புரியறது. ஆனா ரெண்டே கால் மணி நேரப் படத்துல எது முக்கியம், எது முக்கியமில்லைன்னு நான் தானே முடிவு பண்ணணும்? அதிக நீளம் கூடாதுன்னு நினைச்சதாலேயும் சில விஷயங்களைச் சேர்க்க முடியலைங்கறது உண்மை.

**சுவாமிநாதன்:** மத்ததெல்லாம் சரி சார். வேற ஒருத்தனோட குழந்தையைச் சுமந்து பெற்றவளை, அவளைக் காதலிச்ச, அவளுக்காகவே காத்திருந்தவன் கடைசியில ஏத்துக்கறான் அப்படீங்கறது நடைமுறை சாத்தியமாவே இல்லையே? ஏத்துக்க முடியலை சார்.

**கே.பி:** உங்களால ஏத்துக்க முடியலை. ஆனா அவனால முடியுதே! உலகம் மாறிட்டிருக்கு சார். மரபான சில விஷயங்கள் அங்கங்க மீறப்படுது. ஆனா இந்த விஷயத்துல, இது இந்த கேரக்டர் எப்பேர்ப்பட்ட ஜென்ட்டில்மேன்ங்கறதைக் காட்டுது. தான் காதலிச்சவ– அவ எப்படிப்பட்ட காரியம் செஞ்சிருக்கா? இன்னொருத்தனோட வாழ்ந்து, அவன் குழந்தையைச் சுமந்து பெத்திருக்கா. அவ கடைசில தன்னைத் தேடி வரும்போது, அவளை– அவளோட சகல குண இயல்புகள், முரண்பாடுகளோடயும் சேர்த்தே ஏத்துக்கறான்!

**கல்கி:** அதனால தான் அந்த இடத்துல 'கல்கி' கேரக்டரை விடவும் ரகுமான் கேரக்டர் உயர்வா போயிடுது.

**கே.பி:** வாஸ்தவம். எனக்கு என்னன்னா, என் படம் பேசப்படணும். அதனால ஒவ்வொண்ணையும் வித்தியாசமா யோசிச்சு செஞ்சேன்.

**கல்கி:** நிச்சயம் இந்தப் படம் பேசப்படும். ஆனா, வாத-பிரதிவாதங்கள் இருக்கத்தான் செய்யும். அதைத் தவிர்க்க முடியாது.

**கே.பி:** அதுக்கு நான் என்ன செய்ய முடியும்? ஆனா ஒண்ணு மட்டும் சொல்வேன். இந்தப்படம் பற்றி எழுகிற ஒவ்வொரு கேள்விக்கும் படத்துலயே பதிலும் இருக்கு. ஒருதடவைக்கு ரெண்டு தடவையா படம் பார்த்தா, பதில் புரியும்.

**அரசியன்பன்:** நிச்சயம் ரெண்டாவது தடவை பார்க்கத் தூண்டும்படியாத்தான் சார் இருக்கு.

**கே.பி:** தேங்க் யூ.

தொகுப்பு: **பா.ரா.**
படங்கள்: **யோகா**

# தெலுங்குக்குப் போய்விட்ட ரயில்!

‘கிழக்கே போகும் ரயில்’ படத்தில், காமெடியனாக அறிமுகமான கவுண்டமணி, இன்று, ஹீரோ லெவலுக்கு உயர்ந்து விட்டார் என்றால், அதே படத்தில் ஹீரோவாக அறிமுகப்படுத்தப்பட்ட சுதாகர், இப்போது தெலுங்குப் பட உலகில், காமெடி நடிகராய் இருக்கிறார் என்பது என்ன ஒரு கான்ட்ராஸ்ட்!

தமிழில் காணாமல் போய், தெலுங்கில் புகுந்தபின் சுமார் 150 படங்களில் நடித்திருப்பதாகக் கூறும் சுதாகர், “என் ஆசை, லட்சியம் எல்லாம், மறுபடி, தமிழ்ப்படத்தில் ஹீரோவாய் நடித்து விட வேண்டும் என்பதுதான்!” என்கிறார்.

“அது சாத்தியமா சுதாகர்?”

“தமிழ் சினிமாவில் ஒரு கட்டத்தில் வாய்ப்பில்லாமல் போனவர்கள் பலருக்கும் சிறிது இடைவெளிக்குப்பின், தமிழில் மறுபிரவேசம் செய்கிற வாய்ப்பு கிடைத்திருக்கிறதே! எனக்குக் கிடைக்காதா?”

“ஆனால், ஹீரோவாக?”

“தெலுங்கில் நான் காமெடி நடிகராக இருந்தாலும், தமிழில் எனக்கு அந்த பழைய ஹீரோ சுதாகர் இமேஜ்தானே இருக்கிறது? அதனால்தான், இடையில் தமிழ்ப்படங்களில் சிறுவேடங்களில் நடிப்பதற்கு எனக்குக் கிடைத்த ஒருசில வாய்ப்புக்களைக்கூட நான் வேண்டாம் என்று சொல்லி விட்டேன்.”

இடைப்பட்ட காலத்தில், சொந்தமாய் மூன்று படங்கள் தயாரித்து, வெற்றி பெற்றிருக்கிறார். “நான் கதை, கேரக்டர் எல்லாம் கேட்பதில்லை. என்னிடம் ஒரு தயாரிப்பாளர் வந்து, கால்ஷீட் கேட்கிறார் என்றால், என்னால், அந்தப் படத்தில் நடிக்க முடியும் என்ற நம்பிக்கையில்தானே வருகிறார்? அவருக்கே என் மீது நம்பிக்கை இருக்கும்போது, நான் கதை கேட்க வேண்டிய அவசியமில்லை. வீட்டில் சும்மா உட்கார்ந்து கொண்டிருக்காமல், பட வாய்ப்புக்கள் தொடர்ந்து வந்து கொண்டிருந்தாலே போதும் எனக்கு!”

**87**-ல் சுதாகருக்குத் திருமணம் நடந்தது. மனைவி பெயர் ஜெயந்தி. பன்னிரண்டு வருடங்களுக்குப் பின், ஓர் ஆண் குழந்தை. பெனடிக் மைக்கேல் என்று பெயரிட்டிருக் கிறார் குழந்தைக்கு.

அதெப்படி? சுதாகருக்கும், ஜெயந்திக்கும் பெனடிக்?”



“இரண்டு வருடங்களுக்கு முன்பு நான் கிறிஸ்தவ மதத் துக்கு மாறிவிட்டேன்.” சொல் லிக் கொண்டே சுதாகர் பனியனைச் சரி செய்து கொள்ளுகிறார். கழுத்தில் தங்கச் செயினில் சிலுவை மின்னுகிறது.

பாரதிராஜா போட்ட பிள்ளையார்சுழி. இன்று டிராக் மாறி தெலுங்குக்குப் போய் விட்டாலும், “பிஸியான நடிகனாக இருப்பதில் மிகுந்த சந்தோஷம்” என்று நிறைவாகவே சொல்கிறார் சுதாகர்.

“இன்னொரு மகிழ்ச்சியான செய்தி. நான் மறுபடி தமிழுக்கு வருகிறேன் - சின்னத்திரை மூலமாக. ‘உயிர் உன்னுடன்’ என்ற என் டீ.வி சீரியல் விரைவில் சன் டீ.வியில் ஒளிபரப்பாகவிருக்கிறது.”

சந்திப்பு: **மௌலி**

# மறுபடியும் வீரப்பன்!

"சினிமாவுல சம்பாதிக்கிற பணத்தை சினிமாவுலேயே போடாம, வேற எதாவது தொழில்ல முதலீடு பண்ணாத்தான் சினிமாக்காரன் பிழைக்க முடியும்னு பொதுவா கோடம்பாக்கத்துல ஒரு தத்துவம் சொல்லுவாங்க, தெரியுமில்லை?"

காவியத்துக்குப் பாயிரம் மாதிரி தண்டபாணி தொண்டையைச் செருமிக் கொண்டு ஆரம்பித்ததும் நான் தயாரானேன். புதுசாக யாரைப் பற்றிச் சொல்லப் போகிறான்?

"யாராவது நடிகை, ப்யூட்டி-பார்லர் ஆரம்பிச்சிருக்காங்களா தண்டபாணி?" என்றேன், ஒருநடை போய்ப் பார்த்துவிட்டு வருகிற உத்தேசத்துடன்.

"அதுதான் அங்கங்கே நடக்குதே! இது வேற சமாசாரம். வைரமுத்து இருக்காரில்லை..."

"அவர் ப்யூட்டிபார்லர் ஆரம்பிச்சிருக்காரா? பரவாயில்லையே?"

"முழுக்கப் பேசவிடு. ப்யூட்டி பார்லரும் இல்லை; ஒண்ணுமில்லை. கவிஞர், புதுசா ஒரு விளம்பர ஏஜென்ஸி தொடங்கியிருக்கார்."

"அட, ஆச்சர்யமா இருக்கே?"

"இதுல என்ன ஆச்சர்யம்? முற்காலத்துல சில படங்களோட பூஜையையெல்லாம் பொறுப்பேத்துக்கிட்டு நடத்திக் குடுத்திட்டிருந்தார்னு ஒரு நியூஸ் வந்தது இல்லை? அது எத்தனை தூரம் உண்மைன்னு தெரியலை. ஆனா இது நிச்சயம். சொந்தமா ஒரு விளம்பர ஏஜென்ஸி தொடங்கி, பத்திரிகை, டீவி விளம்பரங்கள் தயாரிப்புல இறங்கி யிருக்கார். சமீப காலமா, அவருக்கு ரொம்ப நெருக்கமான ஒரு நகைக்கடைகம் – எண்ணெய் கம்பெனி விளம்பரங்களையெல்லாம் அவரேதான் தயாரிச்சித் தர்றதா நியூஸ்."

"பரவால்லையே? புதிய தொழில் செழிக்க என் வாழ்த்துக்களைச் சொல்லிடு தண்டபாணி."

"சொல்லிடலாம். இதைக் கேளு. எடிட்டர் லெனினை இப்ப கே.டி. குஞ்சுமோன் மனமாற வாழ்த்திட்டு இருக்கார் தெரியுமா?"

"என்ன விஷயம்?"

"பிரம்மாண்டமா விளம்பரம் செய்தும் அவரோட காதல் தேசம் சுமாராத்தானே போயிட்டிருந்திச்சி?"

"ஆமா?"

"இப்ப பிக்-அப் ஆயிடுச்சி. எல்லா தியேட்டர்லேயும், ஆரம்பிச்சி கா...



• பார்த்திபன்

• வைரமுத்து

எழுபத்தஞ்சு நாள் கழிச்சி ஹவுஸ்ஃபுல்லா ஓடிட்டிருக்குன்னா, அதுக்குக் காரணம் லெனின்!"

"எப்படி?"

"படம் போரடிக்குது; பின்பகுதி ரொம்ப ஜவ்வா இருக்குதுன்னு கமெண்ட் வந்தது இல்லை? பார்த்தார் குஞ்சுமோன். பிரிண்ட்டைக் கொண்டு போய் லெனின்கிட்ட குடுத்து, சரிபண்ணிக் குடுங்கன்னு கேட்டிருக்கார். உடனே லெனின், முழுப்படத்தையும் ஒரு ஓட்டு ஓட்டிப் பார்த்துட்டு, அந்த மைல் நீள கிளைமாக்ஸ் சண்டையைப் பேர்பாதியாகக் குறைச்சிட்டு, தபு கஷ்டப்பட்டுப் பேசற தமிழையெல்லாம் வெட்டி காக்காய்க்குப் போட்டுட்டு, புதுசா ரெண்டு பாட்டை நடுவுல இன்ஸெர்ட் பண்ணி, ட்ரிம் பண்ணிக் குடுத்திருக்கார். இப்ப, படம் பிரமாதமா இருக்குன்னு பார்க்கறவங்க சொல்றாங்க."



• வினிதா

"வெயிட்! படத்துக்கு முதல்லேயே எடிட்டிங் லெனின்தானே?"

"அது தேவ ரகசியம். காதோட வெச்சிக்கோ. பொதுவா கமர்ஷியல் படங்கள் நிறைய பண்ண லெனின் ஒத்துக்கறார்தான்னாலும் முக்கியமான சில இடங்கள்லதான் அவர் கைவண்ணம் தெரியும். பெரும்பாலான படங்களை விஜயனும் அவர் அஸிஸ்டென்ட்களும்தான் எடிட் பண்ணுவாங்க. மலையாளப் படங்களை எடிட் பண்ணவே இவருக்கு நேரம் சரியா இருக்குதாம்!"

"அடடா!"

"அடுத்த செய்தி, பார்த்திபன் பத்தி. தெரியுமா? அவர் சொந்தமா ஆரம்பிக்கிறதா சுமார் ஒரு வருஷம் முன்ன சொன்ன 'சோத்துக்கட்சி' இன்னும் தொடங்கினபாடே இல்லை. தற்சமயம் அது இன்னும் கூடத் தள்ளிப் போக வாய்ப்பு இருக்குதுன்னு தெரியுது!"

"நாட்டுல நிறைய கட்சி ஏற்கெனவே இருக்குதேங்கற நல்லெண்ணம் காரணமா இருக்கும் தண்டபாணி."

"நீ வேற! சமீப காலமா பார்த்திபனை வெச்சி, படம் எடுக்கப் புதுசா நிறைய பேர் முன்வந்திருக்காங்கன்றதுதான் காரணம். டாட்டா – பிர்லா ரிலீஸ் ஆச்சு இல்லை? அதைத் தொடர்ந்து 'காங்கேயம் காளை'ன்னு ஒரு படத்துல நடிக்க பார்த்திபன் ஒப்பந்தமாகியிருக்கார்."

"டைரக்ஷன், தயாரிப்பு வேலையெல்லாம் விட இது ஸேஃப்தானே?"

"பின்னே? ஆனா, அவர் கருத்து என்னன்னா, இப்படி வெளியார் படத்துல நடிச்சி, சம்பாதிச்சாத்தானே சொந்தப் படம் எடுத்து பரீட்சை பண்ணிப் பார்க்க முடியும்ங் கறாரு."

"நல்லா இருந்தா சரி."

"இன்னைய தேதிக்குத் தமிழ்ல ஒரு படம் இல்லைன்னாலும் நல்லா இருக்கற நடிகை யார் தெரியுமா? வினிதா!"

"அதென்ன?"

"கேளு. சமீப காலமா வினிதா நடிச்சி வெளிவந்த ஒரு படமாவது பார்த்தியா?"

"இல்லை?"

"அதான்! சுத்தமா இப்ப அவங்களுக்குத் தமிழ்ப் படமே இல்லை! பெரிய குடும்பம்தான் கடைசி!"

"அப்புறம்?"

"அம்மணி இப்ப தெலுங்கு படங்கள்ல பிஸி. தவிர, ஒண்ணு ரெண்டு இந்தி வாய்ப்புக்களும் வந்திருக்கு."

"சே! ஒரு கவர்ச்சிப் புயல் கரை கடந்துடுச்சே தண்டபாணி?"

"ரொம்ப வருத்தப்படாதே! வினிதா நடிச்ச ஒரு சில தெலுங்குப் படங்கள் கூடிய சீக்கிரம் தமிழ்ல 'டப்' ஆகி வரப் போகுதுன்னு தகவல்."

"அப்படிப் போடு."

"இங்க இருக்கற நடிகைகளெல்லாம் ஆந்திரா, மும்பைன்னு போயிட்டு இருக்காங்க, ஒரு பக்கம். அதே சமயம் அந்த

ஊருலேருந்து வர்றவங்களுக்குத்தான் இப்ப இங்க நல்ல டிமாண்ட்! தெரியுமா? கமலஹாசனோட அடுத்த படம் என்ன. யார் டைரக்‌ஷன்ங்கறதெல்லாம் இன்னும் முடிவாகாத சூழ்நிலையில, அடுத்த படத்துக்கு ஹீரோயின் மட்டும் முடிவு பண்ணிட்டாங்களாம்!"

"யாரு?"

"ஷில்பா ஷிரோத்கர்! தெரியுமில்லை? இப்ப மம்முட்டியோட 'அரசியல்' பண்ணிட்டிருக்காங்களே?"

"அப்படியா?" சரி. 'அரசியலே' பாதில நின்னுட்டிருக்கறதா கேள்விப்பட்டேன்?"

"அரசியல்னாலே பிரச்னைதானே கிஷ்டா? ஆனா இந்தப் படத்தைப் பொறுத்தவரைக்கும் பிரச்னை, கால்ஷீட் - கான்ட்ராவர்ஸியினால இல்லை. ஒரு அபாரமான சண்டைக் காட்சியில நடிச்சிட்டிருந்தபோது, மம்முட்டி கீழ விழுந்து பலமான எலும்பு முறிவு. அதனால தான் ஷூட்டிங் பாதியிலே நின்னு போச்சு. இப்ப தேறிட்டு வர்றதாகவும் சீக்கிரம் ஷூட்டிங் தொடங்கி, பொங்கலுக்கும் தமிழ்ப் புத்தாண்டுக்கும் நடுவுல ரிலீஸ் ஆயிடும்னும் கேள்வி."

"சரிதான்."

"இந்தப் படத்துல இன்னொரு விசேஷம் என்னன்னா, தினசரி பேப்பர் பார்த்து, அப்பப்ப நடக்கற அரசியல் மாற்றங்களை, முக்கியமான சமாசாரங்களை லிஸ்ட் எடுத்து, அப்-டு-டேட் செய்திகளை ஸ்கிரிப்ட்டுல ஏத்திட்டு இருக்காங்களாம். கிட்டத்தட்ட இந்தப் படம் ஒரு இயர்புக் ஆஃப் தமிழ்நாடா இருக்கும்னு யூனிட் ஆள் சொன்னான்."



• ஷில்பா ஷிரோத்கர்

"உத்தமம்!"

"இது இப்படி இருக்க, நம்ம சந்தன வீரப்பனை சினிமாக்காரங்க இன்னும் விடறதாத் தெரியலை கிஷ்டா. அவன் இதுக்காகவே சீக்கிரம் சரணடைஞ்சுட்டாத் தேவலைன்னு தோணுது."

"என்ன சமாசாரம்?"

"ஏற்கெனவே வீரப்பன் கதையை செல்வமணி, வேலு பிரபாகரனெல்லாம் ஒரு கை பார்த்துட்டாங்க. இப்ப மறுபடி நெப்போலியன் அந்த சப்ஜெக்ட்டுல இறங்கியிருக்கார். படத்துக்கு 'வீரப்பன்'னே பேரு. பிரமாதமான மீசையெல்லாம் வெச்சிக்கிட்டு, சந்தன மரக்கட்டை மேல அவர் உக்கார்ந்துட்டிருக்கறாப்பல ஒரு போட்டோ போட்டு விளம்பரம் பண்ணியிருந்தாங்களே, பார்க்கலை நீ?"

"பார்க்கலை, சொல்லு?"

"சமீபத்துல இந்தப் படத்துக்கு ஏவிஎம்ல பூஜை நடந்தது. 'ஏன் சார் ஆன்ட்டி ஹீரோ சப்ஜெக்ட்டுங்களா தேடித் தேடிப் பண்றாங்க?'ன்னு வந்திருந்த ஒருத்தன் என்கிட்ட கேட்டான்..."

"உன்கிட்டயா...? சரி, சொல்லு."

"நான் என்னத்தை சொல்றது? ஜனங்க அதைத்தான் விரும்பறாங்கன்னு சம்பந்தப் பட்டவங்களே சொல்லும்போது? தெரியுமா? ரவுடி ஆசைத்தம்பி வாழ்க்கை வரலாறு கூட சினிமாவா வரப் போகுது."

"கஷ்ட காலம்!"

"யாருக்கு? ஜனங்களுக்குத்தானே!"

**- கிச்சா**

• நெப்போலியன்

# பூக்கள் நாளையும் மலரும்

## பிரபஞ்சன்

## 3

விரல் முட்டியால் இரண்டு முறை தட்டிவிட்டுக் காத்திருந்தார் சுந்தா. மூன்றாம் முறை தட்டக் கூடாது என்று விரதம் கொண்டவரைப் போல அமைதியாக இருந்தார். உள்ளே இருந்த கனபரத்துக்கு இடையிலும், கதவு தட்டப்பட்டதைக் கேட்டுவிட்டாள், ஜானு மாமி. கையில் இருந்த துடைப்பத்தைக் கீழே போட்டு விட்டுக் கதவைத் திறந்தாள்.

"வாங்கோ. அனு...வா... எங்க காலனி அசோஸியேஷன் தலைவர் சுந்தா சார் வந்திருக்கார். உள்ளே வாங்கோ, உக்காருங்கோ..."

சுந்தா, வலது காலை எடுத்து வைத்து உள்ளே வந்து அங்கிருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டு, "பரவாயில்லையே... ஜானு மாமியும், மிஸஸ் அர்த்தநாரியும் இல்லாமே, எந்த போர்ஷனும் 'செட்டில்' ஆகாது போலிருக்கே..." என்றார். அனு வந்து "வாங்க" என்றாள். சுந்தா சார், தம்மை அறிமுகம் செய்து கொண்டார்.

"ஏதோ எங்களால ஆன சின்ன ஒத்தாசை" என்றாள் மாமி.

"ஆகா... தெரியுமே. எங்கே, யாருக்கு உதவலாம்னு காத்திருக்கிற மகா மனசு உங்க ரெண்டு பேருக்கும். இதுதானே, கைங்கர்யம். பகவானுக்கு செஞ்சா என்ன, மனுஷாளுக்குச் செஞ்சா என்ன? வாரியார் சாமி சொல்லும். தெருமுனை தபால் பெட்டியிலே போடற தபால், பெரிய போஸ்டாபீசுக்கு வந்து, அப்புறமா, யாருக்குப் போகணுமோ அங்கே போகும். டைரக்டா, பெரிய போஸ்டாபீசிலே போடற தபால், நேரா மனுஷாளுக்குப் போகுமே தவிர, தெருமுனை தபால் பெட்டிக்கு வருமா? வராது. அது மாதிரி, மனுஷாளுக்குச் செய்யறது, பகவானுக்கும் ஆகும். டைரக்டா, பகவத் கைங்கர்யம்னா, அது பகவானுக்கு. மனுஷாளுக்கு ஆகாது. நீங்க ரெண்டு பேரும், மனுஷாள் கைங்கர்யம் பண்ணி, பகவானுக்குப் பிரீதி பண்ணறேள்."

ஜானு மாமிக்கு வெட்கம் மேலிட்டது.

"அற்ப காரியத்தை பெரிசு பண்ணறேங்கோ... போவட்டும். அனு புதுக்கல்யாணப் பொண்ணு. கிராமத்துல இருந்தவ. டவுன் பழக்கம் கிழக்கம் ஒன்றும் தெரியாது. நீங்கதான் அவளுக்கு பால், கேஸ் எல்லாத்துக்கும் ஏற்பாடு பண்ணணும். புருஷன் வெகு சங்கோஜியாம்."

"அதுக்குத்தானே இருக்கேன். சாயரட்சை, பையன் அண்டை பாரம் கொடுத்து அனுப்பறேன். அப்புறம் மிசஸ் அனு.... குப்பைகளை, வெளியே அதுக்குன்னு இருக்கிற தொட்டியிலதான் கொட்டணும். அஸோசியேஷன் மெம்பர் ஷிப் இருபது ரூபா, மெயின்டனஸ் நூறு ரூபாய் கொடுங்க. பில் வரும்."

அனு பணத்தை எண்ணிக் கொடுத்தாள்.

"படி விளக்கு எரியறதோ?"

"இல்லை."

"தெரியுமே. அந்த பணத்தின்னி நாய்ட்ட நாலு நாளா அடிச்சுக்கறேன். ஒரு ஒழுங்கு, டிசிப்ளின், ஹானஸ்டி, ஒரு மண்ணாங்கட்டி, தெருப்புழுதி ஒன்றுமில்லை, அந்தப் பயலுக்கு. இன்னிக்குத் தொலைச்சுத் தலைமுழுகிடறேன்..."

வள்ளி, காப்பித் தம்ளருடன் வந்தது கண்டு, அவர் கோபம் மறைந்தது. தம்ளரைத் தூக்கி வாயில் இட்டுக் கொண்டார்.

"பேஷ், டிகாக்ஷன் காப்பி.... காப்பின்னா, அதை ஒரு பானமா நினைக்கிறா.... ஆனா, மாமி, அது ஒரு யக்ஞம். கொட்டை வாங்கி வறுக்கிறதிலே இருந்து, அறைச்சு, டிகாக்ஷன் போடறது வரைக்கும் ரொம்ப சிரத்தையை வாங்கறது... இப்போல்லாம், இத்தனூண்டு பவுடரைக் கலக்கினா, காப்பி வந்துடுதே... அதெல்லாம் வறட்டி.. எங்க அம்மா காப்பி போடுவா... தெரு மணக்கும்... கண்ணுக்கும் நிறம், நாசிக்கும் மணம், வாய்க்கு மதுரம், தொண்டையிலே இறங்கறச்சே சுகம். அதும் பேருதான் காப்பி. எங்க தேவகி, போடுவா... காப்பி மாதிரி ஒரு பானம்.... பொம்மனாட்டிகள் ஏதோ பிசியா இருக்கேள்... நான் அப்புறமா, சாவகாசமா வர்றேன்... மிஸ்டர் சபேசனையும் பார்க்கணுமே...

பரிச்சயம் பண்ணிக்கிடணும்.... ரொம்ப தேங்க்ஸ்..."

அவர் முதுகு மறைந்ததும், வள்ளி சொன்னாள்.

"பாவம், தேவகி மாமி."

ஜானு மாமி சொன்னாள்.

"இந்த மனுஷன், இப்படி இருக்கார். இவர் மகள், ஒரு கிறிஸ்துவ பையனோட சுத்தறா... தெரிஞ்சா மனுஷன் துடிச்சுப் போவார்... பையன், எவனா இருந்தா என்ன? நல்ல பையனா இருக்கணும். ஜனனிக் குட்டி, பாவம் வெகுளி... அவசரப்படறாளோன்னு தோணுது."

வள்ளி சொன்னாள்.

"நான் கூட அந்தப் பையனைப் பார்த்தேன். மாமி... படிச்சு முடிச்சு, ஒரு வேலையைத் தேடிக்கிட்டு, அப்புறமா இதையெல்லாம் வச்சுக்கலாம்."

"நீ எட்டி நின்னு பார்க்கிறே. ஜனனி, அந்தப் புள்ளியிலே இருக்கிறா... உலகத்துல யார்தான் பாவம் இல்லை? எல்லாரையும் ஏதோ ஒண்ணு பிடிச்சு அலைக்கழிக்கிறது. ஜனனிக்குக் காதல். எனக்கு, உனக்கு, ஏதோ ஒண்ணு– எல்லார் தலைக்கு மேலேயும் ஒரு கத்தி தொங்கறது. எப்போ அறுந்து விழும்? அதுதான் நமக்குத் தெரியாது. இது, நமக்குச் சாபமும் வரமும்..."

**பி**ந்து, 'ஷார்ட் டைப்' நெக்லசைக் கழுத்தில் பூட்டிக் கொண்டிருக்கும்போது, அந்த ஹார்ன் சப்தம் கேட்டது. ஜன்னல் வழியாகப் பார்த்தாள். புல்லட்டில், வத்சன் அமர்ந்திருப்பது தெரிந்தது. புல்லட், லேசாக உறுமிக் கொண்டிருக்கும் சப்தமும் கேட்டது. பிந்து, தனக்குள் சிரித்துக் கொண்டாள். கொஞ்ச காலமாக இந்தப் பையனுக்குத் தன் மேல் ஏற்பட்டிருக்கும் ஈடுபாடு, அவளுக்கும் புரியும் படியாக இருந்தது. சின்னப் பையன். இப்போதான் படிப்பை முடித்து விட்டுப் பணிக்கு வந்தவன். உத்தியோகரீதியில், பிந்துவை விடவும் இரண்டு படி சின்னவன் அவன். 'போகிற வழிதானே மேம்... உங்களை ஏற்றிக் கொண்டு போகிறேனே' என்று தினமும் வருகிறான். சரியாகப் பதினொன்றரைக்கு வந்து, 'மேம், காப்பி சாப்பிடப் போகலாமா' என்கிறான். மதியம் மூன்று மணிக்குச் கடச்சுட போண்டாவும், காப்பியும் 'சீட்'டுக்கே கொண்டு வருகிறான். வேலையில் அதீதமான ஷ்ருட். தனக்கும் அந்தப் பையனுக்கும் பத்து பன்னிரண்டு வயசு வித்தியாசம் இருக்குமா? தாராளமாக இருக்கும். வழிகிறானா? அப்படியும் தெரியவில்லை. இது என்ன சங்கடம்? போகட்டும். பார்ப்போம். வாழ்க்கைக்கு ஒப்புக் கொடுத்தாகி விட்டது. ஊசி வழி நூல் போல் போய்க் கொண்டிருப்போம். அது, எங்கு நிறுத்துகிறதோ, நிறுத்தட்டும்.

கூந்தலை வெட்டிக் கிராப் செய்திருந்ததால், தலைவாருவது சிரமமாக இல்லை. வாரிக் கொண்டாள். கண்ணாடி வளையல்களும்; அதன் ஊடே முத்து வளையங்களும் போட்டுக் கொண்டாள். அலங்காரம் முடிந்தது. சோப் பெட்டி மாதிரி இருந்த டிபன் பாக்சில், ரொட்டியும் ஆம்லட்டும் அடங்கி இருந்தன. எடுத்துப் பையில் போட்டுக் கொண்டாள். மேசை மேல் இருந்த, பாக்குத் தூளை எடுத்து வாயில் போட்டுக் கொண்டாள். கதவை இழுத்துப் பூட்டிக் கொண்டு, படி இறங்கிக் கீழே வந்தாள்.

"குட் மார்னிங் மேம்" என்றான் வத்சன்.

"வெரிகுட் மார்னிங், பாய்" என்றபடி, அவன் தோளை வலது கையால் பற்றிக் கொண்டு, பின்னால் அமர்ந்தாள். சூடிதாரை, பக்குவமாக இழுத்து விட்டுக் கொண்டாள். துப்பட்டா பறக்காமல், பாதுகாத்துக் கொண்டாள்.

"ம்... போ"

புல்லட் சீறிக் கொண்டு ஓடியது...

அனேகமாக, காலனியில் பத்து பேர்களாவது, இந்த ரம்மியமான காலைக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

**கா**லனி வாசல் வரைக்கும் புல்லட் சென்று, திரும்பி மெயின் ரோடுக்குப் போகுமட்டும் அதையே, அவனையே பார்த்துக் கொண்டிருந்தான் 'சி' பிளாக் 12-ம் வீடு நாராயணன். வண்டி மறைந்ததும், அவன்

## ஜாலி போட்டி - 12 முடிவு

**அ**ந்த ஐந்து படங்களை அடையாளம் காண நமது வாசகர்கள் மிகவும் சிரமப்பட்டு விட்டார்கள் போலிருக்கிறது. ஆச்சர்யம்.

1. ஜனாதிபதி மாளிகை வாசல்
2. கேட்-வே–ஆஃப் இந்தியா, மும்பை
3. சாஞ்சி ஸ்தூபி.
4. திருமலை நாயக்கர் மஹால்
5. உதய்பூர் அரண்மனை.

பலரும் உதய்பூர் அரண்மனையை ஜெய்ப்பூர் அரண்மனை என்று எழுதி தவறியிருக்கிறார்கள். அதைச் சரியாகக் குறிப்பிட்ட சிலர், மற்றவற்றில் கோட்டை விட்டு விட்டார்கள்!

வந்திருந்த கூப்பன்களுள் ஒன்றுகூட முழுக்க சரியான விடைகளைக் கொண்டிருக்கவில்லை! ஸாரி! யாருக்கும் இந்த வாரம் பரிசு இல்லை.

– ஆசிரியர்.

மனசுக்குள் ஒரு வெறுமை கவ்வியது. பால் கனியின் கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு நின்றவனைக் கண்டு, தூங்குமூஞ்சி மரத்துக் காக்கை ஒன்று, "என்ன நாராயணன்... வருத்தமா இருக்கா" என்று கரைந்தது. 'சு' என்று அந்தக் காக்கையை விரட்டினான். அது தத்தித் தத்தி, அடுத்த கிளை மேல் போய் அமர்ந்தது.

"தரிசனம் ஆச்சா?"

நாராயணன் திரும்பினான். அவன் மனைவி லட்சுமி, முழுசாக நின்றிருந்தாள். இரவு அணிந்திருந்த 'நைட்டி'யில், கலைந்த கேசங்கள்; வியர்வை முகம், காலை நேர அவசரம் படிந்த சோபை எல்லாவற்றுக்கும் இடையிலும், அவள் பார்க்க அழகாக இருந் தாள். சராசரிக்கும் கொஞ்சம் குள்ளம்.

"என் பிரண்டு கண்ணன் வரதாச் சொல்லி இருந்தான். அதுதான், பார்க்கிறேன்."

"டைம் ஆறது. சீக்கிரம் குளிச்சு ரெடி ஆகுங்க. குழுவுக்கு ஸ்கூல் டைம் ஆச்சு. நாளைக்கும், அவ தரிசனம் தருவா... கவலைப் படாதீங்க..."

நிலைமையைத் தமாஷாக மாற்ற முயற்சித்தான் நாராயணன்.

'நீ வேற... எப்பவும் இந்த பொம்பிளை களுக்கு சந்தேக குணம் மட்டும் மாறாதப்பா."

"போதும். கிலோ கணக்கா வழியுது. அழுக்கு போற மாதிரி குளியுங்க"

அவன் வாயை மூடிக் கொண்டான்.

ஜனனிக்குப் பயம், ஜுர வேகத்தில் ஏறியது. அகலமாகக் கையை விரித்துக் கொண்டு, படுத்துக் கொண்டிருந்த இரட்டைக் கட்டில், அவளை விழுங்கக் காத்திருக்கும் அக்னிக் குழி மாதிரி தெரிந்தது அவளுக்கு.

"மகாபலிபுரம் என்கிறது. இந்த அறை தான்னு நீ சொல்லலையே, ஆல்பர்ட்" என்றாள் ஜனனி.

"தப்பா நினைச்சுக்காதே, ஜனனி. கடற் கரையில காலிகள் தொந்தரவும், போலீஸ் தொந்தரவும் அதிகமாப் போச்சு. நிம்மதியாப் பேசலாம்னுதான் இங்க வந்தது..." என்றவுடன், அவசரமாக, 'என்ன சாப்பிடறே?' என்றான்.

"இட்லி ரெண்டு போதும்."

"இட்லியை மறக்க மாட்டீங்களே. புது இடத்துக்கு வந்திருக்கோம். புதுசா சாப்பிடு வோம்."

அவன் தொலைபேசி மூலமாக, "குழாப் புட்டு கடலை, இரண்டு முட்டை ஆப்பம், தேங்காய்ப் பால், இரண்டு பேருக்கு" என்று ஆர்டர் பண்ணினான்.

ஜனனிக்குச் சிரிப்பு வந்தது.

"குழாப்புட்டும் ஆப்பமும்தான் புதுசா?"

"வீட்டுல எங்க பண்றீங்க? ஆப்பமும், பாயா வும் தின்னு ரொம்ப நாள் ஆச்சு."

"தின்னேன். உன்னை யார் வேண்டாம் கிறது?"

"உன்னை மாதிரி சைவக் கொக்குக்குப் பக்கத்துல, எப்படி...?"

"பெட் கட்டறேன், ஆல்பர்ட்... இன்னும் ஆறு மாசத்துக்குள்ளே, சிக்கன் பிரியாணி பண்றேனா, இல்லையா பார்."

சூழ்நிலை ரம்யமாக மாறியது. ஆல்பர்ட், அவளைச் சோபாவுக்கு அழைத்துச் சென்று, தன் அருகில் அமர்த்திக் கொண்டான்.

"ஒரு சந்தேகம்."

"என்னப்பா?"

"என்ன ஷாம்பு, என்ன சோப் உப யோகிக்கிறே?"

"சீய்"

இந்த 'சீய்' வித்தியாசமான சீய். கோபத்தில் பிறக்கிறது அல்ல. மாறாக, காதலில் பிறப்பது. இன்னும் கொஞ்சம் பேசேன் என்கிற தூண் டில் சீய். எனக்கு இது பிடித்து இருக்கிறது என்கிற அங்கீகாரச் சீய்.

ஆல்பர்ட், அவள் கையைத் தன் கைக்குள் வைத்துக் கொண்டிருந்தான். ஒவ்வொரு விரலாக நீவி விட்டான். ஜனனியின் சுட்டு விரலைக் 'கடிக்கட்டுமா' என்று தன் வாய்க்குக் கொண்டு செல்ல முயன்றான். அவள் தன் கையை விலக்கிக் கொண்டாள். அவளின் பிரிந்து, மிதந்து, பறந்த கூந்தலைத் தன் கழுத் தில் சுற்றிக் கொண்டான். அவள், கிறங்கிப் போய் அமர்ந்திருந்தாள்.

திடுமென, மணி ஒலித்தது. ஆல்பர்ட் கதவைத் திறந்தான். பேரர், உணவைக் கொண்டு வந்து வைத்தார். ஜனனியை அவசர மாகப் பார்த்தார்.



"ஹய்யா, ஜாலி! இன்னும் ஒரு மாசத்துக்கு எங்க வீட்டுக்கு சொந்தக் காரங்க யாரும் வர மாட்டாங்க!"

"எதனால்?"

"என் மனைவி செஞ்ச தீபாவளி பலகாரம் தீர குறைஞ்சது ஒரு மாசமாகுமே!"

– எஸ்.எஸ். பூங்கதிர்



"ஏணி வெச்சாலும் எட்டாத சம்பந்தம்னு சொன்னது சரிதான்!"

-ஜக்கு

"எனி டிரிங்க்ஸ் சார்?"

"தேவைப்பட்டால் போன் செய்யறேன்."

பில்லில் கையெழுத்து வைத்துக் கொண்டு புறப்பட்டார், அவர்.

அவர்கள் சாப்பிட்டார்கள். உணவு சுவையாக இருந்தது. முந்திரிப் பருப்புகளைத் தனியாகப் பொறுக்கி எடுத்து, ஜனனிக்கு ஊட்டி விட்டான் ஆல்பர்ட்.

"காப்பி இப்போ சாப்பிடலாமா, அப்புறமா?"

"அப்புறமா?"

அவர்கள் ஜன்னலுக்கு அருகில் வந்து நின்றார்கள். கடல், கையெட்டும் தூரத்தில் இரைந்தது. நுரைப் பூக்கள், கரையை மோதிக் கரைந்து, மீண்டும் மீண்டும் கடலோடு சங்கமமாவதையே பார்த்துக் கொண்டிருந்தான், ஜனனி. பின்னிருந்து, ஏ.சி. யின் குளிர், முதுகுத் தண்டில் மோதி உறைவதை மனசுக்குள் அவதானித்துக் கொண்டிருந்தாள், அமைதியாக.

ஆல்பர்ட்டின் வலது கை, அவள் இடுப்பைப் பற்றுவதை அவளால் உணர முடிந்தது. ஜனனி அதை விரும்பினாள். அவன் கையைத் தள்ளி விடுவது பாவம் என்று கூட அவள் நினைத்தாள். அவன் வலக்கை, அவளது வலப் பக்கத்து உடம்பில், வளைத்துக் கொண்டிருக்க, அவளே வீணை மாதிரி, மீட்டும் பொருளாக மாறிப் போனாள். அவன் விரல்கள் அவளைச் சுண்டிக் கொண்டு இருந்தன. காதுக்குக் கேட்காத, ஆத்மாவுக்கு மட்டும் கேட்கிற ஸ்வர சப்தம் எழுந்தது.

அவள், கடலைப் பார்த்துக் கொண்டே நின்றிருந்தாள். அவள் முழங்கால்கள், ஸ்மரணை அற்று, துவைத்த துணியாகப் புரண்டன. அவன் அவளை மெதுவாக அணைத்தபடி கட்டிலுக்குக் கொண்டு வந்தான்.

கடலின் இரைச்சல் மட்டும் கேட்டுக் கொண்டே இருந்தது. கடல்... விரிந்து மல்லாக்கப் படுத்திருக்கும் வெள்ளை வேஷ்டி. இல்லை, இல்லை நீல வேஷ்டி. அதன் கரை, அலைகள். ஏதோ ஒரு படகு, கடலை, கடலின் இருதயத்தைக் கிழித்துக் கொண்டு, அடிவானத்துக்குப் போய்க் கொண்டிருந்தது. எதை நோக்கிய பயணம் இது? இது எங்கு கொண்டு போய்ச் சேர்க்கும்? எங்கும் போகாத, இருந்த இடத்திலே நிற்கிற யாத்திரையா? படகின் துடுப்புகள், கடலின் கர்ப்பத்தை துழாவிக் கொண்டு போய்க் கொண்டிருந்தன. எல்லா அலைகளும் கரையை ஒட்டித்தான். அப்புறம், சமதளம்தான்.

எங்கோ ஒரு சிட்டு, கிறீச்சிட்டது. அணில்கள், 'கீகீ' என்று குரூரமாகக் கத்தி, அமைதித் துணியைக் கிழித்தது. அவள் கைகள், கண், மனம் எல்லாம் ஸ்மரணை அற்றுக் கிடப்பதை அவளால் உணர முடிந்தது. 'வேண்டாமே' என்றுதான் சொல்ல நினைத்தாள்.

முடியவில்லை. இயற்கையின் சூட்சமம், எந்த விசையில் தொடங்கி, எங்கு முடியும் என்பதை எவரே அறியக்கூடும்? இந்த இயக்கத்தை இயக்கிய கைகள் எங்கே இருக்கின்றன?

கதவு தடதடவென்று தட்டப்பட்டது. தொலை தூரத்தில் இருந்து, ஜனனியும், ஆல்பர்ட்டும் திரும்பினார்கள். ஜனனி, அவனை நிறுத்தி, தன் ஆடையை ஒழுங்கு செய்து கொண்டாள். அவனும். பிறகு ஆல்பர்ட் போய்க் கதவைத் திறந்தான்.

மேனேஜர் எதிரில் இருந்தார். அவர் பக்கத்தில், போலீஸ்காரர்கள் இருவர் நின்றிருந்தார்கள். இன்ஸ்பெக்டர் மாதிரி தோன்றியவர் முன்வந்து, "மிஸ்டர், நீங்கள் யார்? அந்தப் பெண் யார்?" என்றார்.

பதில் சொல்கிற நிலையில், தயாரிப்பில் அவன் இல்லாமல் இருந்ததுதான் துரதிருஷ்டம்.

(தொடரும்)



ஆப்பிரிக்கா கண்டத்தில், கென்யா நாட்டில் தீபாவளிக்கு அரச விடுமுறை! காரணம் அங்கு குஜராத் மக்கள் அதிக அளவில் பல தொழில்கள் நடத்துகிறார்கள். கணிசமாக வாழ்கிறார்கள்.

— ஈ.டி. விஜயகுமார்

# KALKI SHOPPING PAGE

## மகாபலிபுரத்துக்கு ஒரு விசிட்!

மகாபலிபுரம் என்பது பாதுகாக்கப்பட வேண்டிய உலக மரபுச் சின்னங்கள் அமைந்துள்ள இடங்களில் ஒன்று. அப்படிப்பட்ட உலகளாவிய சுற்றுலாத்தலம் எப்படியிருக்கிறது? 'வெறும் சிவப்பு விளக்குப் பகுதியாக மாறி விட்டது!' — இது அங்குள்ள மக்களே சில நாட்களுக்கு முன்பு தனியார் தொலைக் காட்சியொன்றில் ஆவேசத்தோடும் வேதனையோடும் கூறிய வார்த்தைகள். இன்று



# ஒரு கேவலம் போய் இன்னொரு பயங்கரமா?

நிலைமை மாறியிருக்கிறதா, இல்லை அப்படியேதான் இருக்கிறதா? ஒரு நடை போய்ப் பார்த்தோம்....

"இப்போது நிச்சயமாக அடங்கிப் போயிருக்கிறது. ஆனாலும் முழுமையாக ஒழிந்து போய் விடவில்லை!" என்றார் மாமல்லை மகளிர் சங்கத்தின் தலைவி திருமதி வாசுகி.

"முன்பெல்லாம் குடும்பப் பெண்கள் வீதியில் நடமாடவே முடியாது. ஏனெனில் சுற்றுலா வருகிறவர்களுக்கு, இங்குள்ள எல்லாப் பெண்களுமே 'அப்படிப்பட்ட' பெண்கள் என்கிற எண்ணம்தான் என்பதால், நாங்களெல்லாம் பயந்து பயந்துதான் நடமாட வேண்டியிருந்தது. இந்த நிலையைப் பொறுத்துக் கொள்ள முடியாமல்தான் சில மாதங்களுக்கு முன்பு இங்குள்ள இளைஞர்கள் ஒன்று திரண்டார்கள். பெண்களை வைத்து வியாபாரம் செய்யும் இரண்டு லாட்ஜ்களை வன்முறை யாகத் தாக்கினார்கள். அது சில பத்திரிகைகளில் வெளி வந்தது. அதன் பிறகு தனியார் டெலிவிஷனிலும் வந்து பேட்டியெடுத்தார்கள். பிற்பாடுதான் நிலைமை கொஞ்சம் அடங்கியிருக்கிறது!" என்று சொல்லும் திருமதி வாசுகி, தொடர்ந்து குறைகளைக் கூற ஆரம்பித்தார்.

"இது உலகளாவிய சுற்றுலாத் தலம் என்றுதான் பேர். தினசரி ஆயிரக்கணக்கான சுற்றுலா பயணிகள் வந்து போகிற இடம்தான். இருந்தாலும் இங்கே ஒரு நல்ல மருத்துவமனை கிடையாது. ஆரம்ப சுகாதார நிலையம் மட்டும்தான் இருக்கிறது. அதுவும் நோயாளிகளுக்கு முதலுதவி மட்டும்தான் அளிக்க முடியும். பிரசவம் பார்ப்பதற்கும் இங்கே வசதியில்லை என்பதால் எதுவானாலும் நாங்கள் செங்கல்பட்டுக்குத்தான் செல்ல வேண்டியிருக்கிறது.



• திருமதி வாசுகி





• கடற்கரைக் கோயில், பஞ்சபாண்டவர் ரதங்கள், வெளிநாட்டுப் பயணிக்கு போஸ் கொடுக்கும் உள்ளூர் குழந்தைகள்....



• திருமதி லிண்டா

"6,800 வாக்காளர்கள் இருக்கிற மகாபலிபுரத்தில் மேல் நிலைப்பள்ளியும் கிடையாது. பத்தாவதுக்கு மேல் படிக்க விரும்பும் பெண்களும் சரி, ஆண்களும் சரி, பதினெட்டு கி.மீ. தள்ளியிருக்கிற திருப்போரூருக்குச் சென்றால்தான் ப்ளஸ் ஒன்னில் சேர முடியும் என்கிற அவலம்! ஏற்கெனவே மகாபலிபுரம் பெண்கள் நடமாடப் பயந்து கொண்டிருக்கிற நிலையில், பெண் குழந்தைகளை அவ்வளவு தூரம் படிக்க அனுப்ப முடியுமா? அதனாலேயே இங்குள்ள பெண்கள் படிப்பைத் தொடர முடியாமல் போய் விடுகிறது. சொல்லப் போனால் பத்தாவதுக்கு மேல் படித்த பெண்களே மகாபலிபுரத்தில் இல்லை என்கிற நிலைதான்!" என்கிறார் திருமதி வாசுகி.

இவர் கூறுவதையெல்லாம் அப்படியே கூறி உறுதிப்படுத்துகிறார் திமுகவின் ஒன்றாவது வட்டச் செயலாளரான சந்திரசேகரன். "மகாபலிபுரம் என்பது மகா கேவலபுரம் என்று சொல்லுமளவுக்குத்தான் இருந்தது. இப்போது பரவாயில்லை!" என்றார்.

மகாபலிபுரம் பேரூராட்சியின் தலைவர்

இ. சத்யா (ம.தி.மு.க.)வைச் சந்தித்தபோது, "இங்குள்ள சில லாட்ஜ்களில் நடந்த அந்த அசிங்கத்தை எதிர்த்து இங்குள்ளவர்களெல்லாம் கட்சி பேதமின்றி ஒன்று சேர்ந்து போராடினோம். அதன் பிறகுதான் நிலைமை சீரடைந்திருக்கிறது. இருப்பினும் இப்போது மறுபடியும் மெதுவாக ஆரம்பமாகிக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள். இனிமேல்தான் மறுபடியும் அது பற்றிக் கவனிக்க வேண்டும்!"

"பேரூராட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள நீங்கள் மகாபலிபுரத்துக்கு என்னென்ன வசதிகள் செய்து தரப்போகிறீர்கள்?"

"முதலில் வீட்டுக்கு வீடு குடிநீர்க்குழாய் கனெக்ஷன் தருவதற்கான ஏற்பாடுகளைச் செய்யப் போகிறேன். அதன் பிறகு மகாபலிபுரத்தை பச்சை மரகதத் தோட்டமாக அலங்காரம் செய்கிற வகையில் மரங்களை நடப் போகிறோம். ரோடுகளையெல்லாம் கான்கிரீட் ரோடுகளாக்கி, குப்பை கூளமில்லாத தூய்மையான நகரமாக விளங்குகிற வகையில் இந்நகரை ஆக்கப் போகிறோம்!" என்ற சத்யா, இன்னொரு நிபந்தனையுடன் பேரூ ராட்சித் தலைவர் சொன்ன இரண்டு பயங்கர விஷயங்களை உறுதிப்படுத்தத்தான் செய்தார்கள். "சம்பந்தப்பட்ட சிறுவர்களின் பெற்றோரிடமே இது பற்றிக் கேட்டபோது, 'எங்கள் பையன்களைப் பற்றி உங்களுக்கென்ன கவலை? பேசாமல் உங்கள் வேலைகளைப் பார்த்துக் கொண்டு போங்கள்!' என்று கூறிவிட்டார்கள்!" என்றார்கள்.

மகாபலிபுரம் பகுதியின் காவல்துறை உதவிக் கண்காணிப்பாளர் பி. பரசுராமனைச் சந்தித்துப் பேசியபோது, "முன்பு இங்கே




• மூடிக் கிடக்கும் கட்டணக் கழிப்பகம்....

அதிர்ச்சி தரும விஷயத்தையும் கூறினார்.

"இது சுற்றுலாத் தலமாக இருப்பதால் இப்போது இங்கே போதைப் பொருள்கள் நடமாட்டமும் இருப்பதாகச் சொல்கிறார்கள். அதோடு இங்குள்ள சில சிறுவர்களை வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் ஓரினச் சேர்க்கைக்குப் பயன்படுத்துவதாகவும் உறுதியான தகவல்கள் சொல்கின்றன. இதற்கு சம்பந்தப்பட்ட பெற்றோரும் பணம் கிடைக்கிறது என்பதால் சம்மதத்தோடுதான் அனுப்புகிறார்கள் என்றும் தெரிகிறது. இந்த இரண்டு பயங்கரமான விஷயங்களையும் முளையிலேயே தடுத்தாக வேண்டும்!" என்றார்.

இது குறித்து, கடந்த ஆறு ஆண்டுகளாக மகாபலிபுரத்தில் 'பிருந்தாவன் சமுதாய நலசேவை நிறுவனம்' நடத்தி வரும் ஆங்கிலேயப் பெண்மணியான திருமதி விண்டாவிடம் விசாரித்தபோது, "மகாபலிபுரத்திற்குச் சென்றால் எல்லாமே கிடைக்கும்!" என்று பலரும் சொல்வதுதான் எனக்கும் தெரியும். மற்றபடி வேறெதுவும் எனக்குத் தெரியாது. நானுண்டு எனது சமூக சேவையுண்டு என்றுதான் இருக்கிறேன். கல்வியின் மூலம் ஏழை மக்களை முன்னேற்றுவதற்காகக் கல்வி உதவியையும் மருத்துவ உதவிகளையும் செய்து கொண்டிருக்கிறேன்!" என்றார்.

இருப்பினும் சமூக அக்கறையுள்ள வேறு சிலரை விசாரித்தபோது, தங்களது பெயர் குறிப்பிடப்படக் கூடாதென்ற சில லாட்ஜ்களில் விபசாரம் கொடி கட்டிப் பறந்ததென்பது உண்மைதான். ஆனால் இப்போது இல்லை. நான் பொறுப்பேற்றதும் எல்லாவற்றையும் ஒழித்து விட்டோம்!

"உதாரணத்துக்கு ஒன்று சொல்கிறேன்... ராஜீவ் காந்தி கொலையுண்டபோது, காவல் துறைக் கண்காணிப்பாளராக இருந்த இக்பால் அவர்களும் கொலையுண்டு போனார். அவருக்கு இங்கே ஒரு வீடு இருக்கிறது. திருமதி இக்பால் சென்னையில் இருப்பதால், இங்குள்ள தமது வீட்டைக் குத்தகைக்கு விட்டிருந்தார். அவருக்கு இங்கே என்ன நடக்கிறதென்பதே தெரியாது. இந்த நிலையில் அவரது வீட்டைக் குத்தகைக்கு எடுத்திருந்தவர்கள் விபசாரம்தான் நடத்தினார்கள். இதையறிந்த நான் உடனடியாக திருமதி இக்பாவிடம் பேசி அந்தக் குத்தகையை ரத்து செய்ய வைத்து நடவடிக்கை

எடுத்தேன். சிலர் மேல் குண்டர்கள் தடுப்புச்சட்டத்தில் கூட வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அந்த அளவுக்கு இந்த அசிங்கத்தை ஒழிக்கத் தீவிரமான நடவடிக்கைகள் எடுத்திருக்கிறோம். இப்போதும் தினசரி சென்று திடீர் ரெய்டுகள் செய்கிறோம் என்பதால் இங்கே பெண்களை வைத்து வியாபாரம் செய்வது அறவே இல்லை.

"என்றாலும் இந்தத் தொழிலை நடத்திக் கொண்டிருப்பவர்கள் அவ்வளவு சீக்கிரம் இதை விட்டு விடுவார்கள் என்றும் நான் நம்பவில்லை. எனவே, இந்தத் தொழிலை வேறெங்காவது வைத்து நடத்தலாம். இங்கே வருபவர்கள் 'அப்படிப்பட்ட' இடங்களிலிருந்து பெண்களை அழைத்துக் கொண்டு வந்து தங்கலாம். இதை மனத்தில் கொண்டுதான் அடிக்கடி ரெய்டுகள் செய்து, லாட்ஜ்களில் தங்கியிருக்கும் ஜோடிகளை விசாரிக்கிறோம். இதனால் உண்மையான கணவன் - மனைவி ஜோடிகள் கூட அவமானத்துக்கு உள்ளாகலாம் என்பதால் இப்படிப்பட்ட விசாரணைகளை மிகவும் ஜாக்கிரதையாகத்தான் செய்ய வேண்டியிருக்கிறது. எங்களின் இந்தச் சலுகையில் சில தவறான ஜோடிகளும் தப்பித்துக் கொள்ள வாய்ப்பிருக்கிறது. அந்த வகையில் வேண்டுமானால் சில தவறுகள் நடக்கலாமே தவிர, இங்கேயே பெண்களை வைத்து வியாபாரம் செய்வதென்பதை அறவே ஒழித்து விட்டோம் என்பதை என்னால் உறுதியாகக் கூற முடியும்!" என்றார்.

"இதுபோன்று நீங்கள் நடவடிக்கைகளை எடுக்கிறபோது, அரசியல் குறுக்கீடுகள் இருக்கிறதா?" என்றபோது "இது வரையில் அப்படியொரு குறுக்கீடு ஏதும் இல்லை. அப்படியே இருந்தாலும் நான் கவலைப்பட மாட்டேன். மீறி மீறிப் போனால் என்ன செய்வார்கள்? இடமாற்றம் செய்வார்கள். கவலையில்லை. ஏனெனில் இந்த உத்தியோகத்துக்கு வரும்போதே எங்கு வேண்டு மானாலும் கூடாரத்தைத் தூக்கத் தயாராயிருக்கிற பக்குவத்தோடுதான் வந்திருக்கிறேன்!" என்றார்.

போதைப் பொருள்களின் புழக்கம் மற்றும் ஓரினச் சேர்க்கைக்காகச் சிறுவர்களைப் பயன்படுத்துகிற பயங்கரம் பற்றிக் கேட்டபோது, "இந்த விஷயங்களை உங்கள் மூலமாகத்தான் முதலில் கேள்விப்படுகிறேன். நிச்சயம் இது குறித்தும் விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன்!" என்றார் டி.எஸ்.பி. பரசுராமன்.



• சத்யா



• சந்திரசேகரன்

மகாபலிபுரத்துக்குப் பல்வேறு ஜோலிகளை மனத்தில் கொண்டு போகிறவர்களை விட்டு விடுவோம். நிஜமாகவே பல்லவர் காலத்துக் கலை நுணுக்கத்தின் பிரம்மாண்டங்களை மட்டுமே ரசிக்கச் செல்பவர்களுக்கு என்னென்ன வசதிகளைச் செய்து கொடுத்திருக்கிறது நமது சுற்றுலாத்துறை?

சென்னையிலிருந்து பஸ் பிடித்துப் போகிற சுற்றுலாப் பயணிகள் நொந்து போகிற அளவுக்குத்தான் பஸ் வசதி கள். ஓடுகிற எம்.ஜி.ஆர். போக்குவரத் துக் கழக பஸ்கள் அனைத்துமே ஓட்டை உடைசல்கள். ரோடும் சரி யில்லை என்கிற நிலையில், உள்நாட்டுக்காரர்களே கடுப்பாகி விடுவார்கள் என்கிற நிலையில் வெளிநாட்டுப் பயணிகள் பற்றிக் கேட்கவே வேண்டாம்!



• டி.எஸ்.பி. பி. பரசுராமன்

பஞ்ச பாண்டவர் ரதங்கள் இருக்கிற இடத்தில் கட்டணக் கழிப்பகம் ஒன்று, பலகாலமாகவே மூடிக்கிடக்கிற நிலை. நம்மைப் போன்ற திறந்தவெளி விஷயமெல்லாம் வெளிநாட்டுக் காரர்களுக்குப் பழக்கமில்லாததால் தவித்துப் போகிறார்கள் அவர்கள்.

அப்புறம் சங்குமாலை, சிப்பி மாலை என்று வெளிநாட்டுக்காரர்களை உள்ளூர்க்காரர்கள் ஏமாற்றுகிற விஷயம். சிறு சிறு சங்குகளை வெளி நாட்டுக்காரர்களிடம் விற்பனை செய்வதற்காக 'ரீல்' விட்டு அசத்திக் கொண்டிருந்த ஒரு சிறுவனிடம், "இது என்னப்பா விலை?" என்றோம்.

"பத்து ரூபாய்!" என்றான் அவன்.

"பத்து ரூபாய் என்பது வெளிநாட்டுக்காரர்களுக்கு நீ சொல்கிற விலையப்பா. எங்களுக்கு என்ன விலை?" என்றோம் தமாஷாக.

"உங்களுக்குத்தான் சார் பத்து ரூபாய். வெளிநாட்டுக் காரர்களுக்கு ஐம்பது ரூபாய்!" என்றான் சீரியஸாக.

— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்

படங்கள் : பேஜர் கே. மூர்த்தி.



• கேசரி

கட்சித் தலைவர் நாயக்கர். முதலாமவருக்கு, உ.பி.யில் பகுஜன் கட்சியைப் பதவியில் அமர்த்த காங்கிரஸ் ஐக்கிய முன்னணியிடம் கெடுபிடி செய்யவில்லை என்ற எரிச்சலாம். நாயக்கருக்கோ, இப்படியே ஐக்கிய முன்னணிக்கு ஆதரவு தொடர்ந்து கொடுத்து வந்தால் கர்நாடகத்தில் காங்கிரசே இருக்காது என்று ஆத்திரம்!

# காத்திருக்கிறார் கேசரி!

சீக்ராமும் காப்டன் சதீஷ் சர்மாவும் இன்னமும் காங்கிரஸ் கட்சியில்தான் இருக்கிறார்கள். அவர்களைக் கட்சியிலிருந்து விலக்கிவிடுவோம் என்று முன்னால் சொன்னது இன்னும் செயல்படுத்தப்படவில்லை. 'கட்சித் தலைவரின் அனுமதியுடன் யார் வேண்டுமானாலும், காரிய கமிட்டியில் இந்த விஷயத்தைக் கிளப்பி, விவாதிக்கலாம்!' என்று சொல்லிவிட்டார் செயலர்களில் ஒருவரான குலாம் நபி ஆஸாத்! யார் கிளப்புவார்கள்? பூனைக்கு மணி கட்டுகிற கதைதான்!

● ஐக்கிய முன்னணிக்குக் கொடுத்து வரும் ஆதரவை காங்கிரஸ் கட்சி விலக்கிக் கொள்ள வேண்டும் என்று இப்போது தீவிரமாய்ச் சொல்லி வருகிறவர்கள் இரண்டு பேர். ஒருவர் உத்தரப் பிரதேச காங்கிரஸ் கட்சித் தலைவர் ஜிதேந்திர பிரசாத்; இன்னொருவர் கர்நாடக காங்கிரஸ்

● கட்சித் தலைவர் பதவியைத் தாமாகவே ராஜினாமா செய்த மாதிரி, நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சித் தலைமைப் பதவியையும் நரசிம்ம ராவ் தாமாகவே முன் வந்து ராஜினாமா செய்வார் என்று காத்திருக்கிறார் கேசரி. ராவ் காதுபட இரண்டு முறை சொல்லியும் விட்டாராம். ஆனால் ராவ் இன்னும் அசையவில்லை!

● பிரதமர் தேவேகௌடாவுக்கு கேரளப் பத்திரிகையாளர்களைத்தான் மிகவும் பிடித்திருக்கிறதாம். 'கேரளாவுக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?' என்று அவர்கள் அக்கறையுடன் கேட்கிறார்கள். 'கர்நாடகப் பத்திரிகையாளர்கள் ரொம்ப மோசம். தில்லியில் என்ன நடக்கிறது?' என்று கேட்கிறார்கள். வம்புக்கு அலைகிறவர்கள் என்று கோபமாய் வெடித்திருக்கிறார் தேவேகௌடா!

---

''உங்களைப் பற்றிய ஆவணங்கள் ஏகப்பட்டது கிடைச்சிருக்கு. அப்படியும் நீங்க எப்படி சிரிச்ச முகத்தோட இருக்கீங்க?''

''சோதனை போட்ட அதிகாரிகளுக்குத் தெரிஞ்சது இவ்வளவுதானான்னு நினைக்கும்போது ஏன் சிரிப்பு வராது?''

— வி.ரேவதி

● தபால்-தந்தி-தொலைபேசித் துறை அமைச்சர் பேனி பிரசாத் வர்மாவுக்கும், அவரது கட்சித் தலைவர் முலாயம் சிங் யாதவுக்கும் 'காய்'. சமீபத்திய உ.பி. சட்டசபைத் தேர்தலில் வர்மாவின் மகன் சமாஜ்வாதி கட்சியில் போட்டியிட்டுத் தோற்றார் முலாயம் சிங் யாதவ் அவருக்காகப் பிரசாரம் செய்யாததுதான் தோல்விக்குக் காரணம் என்று சொல்கிறார். ஆனால் யாதவின் ஆதரவாளர்களோ, யாதவின் படத்தை

• தேவேகௌடா



போஸ்டர்களில் போடாததுதான் காரணம் என்று திருப்பிக் குற்றம் சாட்டுகிறார்கள்.

● முன்னாள் வெளியுறவுத் துறை அமைச்சர் தினேஷ் சிங் மறைவுக்குப் பின்னும் அவர் குடும்பம் அவர் பதவி வகித்த போது வாழ்ந்த பங்களாவிலேயே தங்கியிருக்க விரும்பியது. ஆனால் தினேஷ்சிங்கின் மகள் ரத்னா சிங், காங்கிரஸ் எம்.பி.யாகத் தேர்ந்து எடுக்கப்பட்ட பிறகு அவருக்கு ஒரு ஃப்ளாட்தான் ஒதுக்கப்பட்டது. அதனால் வேண்டா வெறுப்பாக முன்பிருந்த பங்களாவை காலி செய்தார் ரத்னா சிங் ஆனால் கூடவே, பங்களாவிலிருந்த விலையுயர்ந்த மின்சார விளக்குகள், வாஷ்பேஸின் பைப்புகள் எல்லாவற்றையும் கழற்றிக் கொண்டு போய்விட்டாராம்! ராஜ குடும்பத்துப் பெண்ணே இப்படி என்றால், மற்றவர்களைப் பற்றி என்ன சொல்ல?

● சதீஷ் சர்மாவுக்குக் கோடிக் கணக்காய்ப் பணம் கொடுத்த தொழிலதிபர்களின் சிறிய பட்டியல்தான் இப்போது வெளியாகி இருக்கிறதாம். இரண்டாவது பட்டியலில் இன்னும் பத்தொன்பது தொழிலதிபர்களின் பெயர்கள் இருக்கிறது என்கிறார்கள்!

• சதீஷ்சர்மா





• சுக்ராம்



● மார்க்ஸீய கம்யூனிஸ்ட் கட்சி எத்தனைதான் ஐக்கிய முன்னணியின் செயல்பாடுகளை வெளியிலிருந்தபடி சாடி வந்தாலும், பிரச்னைகள் என்று வந்தால், அவற்றைத் தீர்த்து வைக்க பிரதமர் நாடுவது மார்க்ஸீய கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரான ஹர்கிஷன் சிங் சுர்ஜீத்தைத்தானாம்!

— நியூஸ்வாலா




''சார், அழகிப் போட்டிக்கு ஃப்ரீ பாஸ் கொடுத்தா போராட்டத்தை நிறுத்திடறாங் களாம்....''




''மன்னிக்கணும். தடுப்பு முறைகளைப் பத்திச் சொல்லக்கூடிய டாக்டர் லீவுல இருக்காரு.... அவருக்கு டிங்கு ஜுரம்...''

# ஆஹ்ஹாஹ்ஹா...




''இனிமே எங்க விளம்பரங்களெல்லாம் நியூஸ்ல கோர்ட் சீன் காட்டறதுக்கு முன்னால வரணும்....''




''ரயிலையெல்லாம் காலம் தவறாம ஓட வைக்க முயற்சி பண்றீங்களாம்... ரயில்வே பாரம்பரியத்தை மீறினதுக்காக உங்க பேர்ல குற்றப் பத்திரிகை தாக்கலாகியிருக்கு.''

இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

**HMV பெருமையுடன் வழங்கும்**

**S. ஜானகி & S.P. பாலசுப்பிரமணியம்**



**முதன் முறையாக**
**இணைந்து பாடிய**





# வெற்றிவேல் சிவசக்திவேல்

(முருகன் பக்தி பாடல்கள்)

இசை : V. ரமேஷ்

அனைத்து கேசட் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.




Century - 96

